# ஆதிசைவம்

முனைவர் ப.ராஜசேகர்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF THAMIL STUDIES

# ஆதிசைவம்

முனைவர் பா.இராஜசேகர்








உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

கலாநிலையம் டிஎன். சேசாசலம் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : திரு. பரணிதரன் அவர்கள்)

வரிசை எண் : 10 நாள்: 20.2.2013

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | ஆதி சைவம் |
| ஆசிரியர் | : | முனைவர் பா. இராஜசேகர்<br>கௌரவ விரிவுரையாளர்<br>மாநிலக் கல்லூரி<br>சென்னை-600 005 |
| பொதுப்பதிப்பாசிரியர்: | | முனைவர் ஆ. மணவழகன்<br>இணைப் பேராசிரியர்<br>சமூகவியல், கலை (ம) பண்பாட்டுப் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலை பேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 747 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2012 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டிஎன்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | x+ 142 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 70/- (ரூபாய் எழுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>144, தம்பு செட்டித் தெரு<br>சென்னை-600 001<br>தொ.பேசி. 044-25356166 |
| பாடம் | : | பக்தி இலக்கியம் |




அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் கோ. விசயராகவன், எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

தமிழ், சமயங்களை வளர்த்திருக்கிறது; சமயங்கள் தமிழை வளர்த்திருக்கின்றன. பழந்தமிழகம் சமயச் சார்பற்றது என்றாலும், அவர்களுக்குக் கடவுள் கொள்கை இருந்தது என்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தமிழ், தமிழர் சமயத்தை மட்டும் வளர்க்கவில்லை; அது வடவர் சமயத்தையும் சேர்த்தே வளர்த்தது என்பதே வரலாறு.

பண்டைத் தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தில் 'மதம்' என்னும் சொல்லோ, 'சமயம்' என்னும் சொல்லோ எவ்விடத்தும் காணப்படவில்லை. இதுகொண்டு பழந்தமிழகம் மதங்களுக்கு அப்பாற்பட்டதாக, சமயச் சார்பற்றதாக விளங்கியது தெரிகிறது. 'வடநாட்டுப் பார்ப்பனரைத் தொடர்ந்து இத்தமிழ்நாடு வந்து நிலைபெற்ற பௌத்தர் சமணர்களாலேதாம் இங்கே பல்வேறு மதங்களும் தம் வழக்குகளும் கிளைக்கலாயினவென்று அறிதல் வேண்டும்' என்கிறார் மறைமலையடிகள். மேலும், சமயம், மதம் என்ற பெயரும் அப்பெயரால் குறிக்கப்படும் கொள்கைகளும் இல்லாமல், எல்லாம் ஒரே கொள்கையினராய் அமைதியாய் எல்லாம் வல்ல ஒரு முழுமுதற் கடவுளை வணங்கிக்கொண்டு இனிதுயிர் வாழ்ந்த தமிழ் மக்களிடையே, வடக்கிருந்து வந்து நிலைபெற்ற பௌத்த சமண சமயத்தவராலும் அவர்க்குப் பின்வந்த குழுவினராலுமே பல்வேறு மதங்களும் மதப் போர்களும் இந்நாட்டின்கண் மேன்மேற் கிளைத்து வரலாயின என்றும் சுட்டுகிறார். தொல் தமிழர் அனைவரும் ஒரே முழுமுதற் கடவுளை வணங்கினர் என்ற அடிகளாரின் கருத்து ஆய்விற்கு உட்பட்டது என்றாலும் சமயப்பூசல்கள் குறித்த அவரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

அவ்வகையில், வடவர்களின் வருகைக்கு முற்பட்ட பழந்தமிழகத்தில் தமிழர்களின் ஒரு தொழிற் பிரிவினரான அந்தணர்களைப் பற்றி, அவர்களின் தொல்குடிச் சிறப்பைப் பற்றி, அவர்கள் பழந்தமிழர்களே என்பது பற்றி, வடநாட்டு அந்தணர்களுக்கும் தமிழ் தொல்குடி அந்தணர்களுக்கும் வேறுபாடு உண்டு என்பது பற்றி பேசுகிறது இந்நூல். 'வந்தாரை வாழவைத்த தமிழன்; வடமொழியை வாழ வைத்த தமிழ்' என்ற உண்மையின் அடிப்படையிலே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இதற்கான சான்றுகள் தொல்காப்பியம் தொடங்கி, சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், வடமொழி

நூல்கள், வேதாகமங்கள் எனப் பரந்துபட்ட நிலையில் கொடுக்கப் பட்டுள்ளன. கள ஆய்வுகளும் நேர்முகங்களும் ஆசிரியர் கருத்துக்கும் நூலாய்விற்கும் துணை செய்கின்றன.

நூலாசிரியர் பா.இராஜசேகர், கோயில் அர்ச்சகர் என்பதோடு, சமசுகிருத மொழி பயிற்சியும், தமிழறிவும் ஒருங்கே பெற்றவராக இருப்பது சிறப்பு. தான் எடுத்துக்கொண்ட பொருண்மை ஆழமானது என்றாலும் அதில் உண்மையைத் தேட முனைந்திருக்கும் இவரின் உழைப்பு பாராட்டத்தக்கது. இவர் ஆய்வு மேலும் வளம்பெற வாழ்த்துகள்.

கலாநிலையம் டி.என்.சேசாசலம் அறக்கட்டளையின் பத்தாவது பொழிவாக இந்நூல் வெளிவருகிறது. எழுத்துருவைச் செப்பம் செய்து, நூலாக்கம் செய்த அறக்கட்டளை பொறுப்பாளரும், சமூகவியல், கலை (ம) பண்பாட்டுப் புலத்தின் இணைப் பேராசிரியருமான முனைவர் ஆ.மணவழகன் அவர்களுக்கு எனது பாராட்டுகள்.

**தமிழும், தமிழ்நாடும் வாழ்ந்திட, அல்லும் பகலும் அயராது உழைத்து வரும் தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் மாண்புமிகு பள்ளிக் கல்வி மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் **அமைச்சர் கே.சி.வீரமணி** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி- பண்பாடு மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் **மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்

ஒளியச்சு கோர்வை செய்த இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா அவர்களுக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சரவணா அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

இயக்குநர்

# முன்னுரை

தாய் தந்தையை வணங்கி வழிபடு தெய்வம் நின்றுபுறங்காப்பப் பழி தீர் செல்வமொடு வழி வழி சிறக்க ஆலயம் விரவிய அருமறையாகமம் அருந்தமிழ் பொருள்படும் வடமொழி சொல் என நிறுவ செம்மொழி இலக்கியம் இருகத் தழுவி வடபுலம் தன்னை விளக்கி காட்டிய உரை அவிழ் நூலே "ஆதி சைவம்"

தமிழின் பெருமை கருதியும் என் அறிவின் சிறுமை கருதியும் தவறுகளைச் செம்மைபடுத்தும்படி வேண்டி 11 தலைப்புகளில் என் கருத்துகளைக் கூறியிருக்கிறேன். 1. இது என் மொழி என்பது என்னுடைய கருத்து மட்டுமே 2. வடமொழியில் ஆதிசைவ சமயக் கொள்கை 3. வடமொழியில் ஆதிசைவனின் அறக்கொள்கை என்ற தலைப்புகள் முழுவதும் வடமொழி சார்ந்தும், சைவசித்தாந்த கருத்துகளும் சேர்த்து விளக்கப்பட்டுள்ளன. 4. தென் தமிழில் அந்தணன் 5. தண்டமிழ் செவ்விலக்கியத்தில் அந்தணன் என்ற தலைப்புகள் முழுவதும் தமிழ் பகுதி சார்ந்து வழங்கப்படுகின்றன. 6. வடமொழி சார்ந்த ஆரியமும் ஆசிரியர் கருத்தும் 7. செவ்விலக்கியமும் சிவாகமும் 8. வட வேதியர்களும் சிவ வேதியர்களும் என்ற தலைப்புகள் முழுவதும் ஒப்பாய்வு முறையில் விளக்கப்பட்டுள்ளன. 9. தென் தமிழ் வடமொழியானது எப்போது என்ற தலைப்பு முழுவதும் ஆசிரியரின் கருதுகோளே. ஆரிய திராவிட ஆதிசைவம் என்பது ஆதிசைவத்தின் அடிப்படை நூலான ஆகம நூல்களின் விவரம், சித்தாந்த நூல்களின் விவரம் ஆகியவற்றில் என்ன கூறப்பட்டிருக்கிறது என்ற நூல்குறிப்பைப் போன்ற சிறிய பகுதி. 11. தமிழகமும், தமிழும் ஆதிசைவமும் என்ற தலைப்பில் ஆதிசைவர்கள் தமிழகத்தில் இருந்ததற்கான சான்றும், அவர்களின் அப்போதைய நிலையும் குறிப்பிடப்படுகிறது. 9,10,11 ஆகிய தலைப்புகள் கருத்தரங்கில் ஆதிசைவம் என்ற தலைப்பில் ஆதாரம் காட்டி கருதுகோளை நிறுவ பயன்படுத்தப்பட்டவையாகும் 12. தொகுத்ததும் வகுத்ததும் என்ற தலைப்பில் ஆசிரியர் உணர்த்த விரும்பும் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

இந்தப் படைப்பில் எனக்குதவியவர்களின் பட்டியல் நீலுமெனினும் சிலரை மட்டுமாவது கூற விழைகிறேன். என்னை

ஆசிரியராக்கிய திரு. ஸ்ரீதர், இ.ஆ.ப., அரசுச் செயலர், வருவாய் துறை, என் வடமொழி ஆசான் முனைவர் இரகுராமன், முன்னாள் முதல்வர் மாநிலக் கல்லூரி, தென்மொழி ஆசான் முனைவர் அர்த்தநாரீஸ்வரன், தமிழ் வளர்ச்சிக் கழகம் ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றி.

என்னை ஊக்குவித்து இந்நூலை உருவாக்க எனக்கு ஆசிபுரிந்த தமிழ் வளர்ச்சி, செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆற்றுவதற்கும் நூலாக்கத்திற்கும் வாய்ப்பளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கு எனது நன்றி.

இந்நூல் உருவாக்கத்திற்கு அனைத்து உதவிகளையும் வழங்கிய இந்நிறுவன சமூகவியல், கலை (ம) பண்பாட்டுப் புலத்தின் இணைப்பேராசிரியரும் இவ்வறக்கட்டளையின் பொறுப்பாளருமான முனைவர் ஆ.மணவழகன் அவர்களுக்கு எனது நன்றி. திரு. மு. தர்மன், சார்புச் செயலாளர், தலைமைச் செயலகம், திரு. ஆர். முத்துவேல், பதிவாளர், மத்திய செம்மொழி நிறுவனம், திரு. ஆர். சபாநாயகம், முதல்வர், மாநிலக் கல்லூரி, சென்னை, திருமதி ஏ.கே. சந்தரா, துறைத்தலைவர், வடமொழித் துறை, திரு. ஓ.ஆர். தேவநாதன், வடமொழித் துறை, சென்னை மாநிலக் கல்லூரி மற்றும் நேர்காணலில் மிகவும் உதவிய மீனாம்பிகா சமேத ராஜசேகர ஸ்வாமி தேவஸ்தானம், சிவகாமா பக்தஜனா டிரஸ்ட் உறுப்பினர் திருவடி சேவை மா. ரமேஷ் மற்றும் திருமதி ஜீவா பாஸ்கரன், தமிழாசிரியை, மார்னிங் ஸ்டார் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி, திரு ரமேஷ், மேலாளர், திரு. பி.என். வெங்கட்ராம ரெட்டி, நிர்வாக இயக்குநர், மறைந்த திரு.நாகிரெட்டி, நிறுவனர், மறைந்த திரு.நஞ்சுண்டய்யா, விஜயா மருத்துவமனை, திரு. ப.சிங்காரவேலன், திருமதி பா. சுப்புலட்சுமி தண்டபாணி, பா. விமலா, நா. பாலுகுருக்கள் ஆகியோருக்கும் என்மனமார்ந்த நன்றி.

பா. இராஜசேகர்

# ஆசிரியர் குறிப்பு



முனைவர் பா. இராஜசேகர் அவர்கள், வடபழனி ஆண்டவர் ஆலயத்தில் பணிபுரியும் திரு.நா.பாலு குருக்கள்-விமலா ஆகியோருக்கு (25.06.1969) மூத்த மகனாவார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் வடமொழியில் இளங்கலை, முதுகலை, ஆய்வியல் நிறைஞர், முனைவர் ஆகியவற்றைப் பயின்று, பட்டங்களையும். இயந்திர வரைபடவாளர் தொழிற்கல்வியும் பயின்றவர். மேலும், ஆலய பணி செய்வதால், ஐந்தாண்டு சிவாகமப் பயிற்சியும், ஏழாண்டு வேத முறையில் சடங்குகள் செய்யும் பயிற்சியும் ஆரிய முறை வேதாகமப் பாடசாலைகளுள் பயின்று தேறியவர்.

தமிழ்த்துறையில், தஞ்சைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் புலவர், திறந்த நிலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் இலக்கியம் இளங்கலை, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். வடபழனி விஜயா மருத்துவமனையில் அமைந்துள்ள விநாயகர் கோவிலிலும், கோவூரில் அமைந்துள்ள மீனாம்பிகா சமேத ராஜசேகர சுவாமி கோவிலிலும் அர்ச்சகராக பணிபுரிவதோடு சென்னை மாநிலக் கல்லூரியின் வடமொழித் துறையில் கௌரவ விரிவுரையாளராகவும் பணியாற்றி வருகிறார்.

வடமொழியில், ''சர்வரோக நிவாரணி'' (சென்னைப் பல்கலைக்கழக சித்தாந்தத் துறை வெளியீடு), தென் தமிழில், ''அந்தாதியில் ஆகமம்'' (சிவகாமா பக்தஜனாநா ட்ரஸ்ட் வெளியீடு) ஆகிய இரண்டும் இவரது நூல்களாகும்.

# பொருளடக்கம்

பக்கம்

# சுருக்கக் குறியீடு

| | | | |
|---|---|---|---|
| 1. | அக. | - | அகநானூறு |
| 2. | அ. | - | அரங்கேற்றுக் காதை |
| 3. | அ.அ. | - | அபிராமி அந்தாதி |
| 4. | ஆ. | - | ஆசாரக்கோவை |
| 5. | ஆத். | - | ஆத்மார்த்த பூஜை |
| 6. | ஆ.ஆ. | - | ஆலயங்களும் ஆகமங்களும் |
| 7. | இ. | - | இந்திரவிழா வூரெடுத்த காதை |
| 8. | இ.இ. | - | இருபா இருபது |
| 9. | இன்னா. | - | இன்னா நாற்பது |
| 10. | இனி. | - | இனியவை நாற்பது |
| 11. | உத். | - | உத்ரகாமிகாகமம் |
| 12. | உப. | - | உபநிஷத்சாரம் |
| 13. | ஏ. | - | ஏலாதி |
| 14. | ஐ.நூ. | - | ஐங்குறு நூறு |
| 15. | ஐ.எ. | - | ஐந்திணை எழுபது |
| 16. | ஐ. | - | ஐந்திணை ஐம்பது |
| 17. | கட. | - | கடலாடு காதை |
| 18. | க. | - | கனாத்திறமுறைத்த காதை |
| 19. | கந்த. | - | கந்த புராணம் |
| 20. | கந். | - | கந்திற்பாவை வறுவதுரைத்த காதை |
| 21. | கம். | - | கம்பராமாயணம் |
| 22. | கலி. | - | கலித்தொகை |
| 23. | கள. | - | களவழி நாற்பது |
| 24. | கா. | - | காப்பு |
| 25. | கார். | - | கார்நாற்பது |
| 26. | காசி. | - | காசிய சில்ப சாஸ்திரம் |
| 27. | காமி. | - | காமி காகமம் |
| 28. | குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| 29. | குறள். | - | திருக்குறள் |
| 30. | கை. | - | கைந்நிலை |
| 31. | கைப் | - | கைப்பிரதி |
| 32. | ச.க. | - | சகலாகம சங்கரகம் |
| 33. | ச. | - | சக்கரவாளக் கோட்ட முறைத்த காதை |
| 34. | சிற். | - | சிற்பசெந்நூல் |
| 35. | சி.மூ. | - | சிறுபஞ்சமூலம் |
| 36. | சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| 37. | சிவ. | - | சிவப்பிரகாசம் |
| 38. | சில. | - | சிலப்பதிகாரம் |
| 39. | சி.போ. | - | சிவஞானபோதம் |
| 40. | சி. | - | சிறைசெய்தகாதை |
| 41. | சுப. | - | சுபக்கம் |
| 42. | ஞா. | - | ஞானாவர்ண விளக்கம் |
| 43. | தி. | - | திருவாசகம் |

| | | | |
|---|---|---|---|
| 44. | தி.ம. | - | திருமந்திரம் |
| 45. | தி.மு. | - | திருமுருகாற்றுப்படை |
| 46. | தி.க. | - | திருக்களிற்றுப்பாடியார் |
| 47. | தி.ப. | - | திருவருட்பயன் |
| 48. | திரி. | - | திரிகடுகம் |
| 49. | திவா. | - | திவாகரம் |
| 50. | தி.மா. | - | திணைமாலை நூற்றைம்பது |
| 51. | தி.மொ. | - | திணைமொழி ஐம்பது |
| 52. | தொ. | - | தொல்காப்பியம் |
| 53. | தை. | - | தைத்ரீய மந்த்ர கோசம் |
| 54. | ப. | - | பக்கம் |
| 55. | பக். | - | பக்கங்கள் |
| 56. | பட். | - | பட்டினப்பாலை |
| 57. | ப.ப. | - | பதிற்றுப்பத்து |
| 58. | பதி. | - | பதினெண்கீழ்க்கணக்கு |
| 59. | பழ. | - | பழமொழி நானூறு |
| 60. | ப.ரா. | - | பரார்த்த யஜந ப்ரகாசிகா |
| 61. | பரி. | - | பரிபாடல் |
| 62. | பா. | - | பாடல் |
| 63. | பாணி. | - | பாணினியதாதுபாடம் |
| 64. | பு. | - | புகார்க்காண்டம் |
| 65. | புற. | - | புறஞ்சேரியிருந்த காதை |
| 66. | பூர். | - | பூர்வகாரணாகமம் |
| 67. | பெ. | - | பெரும்பாணாற்றுப்படை |
| 68. | பொரு. | - | பொருளதிகாரம் |
| 69. | பொ. | - | பொருநராற்றுப்படை |
| 70. | போ.தி. | - | போற்றித் திருவகவல் |
| 71. | போ.ப. | - | போற்றிப் பஃறொடை |
| 72. | ம.வா. | - | மங்கலவாழ்த்து |
| 73. | மணி. | - | மணிமேகலை |
| 74. | மந். | - | மந்திரம் கொடுத்த காதை |
| 75. | மர | - | மரபியல் |
| 76. | மது. | - | மதுரைக் காண்டம் |
| 77. | ம.கா. | - | மதுரைக்காஞ்சி |
| 78. | ம. | - | மனையறம் படுத்த காதை |
| 79. | மலை. | - | மலைபடுகடாம் |
| 80. | மு. | - | முல்லைப்பாட்டு |
| 81. | முது. | - | முதுமொழிக் காஞ்சி |
| 82. | ரு. | - | ருத்ரம் |
| 83. | வ. | - | வரி |
| 84. | வா. | - | வாழ்த்துப்பா |
| 85. | விழா. | - | விழாவரைக்காதை |
| 86. | வே. | - | வேட்கைப்பத்து |
| 87. | ப.பா. | - | பன்னிரு பாட்டியல் |
| 88. | நெ.வி. | - | நெஞ்சுவிடு தூது |

# 1. இது என் மொழி

வழிபாட்டு முறையில் மாற்றம் செய்யலாமா? வடமொழியில் தான் வழிபாடு செய்யவேண்டுமா? தமிழில் வழிபடக் கூடாதா? போன்ற கேள்விகளுக்கு விடைதேடினேன். இரண்டு வகை புத்தகங்களில் மாட்டிக் கொண்டது விடை. வடமொழியில், ''சிவாகமம்''. தென்மொழியில், ''செவ்விலக்கியங்கள்''. பரப்பு அதிகமென்பதால் அச்சம் கொண்டேன். ஆற்றுப்படுத்தியது தமிழ். அறிவுறுத்தியது வடமொழி. முயன்று பார்த்து விடலாம் என முன்னேறினேன். முன்னின்றது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். முத்தெடுக்க மூழ்கும் போதுதான் மூச்சுத்திணறல். ஆகமம் அறிவுறுத்தியது வழிபாட்டை மட்டுமல்ல; தமிழ்ப் பாட்டையும்தான். செவ்விலக்கிய வரிகளெல்லாம் சிவாகமத்தில்; மெல்லக் குழம்பினேன். தமிழ் வடமொழியில் பதிவானதா? வடமொழி தமிழில் பதிவானதா? ஆதாரங்களைத் தேடினேன். தமிழும், வடமொழியும் காதலித்தது புரிந்தது. காதலித்தது இரகசியமானதோ? அதனால்தான் ஆதாரங்கள் அகற்றப்பட்டனவோ? ஆம் அப்படித்தான். தமிழன் ஆரியப் பெண்ணை மணந்தான். தமிழ்ப்படியே காதலித்து ஆரியமும், திராவிடமும் கலந்தன. எழுந்தது சாதிப்பூசல். பிறந்தது ஆதிசைவம். வழிபாட்டுமுறையைப் பதிவு செய்யும் வழக்கம் தமிழுக்கில்லை. பதிவு செய்யாமல் வழிபடும் வழக்கம் ஆரியற்கில்லை. மெல்ல மெல்லச் சமாதானம். தமிழ் எழுத்தும் ஆரியச் சொல்லும்-தமிழ்ப்-பண்பாடும் ஆரியமுறைப் பதிவும், சிவாகமமும் மலர்ந்தன. அம்பலம் ஆலயமானது, தொல்குடி ஆதிசைவனின் அசைவம் சைவமானது. அதுமட்டுமா? ஆரிய முறையில் பிறப்பில் சாதி சூட்டினான். பலர் பொருட்டும் நன்மை என்றே பரம்பரை காட்டினான். இப்பொழுது தமிழுக்கே அந்நியமானான் என்ற அர்த்தம் புரிந்தது. தமிழில் வழிபாடு செய்யலாம். வடமொழியிலும் செய்யலாம். ஆரியம் சொன்ன வட கையிலையானும் தமிழ் சொன்ன தென் குமாரியும் இரண்டறக் கலந்துவிட்ட மாதொரு பாகம் சைவம். ஆதி சைவம் இனித் தொடரும்.

ஆதிசைவம் மொழிபெயர்ப்பு நூல் அன்று. ஒரே மொழிசார்ந்த நூலும் அன்று. தமிழும் வடமொழியும் ஊஞ்சலாடுகின்றன.

மொழிபெயர்ப்பில் மட்டும் கருத்தைக் கூறமுடியவில்லை. ஒலிபெயர்ப்பும் தேவைப்பட்டது. அது மட்டுமா? பூசனையை முன்னோர் விளக்கியதைப் போல் விளக்கவும் முடியவில்லை. தமிழ்த் தொல்குடிகளே ஆதிசைவர்கள் என்று என் கருத்தை வலியுறுத்த மட்டுமே ஒலிபெயர்ப்பையும், மொழிபெயர்ப்பையும் வகைப் படுத்தியுள்ளேன். ஆதலால் கதைபோல் ஒரே ஓட்டமாய் இராது. கருத்துக்கள் ஆங்காங்கே ஒவ்வொரு வரிகளாய்ச் சிதறிக் கிடந்தாலும் ஓட்டுகள் போல் அவை; எண்ணப்பட வேண்டியவை; எழுதப்பட வேண்டியவை. சாமானியனுக்கு மட்டும் நூல் எழுதவில்லை. இங்கு ஆய்வாளர்களையே மையப்படுத்துகிறேன். ஒரு சொற்பொழிவாளன் போல் பார்வையாளரின் முகம் பார்க்கவில்லை. கருத்தரங்கத்தில் கட்டுரைவாசிப்பவன்போல்சுருக்கக்குறியீட்டையும்அடிக்குறிப்பையும் நம்பியேதான் பயணித்திருக்கிறேன். ஆதரவாளர்கள் குறைவு என்பதால். முடிவாக ஆதிசைவத்தின் கருத்துக்களைத் தொகுத்ததும் வகுத்ததும் என்ற தலைப்பில் முடிவு செய்திருக்கிறேன். இது முடிந்த முடிவன்று ஆய்வுக்கான முதற்குறிப்பே என்பதை உணர்த்தவும் முற்பட்டிருக்கிறேன்.

இரகசியமானது, வெளிப்படுத்தக் கூடாது, இறைவன் சொன்னது என்று அச்சுறுத்தும் ஆகமத்திற்கும், யார்யார்வாய்க் கேட்பினும் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்ற துணிவிற்கும் இடையே பாலம் அமைத்திருக்கிறேன். பயின்று நலம் பெறுக.

## அம்பலம் முதல் ஆதிசைவம் வரை

எந்த உயிரினமும் இரண்டே பொருளைக் குறித்து இயங்குகின்றது. எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பது; துன்பம் அற்று இருப்பது.

''எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே''

இவை குறித்த இயக்கமே வாழ்க்கை என்று கூறப்படுகிறது. இன்ப துன்பத்திற்கான காரணங்களைக் கண்டறிய முற்படும் போது தன்னைத்தான் அறிவதுதான் அந்த இலக்கை அடைவதற்கான வழி. அவ்வாறு கண்டறிந்த வகையில் மனிதன் என்பவன் உடல், உள்ளம், அறிவு, ஆன்மா, எண்ணம் இவற்றின் கலவையே ஆகும். மனிதனின் இன்பமும் துன்பமும் இவற்றின் வழியே ஆகும். இன்பத்தைத் தோற்றுவிப்பதும் துன்பத்தை முடித்து வைப்பதுமாகிற யாதொரு செயல் உண்டோ அதைக் குறித்தே மனிதன் இயங்குகிறான். அவ்வாறு இயங்கியதன் விளைவாகத்தான் கடவுள் என்ற ஒன்றைக் கண்டறிந்தான்.

கடவுள் என்றால் எல்லாம் வல்ல ஆற்றல் என்பது பொருள். இந்த எல்லாம் வல்ல ஆற்றலைத் தன் வயப்படுத்திக் கொள்ளும் செயலுக்குப் பூஜா (பூசனை) என்று பெயர். பூஜையானது நான்கு வகைப்படும். ஆசாரம், அனுஷ்டானம், சம்ஸ்காரம், தீக்ஷா.

**ஆசாரம்**

ஆசாரம் என்பது மனிதன் காலையில் கண் விழித்தது முதல் (ஆசாரம்-பின்பற்றிச் செய்வது) இரவு கண்ணுறங்கும் வரை தனக்காகச் செய்து கொள்ளுகின்ற செயல்கள். (எ.டு.) உண்பது, உறங்குவது-இவை குறித்த ஒழுக்க முறைகள்.

**அனுஷ்டானம்**

அனுஷ்டானம் (பின்பற்றி நிலை நிறுத்தல்) என்பது மனதை ஒன்றில் நிலை நிறுத்தவும், விலக்கவும் செய்கின்ற பயிற்சி. (எ.டு.) சந்தியாவந்தனம். (ஒரு அனுஷ்டானத்தின் பெயர்) ஆலய வழிபாடு.

**சம்ஸ்காரம்**

சம்ஸ்காரம் என்பது தான் கசடறக் கற்றவற்றை அனுபவத்தின் வாயிலாகப் பெறச் செய்வது. (எ.டு.) பிறப்பு, இறப்பு, சடங்கு செய்வது.

**தீக்ஷா**

தீக்ஷா (தீயதே க்ஷீயதே இதி தீக்ஷா-கொடுப்பதனால் கெடுப்பது. இயல்பாகவே அழிவற்றதும் துன்பங்களை விலக்குவதாகிற ஞானத்தைக் கொண்டதும் என்றும் இன்பமுடையதுமாகிற தன்மையை மறைத்திருக்கும் மாயையைக் கெடுத்து, ஞானத்தைக் கொடுப்பதாகிற செயலுக்குத் தீக்ஷா என்று பெயர்.

நால்வகைப் பூஜையின் பயன்பாடு : பூ-பூர்னே (முடித்தல்); ஜா-ஜாயதே (தோற்றல்); ஆசாரம் என்னும் பூஜை பிணிகளுக்கு முடிவுகட்டி ஆரோக்கியத்தைத் துவக்கி வைக்கிறது. அனுஷ்டானம் என்கின்ற பூஜையின் வழியில் (மந்திரம், யோகம்-தரிசன சாத்திரத்தின் பெயர்) மனது பிறர்வயப்பட்டுத் துன்பத்திற்கு ஆளாவதிலிருந்து முடிவு கட்டி மனத்தைத் தன் வயப்படுத்தி மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கிறது.

சம்ஸ்கார பூஜையானது இளமையில் கற்ற அறிவைச் செயல்படுத்தி அனுபவத்தைப் பெறுவதன் மூலம் குழப்பத்திற்கு முடிவு கட்டித் தெளிவைத் தோற்றுவிக்கிறது.

தீக்ஷையானது இறைவழிபாட்டின் மூலம் தன்னையறிந்து அடிமைத் தனத்திற்கு முடிவு கட்டி ஆன்ம சுதந்திரத்தை (வீடுபேற்றை) ''மோக்ஷஞ்ச விந்ததி'' தோற்றுவிக்கிறது.

மேற்கண்டதற்கான சூழலை ஏற்படுத்தித் தருவதற்குச் சமயம் என்பது பெயர். அச்சமயங்கள் பல வழிபாட்டு முறைகளை நமக்குத் தெரியப்படுத்துகின்றன. அவற்றுள் ஒன்றுதான் ஆதிசைவ வழிபாடு. குலத்தோடு மட்டுமே தொடர்புடையது குலதெய்வம். குலம் என்பதற்குப் பரம்பரை (தொடர்ச்சி) என்று பெயர். ஒரே குடும்பத்தைச் சார்ந்த அங்கத்தினரைப் பலர் பொருட்டு இணைந்து வழிபாடு செய்யும் இடத்திற்கு அம்பலம் (பூசைக்காக ஒதுக்கப்பட் திறந்தவெளி) என்று பெயர். குலதெய்வ வழிபாடானது அக்குலத்தைச் சார்ந்த சமூகம் அனைவருக்கும் நற்பலனை அளிக்கின்றது.

வழிபாடு

மனிதன் தன் எண்ணத்தை நிறைவு செய்துகொள்ள பல்வேறு முயற்சிகளைச் செய்து வருகிறான். அதில் ஒன்றுதான் வழிபாடு.

பாடு என்பது படுவதை (அனுபவத்தை) கூறுவதால் பாட்டு, இடைக்குறை எனும் இலக்கணப்படி பாடு என்பதால் வழி-என்பது ஒரு இலக்கைக் குறித்து நம்மை அழைத்துச் செல்லுவதாம். நாம் எண்ணிய இலக்கை அனுபவிக்க செய்தலின் பொருட்டு நம்மை அழைத்துச் செல்லும் நெறியே வழிபாடென்க.

தொழுவது என்பது உயர்ந்ததை உணர்ந்து போற்றுவதாம். இவை இரண்டு சொற்களையும் கொண்டு உயர்ந்தவனான இறைவனை நாம் உள்ளவாறு உணர்ந்து நாம் எண்ணியதை அனுபவித்தலின் பொருட்டு பின்பற்றப்பட்டும் அல்லது விடப்படும் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றாலும் புறப்பொருள் சிலவற்றைக் கொண்டும் ஓர் ஒழுங்கு முறையால் தொடர்ந்து பின்பற்றப்படும் செயலாம். எ.டு.

| | | |
|---|---|---|
| மெய் | - | உடல் தூய்மை செய்து நீராடி |
| வாய் | - | திருநாமம் நவின்று ''நாவே நீ முரலாய்'' |
| கண் | - | இறைத்திரு உருவம் கண்டு |
| மூக்கு | - | நறுமணப்புகை நுகர்ந்து |
| செவி | - | இறைப்புகழ் கேட்டு |
| மனம் | - | களவு, காமம், பொய் நீங்கி |
| புத்தி | - | இறைவழிபாட்டு நெறியறிந்து |

இவை அனைத்தும் இயைந்து இறை குறித்து இயங்கும் நெறிமுறையே வழிபாடு என்பர்.

குல வழிபாட்டு முறைத்தோற்றம்

குலம் (குலரூபின்யை - லலிதாவின் ஆயிரத்திருநாமத்தில் ஒன்று) என்ற சொல் பரம்பரையைத் தொடர்ச்சி என்பதைக் குறித்தது. ஒரு வம்சம் தொடர, வாரிசு உண்டாவதைக் குறித்தது தெய்வம்- என்பது தேவ என்ற வடமொழிச் சொல்லின் தமிழ் வடிவம் தத்சமச் சொல் என்க. ''திவட்ரகாசனே'' - விளங்கச் செய்வது ''தெய்வம் தொழால்'' ''தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி''

குலத்தோரால் மட்டுமே குலத்தை விளங்கச் செய்தல் பொருட்டு வழிபடப்பட்டது. அனைவருக்கும் உரியது அல்ல என்க. இது இடம் சார்ந்தே வணங்கப்படுகிறது. குறிப்பிட்ட அந்த ஒரு இடம் மட்டுமே வழிபாட்டிற்குரியதாக திகழ்கிறது. இடம் சார்ந்ததாலேயே ஊர் பெயரைக் ''கடலூர் உரை உத்தமனே'' சொல்லித்தான் தெய்வத்தின் பெயரைச் சொல்ல வேண்டும்.

உடல், உள்ளம் சார்ந்த துன்பம் அகற்றி இன்பம் தரவல்லது. வாழும் போது பயனுடையவற்றையே தரவல்லது. வீடு பேற்றைத் தராது என்பதை உணரா நிற்கும்.

வாமம் ''வாமாயைநமக'' (லலிதா ஆயிரத்திருநாமத்தில் ஒன்று) என்ற முறையில், மது, மாமிசம் போன்றவையும், பிற உயிரை வதைத்து செய்யக்கூடிய செயலைப் பூசை முறையாகக் கொண்டது.

பின்னரே அது சைவமாக மாற்றப்பட்டது. மற்றபடி குலதெய்வம் அனைத்தும் வாமாச்சாரம் என்க. இவை பெரும்பாலும் மரத்தடியில், அவ்வப்போது கூடும்போது மட்டுமே வழிபாட்டிடங்களாய் திகழ்ந்தது. ''அம்பலம்''-திறந்தவெளி. பெரும்பாலும் பலியிடப்படும் ஆயுதமே ''வச்சிரக் கோட்டத்து'' (வச்சிரம் ஓர் ஆயுதம்) இறை உருவாகப் பயன்படுத்தப்பட்டது. குலத்தில் உள்ள ஒருவர் மீது சாமி ஆவேசித்து குறி கூறி-அருள்வாக்கு சொல்வது மட்டுமே குலதெய்வம் ''ஆவேசுவாதம்''. இது முழுவதுமாய் தமிழர் வழிபாட்டு முறையேயாகும். சமணம், பௌத்தம், சைவம் இவை வந்தபோது உயிர்பலிகள் குறைக்கப்பட்டு, சைவமாக உருமாறின என்பதையறிக.

மாவிளக்கு ஏற்றுவது, படையல் இடுவது சிறப்பானது. இவை தினப்படி பூசிக்கப்படுவதில்லை. 1,3,5 என்ற வருடக்கணக்கில் மட்டுமே வழிபடப்படும். சில சம்பவங்களைக் கண்டு அஞ்சியும், சில செழிப்பு குறித்தும் மட்டுமே வழிபாடு செய்யப்பட்டது. தனியாக பூசாரிகள் வைத்து வழிபடும் வழக்கமில்லை. வயதில் மூத்த குலப்பெண்களே (பெயரன் பெயர்த்தி எடுத்த சுமங்கலி;

இவர்களுக்கே சாமி வரும்) பூசனைகளைச் செய்வர், ஆண்சாமிகள் பெண்களுக்கும், பெண் சாமிகள் ஆண்களுக்கும் வரும். ஊரின் ஒதுக்குப்புறத்திலும், வீட்டின் பின்புறத்திலும் இவை இருக்கும் என்க.

## குலதெய்வத்தின் தன்மை

குலதெய்வம் மூன்று காலம் அறிந்து கூறும் தன்மையுடையது. அது தன்னை வணங்கும் குலத்திற்கு மட்டுமே பலன் தரவல்லது. பிற குலத்தினருக்கு அன்று. குலதெய்வங்களுக்கென்று ஆலயங்கள் இப்போது உள்ளது போல உருவ வழிபாடோ தினசரி பூசை முறையோ அன்று கிடையாது.

அவை பெரும்பாலும் ஏதேனும் ஓர் இடத்தில் மட்டும் தோன்றி அருள்வதாகவும் அல்லது மரத்தில் தங்கியிருப்பதாகவும், உயிர்பலியிடும் கருவிகளில் தங்கியிருப்பதாகவும், வணங்கும்போது மட்டும் செய்யப்பட்டு பின்பு கலைக்கப்படும் களிமண் உருவங்களாகவும் குறிப்பிட்ட முறையில் சில பொருள்களைப் பயன்படுத்தி, குறிப்பிட்ட இனத்தவரால் செய்யப்படும் படையல்கள், மண்டலங்கள் (வரைபடங்கள்) என்ற அமைப்பு முறையில் வணங்கப்பட்டுள்ளன.

## குலதெய்வ வழிபாட்டு முறை வளர்ச்சி காலம், பயன், நிகழ்வு சார்ந்து

தெய்வங்களில் பெரியது, சிறியது என்று இரு வகையாய் பிரிக்கப்படுகின்றன. 1. மனிதனின் ஒரு சில தேவைகளை மட்டும் பூர்த்தி செய்வதைச் சிறு தெய்வம் என்றும் 2. வாழ்வியலின் அனைத்து தேவைகளையும் பூர்த்தி செய்வதைக் குல தெய்வம் என்றும் வாழ்வியலோடு வீடுபேற்றையும் தரவல்லதைப் பெருதெய்வம் என்றும் கூறுவர்.

மேலும், தெய்வங்கள் நிலம் சார்ந்தும் பாகுபடுத்தப்பட்டதைத் தொல்காப்பியம் இயம்புகிறது. முக்தி அடிப்படையில் சாலோகம், சாரூபம், சாமீபம் சாயுஜ்யம் என்று நால்வகை தெய்வங்கள் பாகுபடுத்தப்பட்டுள்ளன. 1. வீடுபேற்றைத் தரவல்லது சாயுஜ்யம். இது அருஉருவம் கொண்டதாகிற லிங்கம் 2. இன்பம் தரவல்லது சாரூபம். இது உருவத்தோடு கூடியதாகிற இறைவன். 3. பொருளைத் தரவல்லது. இது வணங்க உருவமற்று குறிப்பிட்ட ஓர் உடல் மீது ஆவேசித்துப் பேசி குறிப்பிட்ட இனத்திற்கு மட்டும் நலம் செய்யவல்லது. அதுதான் குலதெய்வம். 4. தனிமனித நலனுக்கு மட்டுமே செய்யவல்ல சாலோகம் என்பது இறந்த பின்னும் தன்னைப் பிறருக்கு உணர்த்தி தன்தேவையை நிறைவேற்றிக் கொண்டு பிறருக்குச் சிற்சில வகையில் உதவுவது.

## ஆதிசைவத் தோற்றம்

மனிதன் தன் வினையினால், அறிவினால், எண்ண ஒழுங்கினால், கட்டுப்பாட்டினால் முயன்று தீர்க்க முடியாத தொல்லைகளுக்கு மனத்தை வசியப்படுத்துவதும் எதிர்காலம் சூட்டி வினையை ஒழுங்குபடுத்துவதிலும் அற்றம் காப்பதிலும் (துன்பம்) மிகவும் விரைவாகவும் எளிமையாகவும், இனிமையாகவும் செய்து முடிக்கும் தேவதைகளைத் துணைக்கொண்டு சாதிக்க முயல்வதின் (முயன்றதின்) வெளிப்பாடே வழிபாடு. அந்த வழிபாட்டின் துணைக்கொண்டு மனத்தை தன் வயப்படுத்தி, உடலை ஆரோக்கியப்படுத்தி, அறிவைத் தெளிவுபடுத்தி வாழ்க்கையைச் சிக்கலின்றி செம்மையுற இனிமையாக்கித் தருவது சமூகம் சார்ந்த கூட்டு வழிபாடே என உணர்ந்து அதைப் பின்பற்றி தெரிவு செய்த இடம் தான் அம்பலம். அது ஆலயமாக வளர்ச்சி அடைந்தது, அதுவே ஆதிசைவத் தோற்றமாயிற்று.

## அம்பலம் (ஆலயம்) வளர்ந்த அடிப்படை

| தமிழ்வழிபாடு | ஆரிய வழிபாடு |
|---|---|
| அம்பலம் | ஆலயம் |
| வெட்டவெளி | மூடியகூரை |
| குறிப்பிட்ட ஒரு இனத்தவர்க்குமட்டும் | அனைவருக்கும் பொது |
| அறம், பொருள், இன்பம் மட்டுமே தரவல்லது | இவற்றோடு வீடுபேற்றையும் தரவல்லது |
| சிறுதெய்வ வழிபாடு | பெருதெய்வ வழிபாடு |
| குடும்பத்தலைவர், தலைவி வழிபடுவர் | அனைவருக்காகவும் ஒரு குலத்தைச் சார்ந்தோர் மட்டுமே வழிபடுவர் |
| தோன்றிய நிலை | வளர்ச்சி நிலை |
| மனிதர் குழுவாக வசித்தபோது உறுவானது (குடும்பம்) | பலகுழுக்கள் ஒன்று சேர்ந்த நிலையில் (சமூக நிலையில்) உருவானது |
| சாதி தோற்றத்திற்கு முந்தியது | சாதிப் பாகுபாட்டிற்குப்பின் தோன்றியது |
| ஓரின வழிபாடு (திராவிட) | இனக் கலப்பு வழிபாடு (ஆரிய வழிபாடு) |
| அசைவம் | சைவம் |

பல குழுக்கள் இணைந்திருந்தமையால் பல வேறுபட்ட கருத்துக்களைக் கொண்டதாக இருந்தது. அதனால் பூசல்கள்

தோன்றின. அதை அமைதியுறச் செய்வதன் பொருட்டு பூசனை தோன்றியது. முரண்பாடுகளின் நடுவேயுள்ள உடன்பாடுகளை இணைக்க முயன்றபோதுதான் சமயக் கொள்கை வரையறுக்கப் படவேண்டிய தேவை ஏற்பட்டது. அவ்வாறு வரையறுக்கப்பட்டு செம்மை படுத்தப்பட்ட நிலையே ஆகமத்தோற்றம். அதுவே முடிந்த முடிவான நிலை (சித்தாந்தம்). அந்தக் கொள்கையை இனிக் காண்போம்.

வடமொழியில் ஆதிசைவ சமயக் கொள்கை

சமயம் சார்ந்த நூல்களைப் பொதுவாக இரண்டு பகுதிகளாகப் பிரித்தே விளக்குகின்றனர். 1. கொள்கை 2. அறம். இங்கே கொள்கை என்பது இறைவனைப் பற்றிய இலக்கணத்தை அறிவிப்பது. சமயம் சார்ந்த அனைவருக்கும் ஒன்றே ஆகும்.

அறம் என்பது கொள்கையினால் அறியப்பட்ட இறைவனை நாம் அனுபவத்தில் அடைவதற்கு மனம், வாக்கு, காயத்தால் செய்ய வேண்டிய செய்கைகளைப் பின்பற்றிய பல்வேறுபட்ட விளக்கங்கள் ஆகும். கொள்கை என்பது அறிவு சார்ந்து ஒற்றுமையை விளக்குகிறது. அறம் என்பது செயல் சார்ந்து வேற்றுமைகளை விளக்குகிறது. இவை இரண்டையும் சேர்த்து படித்தால்தான் சமயத்தை முழுமையாக புரிந்துகொள்ள முடியும்.

இந் நூலைப் பொருத்தவரை கொள்கை என்ற தலைப்பானது ஆதிசைவ சித்தாந்தத்தை (கொள்கை) விளக்குகிறது.

அறத்தைப் பொருத்தவரை ஆதிசைவப் பிரிவின் (ஆதிசைவ குலதர்மம்) அந்தணர்களைப் பற்றி மட்டுமே விளக்கப்படுகிறது (வேளாளர், வைதியர் போன்ற பிற இனத்தவரைக் குறிப்பிடவில்லை).

# 2. வடமொழியில் ஆதிசைவ சமயக் கொள்கை

*அளப்பரிய மொழிப் பரப்பில் அருள் பரப்பும் சைவத்துறை*

வடக்கே வேங்கட மலையையும், தெற்கில் குமரிக் கண்டத்தையும், கிழக்கு, மேற்கில் கடலையும் எல்லைகளாகக் கொண்ட நம் தமிழ் திருநாட்டில் பல மொழிகள் வழக்கில் உள்ளன. அவற்றில் "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்து முன் தோன்றிய மூத்த தமிழும்" வடமொழியும் தலைச்சிறந்தனவாம். இவ்விரு மொழிகளும் தங்களுக்குள் பல இலக்கியங்களையும், அவற்றின் பிரிவுகளையும் கொண்டுள்ளன. அப்பிரிவுகளில் ஒன்று "பக்தியிலக்கியமாம்". இதில் இறைநெறியாளர்களால் ஆக்கப்பட்ட சமயம் சார்ந்த மொழிப்படைப்பானது பல இருந்தாலும், குறிப்பாக நாம் சிவனையே செம்பொருளாகக் கொண்டு வழிபடும் சைவ சமயம் சார்ந்தே காண இருக்கிறோம். இதன் சிறப்பை,

*ஐயாறதனில் சைவனாகிய (தி.84)*

என்ற திருவாசகக் குறிப்பினால் நன்கு உணரலாம்.

*சமயமும் சைவமும்*

"சமயம்" என்கிற சொல்லானது சமைத்தல் என்ற வினையடியால் தோன்றியதாம். சமைத்தல் என்ற செயல் ஒரு பொருளை உண்ணுவதற்குத் தக்கவாறு பக்குவப்படுத்துவதாகும். அவ்வாறே மனிதர்களை (ஆன்மாக்களை) இறைநிலை மருவப் பக்குவப்படுத்துவது. இத்தகைய சமயங்கள் கானாபத்யம், சௌரம், சமணம், பௌத்தம், வைணவம் என்று பல.

> சைவம் வைஷ்ணவம் சாக்தம் கௌமாரம் கானாபத்யம்
> சௌரம் ஞ்சாகில தைத்ய பூஜனம் ஞ்ச சமாசரேத்
> (ஞா.ப.241)

அவை ஒவ்வொன்றும் பல கொள்கைகளைத் தனக்காக தனித்தனியே பெற்றுத் திகழ்கின்றன. அவற்றுள் "சிவமே மெய்ப்பொருள்" என்ற கொள்கை கொண்டது சைவ சமயம். அது தொடர்பான கருத்தடங்கிய நூல்களுள் உள்ள சில கருத்துக்களை "ஆதிசைவம்" என்ற தலைப்பில் ஆய்வேட்டு அமைப்பில் தொகுத்துள்ளதே இந்நூல்.

சைவத்துள் சைவம்

சிவத்தையே முழுமுதற் பொருளாகக் கொண்டாலும் சிற்சில கொள்கை வழியில் மாறுபட்டு சைவமானது தனக்குள் பல பிரிவுகளைக் கொண்டு விளங்குகிறது. வேறுபாடு பல இருந்தாலும் சிவத்தையே வணங்குவதால் அவையும் சைவமெனப்பட்டது. அவற்றின் வகைகளை இனிக் காண்போம்.

சைவமானது' வழிபாட்டு நெறிமுறைப்பற்றியது, பின்பற்றும் கொள்கைப் பற்றியது என இரு வகையாக பிரிக்கப்பட்டுள்ளது. பின் அவற்றுள் ஒவ்வொன்றும் தங்களுக்குள் பல கிளைகள் கொண்டுள்ளன. மேலும், சொல்லப்பட்ட அனைத்து சைவமும், நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

சிவம்

சிவேந சஹ சம்பந்ததேந சைவம் (ஞா.ப.243)-
சிவத்தோடு சம்பந்தமாவது சைவம்

| வழிபாட்டு நெறி முறைப்பற்றி | | பின்பற்றும் கொள்கைப் பற்றி |
|---|---|---|
| | | சிவ சமவாதம் |
| வைத்திகசைவம் | அவைதீகம் | சிவபேதவாதம் |
| தக்ஷினம் | வாமம் | ஆவேசசமவாதம் |
| சுத்தசைவம் | காபலிக சைவம் | உற்பத்தி சமவாதம் |
| வீரசைவம் | கங்கால சைவம் | அபிவ்யக்தி சமவாதம் |
| பாசுபாத சைவம் | வைரவ சைவம் | சிவாத் ஆதிக்கவாதம் |
| பாடான சைவம் | கௌளசைவம் | சங்க்ராந்த சமவாதம் |
| இலயசைவம் | தாந்திரிக சைவம் | சித்தாந்தம் |

நால்வகை சதுஷ்பாதம்

சர்யா பிரதானம், கிரியா பிரதானம், யோக பிரதானம், ஞானபிரதானம்

(ஞானாவரண விளக்கமும் வெள்ளியம்பவளவாண மாபாடியமும் என்ற நூலை பின்பற்றி பட விளக்கம் தரப்பட்டுள்ளது).

மேற்கண்ட அட்டவணைப் படத்தில் இந்த ஆய்வு பகுதி சார்ந்து "தக்ஷின" வழிபாட்டு முறையிலும், கொள்கை வகையில் "சைவ சித்தாந்தம்" என்ற பிரிவின் கீழும் உள்ள சைவ பிரிவான "ஆதிசைவம்" (சுத்த சைவம்) என்ற சைவத்தை விளக்க உதவும் வண்ணம் இனி அறிவோம்.

வழிபாட்டு நெறிமுறைப் பற்றி

தக்ஷினம் (சவ்யம்) என்பது மாமிசமற்ற சைவமான உணவு மற்றும் பொருள்களைக் கொண்டு உயிர்பலிகள் அற்று செய்யப்படும் ஒரு வகை வழிபாட்டு முறையாகும்.

சைவ சித்தாந்தம் ஓர் எளிய அறிமுகம்

சுத்த சைவம் (ஆதி சைவம்) வழிபாட்டு நெறி முதலில் இருந்தாலும், அது சார்ந்த "சித்தாந்த சைவம்" என்ற கொள்கைப் பிரிவை முதலில் அறிவது வழிபாட்டு முறை விளக்கத்திற்குப் படி (சோபான) முறை விளக்கமாக அமையும்.

"வடமொழியில் ஆதிசைவம்" என்ற கொள்கைமுறை விளக்கமாக முதலில் சிவன் என்ற சொல் இலக்கண, இலக்கிய அகராதி சார்ந்து.

| தென்மொழி | வடமொழி |
|---|---|
| செம்மை<br>சைவர்கள் வணங்கும் கடவுள்<br>வைடூரியம் | மங்களமானவர் [1]<br>நல்லோர் உறைவிடம்<br>In whom all thing lie auspicious, Favourale, Happiness, Final. |

சாத்திரப் பொருள்

சித்தாந்தம் கூறும் பதி, பசுபதி,[2] ஐந்தெழுத்து மந்திரத்திற்குரிய கடவுள், சிற்பம் சைவர்களின் அருவத் திருமேனிக்குச் சிவன் என்று பெயர்.

சிவன் என்ற சொல்லால் "லிங்கம்" [3] என்ற அரு உருவத் தோற்றம் குறிப்பிடப்படுகிறது. சிவபேதம் என்ற சொல்லால் இலிங்கம் முதல் ஷடானனர்வரையுள்ள 64 இறைத்திரு உருவங்கள் குறிப்பிடப்படுகின்றன.

நிருத்தம்

வேதப்பொருளை உறுதி செய்யும் நிருக்தம் எந்த வடிவத்தை எடுக்க விரும்புகிறோமோ அந்தத் தேவதையாகவே ஆவது. இதற்கான வடமொழி மூலம்

சேவ இதிசுக நாம சிஷ்யதே வகாரோ நாமகரண அந்தஸ்வஷ்தா உத்தரோ பலிங் கீ விபா ஷித குண: சிவமித்ப்யஸ்ய ப விதி யத்ரூபம் காமயதே தத்த த் தே வதா ப வதி ரூபம் ரூபம் மகவோபோபவீதி இத்யபி நிக மோ ப வதி"[4]

மேலும் சிவனை "சிவன்" என்ற சொல்லால் சூட்டாமல், ஆனால் அவரையே குறிப்பிடும் வகையில்,

அருபரத்து ஒருவன் (போ.தி.73), மழுவால் நெடியோன் (ம.கா.455), பைங்கட்பார்ப்பான் (ப.5:28), முக்கண்ணான் (க.2:4), சுடர்ச்சென்னி (அக.கா:11), மூளயில் முருக்கிய முரன்மிகு செல்வன் (திமு: 154), அமர் செல்வர் (சிறு : 97), அவிர் சடைமுனிவர் (பட்:54), கண்ணுதலோன் (சில.மகா: 13) போன்ற சொற்கள் தமிழில் காணப்படுகின்றன.

## வடமொழியில் பெயரையும் பால்வகையும் உறுதி செய்யும் அமர கோசம்

சம்பு: ஈச: பசுபதி: ஸ்ரவ: ஈசாந: சங்கர சந்திரசேகர: பூதேச: கண்டபரசு: கிரீஷ்: கீரீசி: ம்ருட மருத்யுஞ்ஜய: க்ருத்திவாச: பிநாகி, ப்ரமதாதிப: உக்ர கபா;த்தி: ச் ரீறிகண்ட: சிதிகண்ட: கபாலப்ருத், வாமதேவ: விருபாக்ஷ: மஹாதேவ: திரீலோசன: க்ருசானுரேத: ஸ்வர: துரீடிஜ: நீலலோஹித: ஹர: ஸ்மரஹர பர்க: த்ரயம்பக: த்ரிபுராந்தக: கங்காதர அந்தகாரீபு: க்ரதுத்வமஸி வருஷபத்வஜ: வ்யோம கேஷ பவ பீம ஸ்தானு ரூத்ர உமாபதி [5] என்ற 48 பெயர்களை "சிவன்" என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இதில் குறிப்பிடும் எல்லா பெயர்களும் இதற்கு முன் சொன்ன சிறபம், அகராதி, யாஸ்கம், சித்தாந்தம், தமிழில் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட பொருள் கொண்ட அனைத்துப் பெயர்களையும் சூட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட சொற்களால் சூட்டப்படுகிற அனைத்துப் பெயர்களாலும், அவற்றின் விளக்கத்தாலும் சிவன், ரூப, அரூப, ரூபாரூப வடிவத்தினையும், அவனது பொது குணங்களையும், சிறப்பு குணங்களையும், மற்றும் அவனது ஆற்றலையும் விளக்கி கூறுவதைக் கொண்டு சைவ சாத்திரம் கூறும் பதிப்பொருள் தன்மையினையும், சிறப்பையும் கொண்ட சிவன் என்ற கடவுளே இங்கு விளக்கப்படுகிறார்.

இந்த "சிவத்தோடு சம்பந்தமாவதே சைவம்" [6]

சிவனைக் கடவுளாகக் கொண்ட சைவம் பல உள்ளன. அவற்றுள் "ஆதிசைவம்" மட்டுமே இங்கு நம் ஆய்வு பகுதிக்குத் துணை செய்யும் வகையில் சுருக்கி விளக்கப்படுகிறது. மேலும், "சிவன் எனும் சொல்" என்ற தலைப்பில் விளக்கப்பட்ட ஆதார

நூல்களைக் கொண்டும் அவற்றின் காலங்களைக் கொண்டும், அது மிகவும் தொன்மையானது என்று நம்மால் தெளிவுற அறிய முடிகிறது.

பின்பு அது செம்மையான வடிவமைப்பைப் பெற அதற்கென்றே பல தனி சாத்திரங்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் சைவ நெறிகள் பல இருந்தபடியால், அவை ஒவ்வொன்றும் தனது தனித்தன்மையை நிலை நாட்டும் வகையிலும், தாம் எவ்வாறு மற்றவற்றிலிருந்து மாறுபடுகிறோம் என்று தெளிவாக விளக்கிக் கொள்ளவே அவற்றிற்கான சாத்திரங்களும் தனியாய் அமைகின்றன. அப்படி சைவத்தின் வகைகளில் ஒன்றான "சித்தாந்த சைவமே" நம்மால் இனி தொடர்ந்து விளக்கப்படுகிறது.

சைவ சித்தாந்தத்தை அதுகூறும் சாத்திரத்தை, அது பற்றி விளக்கும் நூல்களை, அல்லது கருத்து சார்ந்து விளக்கம் பெரும் நூல்களைக் கொண்டு ஒருவாறு சுருக்க வரையறை செய்வதாகக் கொண்டால் கீழ்க்கண்ட நூல்கள் - சித்தாந்த சாத்திரம்-14, ஆகமங்கள்-28, வேதம்-4 அவற்றின் ஞானபாகங்கள், வேதாந்தத்தின் கொள்கைக்கு ஒப்பவரும் ஸ்வேதாஸ்வதரம், ஈச, கேன கட, ருத்ரஜாபால, பஸ்மஜாபால போன்ற உபநிஷதங்கள் ருத்ரம் (வேதபாகம்) புராணத்தில் சிவபுராணம் மற்றும் வாயு சம்ஹிதை போன்றவற்றைக் கூறலாம். இவற்றிற்கெல்லாம் மகுடம் போல் விளங்குவது சிவஞான போதம் என்னும் சூத்திரமே. வேதம் நான்கும், பிறசாத்திரம் இருந்தும் எப்படி ப்ரம்மசூத்திரம் அத்வைதி, விஷிஷ்டாத் வைதி, த்வைதி போன்றோருக்கு விளங்குகிறதோ அதே போல் சைவர்களுக்கு சிவஞானபோதத்தை "சித்தாந்த சூத்திரம்" எனலாம்.

சித்தாந்தத்திற்கான விடிவெள்ளி

சித்தாந்தத்தே சீவன்முத்தி சித்தித்தலாற்
சித்தாந்தத்தே நிற்போர் முக்தி சித்தித்தவர்
சித்தாந்தவேதாந்தஞ் செம்பொருளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே (தி.ம.2394)

சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவத்தோடு சம்பந்தமான நெறியை அதாவது ஞானக் கொள்கையை இனி தொடர்ந்து சுருக்கமாய் அறிவோம்.

சைவ சித்தாந்தம்

முன் சொன்ன சூத்திரரூபமான "சிவஞானபோதம்" என்ற நூல் தலைப்பைக் கொண்டு சைவத்தின் இருவகைப் பிரிவில் ஒன்றான கொள்கைப் பிரிவு சார்ந்து இங்கு விளக்கப்படுகிறது.

சிவஞானபோதம் என்பதற்கு 'சிவனைப் பற்றிய ஞானத்தைப் போதிப்பது' என்பது பொருள். அதுவே சித்தாந்தமென வழக்கில் கூறப்படுகிறது. சித்தாந்தம் என்பதற்கு "முடிந்த முடிவு" என்பது பொருள். இதைக் கொண்டு சிவனைப் பற்றி போதிக்கும் முடிந்த முடிவான அறிவுக் கொள்கையே சைவ சித்தாந்தம் எனலாம்.

ஏவம் வித்யாச் சிவஞான போதே சைவார்த்த நிர்ணயம் [7]

முப்பொருள் உண்மை

சித்தாந்த சைவம் பதி, பசு, பாசம் என்ற முப்பொருளையும் விளக்குவதைக் கொண்டு தன் கொள்கையை நிறுவுகிறது. இதில் 'பதி' இறைவனைப் பற்றியும் 'பசு' ஆன்மாக்களைப் பற்றியும் 'பாசம்' உலகம் (மாயை) பற்றியும் கூறுகிறது.

இவை பற்றிய கருத்துக்களை விளக்க விரியுமாதலால் வரி வடிவில் உரைநடையாகவும் அதற்கான சாத்திரக் கூறுகளைச் செய்யுள் வடிவிலும் தேவைக் கேற்ப காண்போம்.

இறைவன் ஒருவனே

ஒன்றென்றது ஒன்றே கான் ஒன்றேபதி [8]

அவன் இவ்வுலகத்தை அழிக்கும் தன்மை கொண்டவனாக கருதும் அரனே (சம்ஹாரகர்த்தா) "ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்கான் ஆரேனும் கானா அரன்". (தி.க. 15:34)

அவனே இவ்வுலகை மீண்டும் படைத்து, காத்து, அழித்து, மறைத்து அருளுகிறான். இவ்வாறு ஐந்தொழில்; செய்வது அவன் கருணையே.

ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய், போக்குவாய், என்னை புகுவிப்பாய் நின் தொழும்பில்" (தி.42.43) ஆன்மாக்கள் உய்வு பெரும் பொருட்டு விளையாட்டாய் தொழில் செய்கிறான்.

''திருவிளையாடல் புராணம்'' நூல் தலைப்பாலேயே அவன் செய்தது விளையாட்டு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இறைவனே தன் தொழிலைத் தன்னுடைய அருட்சக்தி கொண்டு செய்விக்கிறான். (அரசனானவன் மந்திரி மற்ற ஏவலர்களைக் கொண்டு செய்வது போல்).

"ஒன்றதாய் இச்சா, ஞான, கிரியை என்றதொரு மூன்றாகி நின்றிருஞ்சக்தி இச்சா உயிர்களுள் நேசமாகும். நன்றெல்லாம் ஞான

சத்தியால் நயந்தறியன் நாதன் அன்றருட் கிரியை தன்னால் ஆக்குவன் அகிலமெல்லாம்" (சுப.84).

இறைவன் தன் வயத்தனாதல், இயற்கை உணர்வினாதல், முற்றுணர் வினனாதல், அலவிலா ஆற்றல் உடையவனாதல், தூய உடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவனாதல் என்ற எட்டு தன்மை உடையவன்.

"கோளில்; பொறியில் குணமிலவே எண் குணத்தான் தாலை வணங்காத் தலை" (திரு.9). இறைவன் ஆன்மாக்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருக்கிறான்.

ஒன்றாகாமல் இரண்டாகாமல்
ஒன்று மிரண்டு மின்றாகாமல் (இ.இ. 20:10)

இறைவனே குருவடிவமாக வந்து ஆன்மாக்களை ஆட்கொண்டருள்வான்.

தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தி விட்டு [9]

இறைவன் அறிவு வடிவினன் என்றும் மாறாத் தன்மையுடன் நிலைத்து நிற்பவன்.

அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன் (தி.ப.5)

இறைவன் ஆன்மாக்களைத் தத்தம் கரும வினைக்கேற்ப தனு, கரண, புவண, போகத்தைக் கூட்டி செம்மையுற செய்பவன்.

திரோதானம் என்பது இறைவனின் மறைப்பு சக்தியாகிய மாயை. அதன்காரியமாய்தான் தனு, கரண, புவனபோகம் தோன்றும்" [10]

பசு (உயிர்)

ஆன்மாக்கள் பல
எண்ணறிதாய் (சிவ.19:1)

உயிர் அனாதியும் நித்தியமும் ஆனது.

"என்றுமுளன் அன்றளவும் யானும் உளன்" (நெ.வி.16) இயல்பாகவே மலத்துடன் கூடியவை.

பாசப் பெருங் கயிற்றால் பல்லுயிரும் (போ.ப.23)

உணர்த்த உணரும் அறிவை உடயவை உடலில் உறைபவை.

உணர்த்த உணர்தலின் மாயா இயந்திரத்தனுவினுள் ஆன்மா
(தி.போ.3)

ஆன்மாக்கள் சத் அசத்தாம் அல்லது சித் அசத்தாம்.

"பசு தோற்றக் கேடுகள் இல்லாததாயினும், பாசத்தைச் சார்ந்து பாசமாய் அறிவு கெட்டும் தோன்றியும் வருதலால் சத்தெனப்படாது அசத் தெனப்பட்டது. பதியைச் சார்ந்தப்பின் அத்தகைய மாற்றம் இல்லாது பதியைப் போலவே ஒரு நிலையாய் இருத்தலால் அசதெனப்படாது சத் தெனப்படாது அதனால் பசு சத்தசத்து எனப்படுகிறது".[11] ஆன்மாக்கள் சார்ந்ததன் வண்ணமாய் தன்மை உடையது.

"சார்ந்ததன் வண்ணமாம் ஆன்மா".[12] ஆன்மாக்கள் ஆனவம், கன்மம், மாயை என்ற மலத்தினால் பீடிக்கப்பட்டுள்ளன.

"நீக்கமின்றி நிற்குமன்றோ". (சி.போ.சூ:2) "மலங்கட் புலன் ஐந்தும் வஞ்சனையே செய்ய"

இறையருளினால் மட்டுமே ஆன்மாக்கள் தன்னுணர்வு பெரும் சுயமாய் பெற வல்லன அல்ல.

"அறிவிக்க அன்றி அறியா உளங்கள்".[13] ஆன்மாக்கள் உடலோடு மற்றும் கருவி கரணங்களோடு கூடியிருக்கும் நிலையில் ஜாக்ரத், ஸ்வப்நம், சுசுப்தி, துரியம் துரியாதீதம் என்ற ஐந்து அவஸ்தைகளை அடையும்.

"காரிய அவத்தைகள் ஐந்து".[14] ஆன்மா மலத்துடன் கூடி பெத்தத்தையும் சிவனுடன் கூடிய முத்தியையும் அடையும்.

சார்ந்த தன் வண்ணமாம் ஆன்மா என்ற இலக்கணப்படி பாசத்தோடு கூடி பந்தமும், அது நீங்கினால் மோட்சமும் பெறும்.

பாசம்

பாசம் என்பதற்கு கட்டுவது, விலங்கு என்பது பொருள். இவையும் நித்தியமாம், ஆன்மாக்களைச் சிறைபடுத்துகின்ற தன்மை கொண்டதனால் பாசம் எனப்பட்டது.

"பாசம்-கயிறு, கட்டுவது" "விலையாததோர் பரிசில் வரு பசு பாச வேதனை. ஒன் தலையாயின தவிரவரு தலைவன்".

பாசம் மூவகைப்படும். அவை ஆனவம் கன்மம் மாயை.

ஆன்மா இயல்பாய் அறிவுடையதாயினும், ஆணவ மலத்தின் மறைப்பால் தன்னை அறிய இயலாமல் மறைக்கிறது (அறிவு கெடுப்பதாம்).

ஒரு பொருளுங் காட்டாது இருள் உருவம் காட்டும்
(தி.ப.23)

ஆணவமலம் அனாதியே ஆன்மாவோடு செம்பிற் களிம்பு போல் இரண்டறக் கலந்ததாம். இது அகன்றால் ஆன்மா முக்தி பெறும்.

செம்பினுறு களிம்பு யேந்து நித்தமு
மூலமலமாய் அறிவு முழுதினையும் மறைக்கும்
(சிவ.20:2)

மற்ற இரு மலங்களுக்கும் ஆதாரமலம், ஆணவமலம்.

மோக மிக உயிர்கள் தோறும் உடனாய் நிற்கும்
மூல ஆணவம் ஒன்று (சிவ.32)

'கன்மம்' என்பதற்கு 'வினை' என்பது பொருள். பொருட்தன்மை கொண்ட மாயையின் அசைவே கன்மம். உயிர் உடலோடு கூடியுள்ளபோது மனம், மொழி, மெய்களால் செய்யும் நல்லன, தீயனவாகிய செயலே கன்மமாகும்.

எண்ணிவரு மனவாச கன்மத்தா
லியற்றும் இயல்பினதாய் (சிவ.28:3)

மாயையைச் சார்ந்து கன்மம் இருநிலையில் உள்ளது. காரணம் (தோன்றா நிலை), காரியம் (தோன்றிய நிலை).

கன்மமும் மூலங்காட்டிக் காமிய மலமாய் நிற்கும்
(சுப.129:3)

காரண நிலையில் பாவ புண்ணியம் இல்லை. காரிய நிலையிலேயே உள்ள கருமத்திற்காக பாவ புண்ணியம் என்ற விளைவு ஏற்படும்.

இதம் உயிர்க்குறுதி செய்தல் அகிதம் மற்றது செய்யாமை
(சுப.103:2)

அனாதியே ஆணவ மலத்துடன் உளது. கன்ம மலம் ஆணவம், மாயை இவற்றோடு சேர்ந்தே இயங்கும், தனித்து இயங்காது. கன்மலம் சஞ்சிதம்; பிராரப்தம் ஆகாம்யம் என்று மூவகைப்படும். கன்ம மலம் மணம், வாக்கு, காயத்தால் தோன்றும்.

எண்ணி வரும் மன வாசகன்மத்தால் இயற்றும் இயல் பினதாய்
(சிவ. 28 : 3)

கன்ம மலம் என்பது அதன் பலனால் முக்தி பெரும் அளவு வரை ஆன்மாக்களுக்குப் பிறப்பு, இறப்பு,இன்பம், துன்பம், பிணி, மூப்பைப் தோற்றுவிக்கும்.

பேறிழவு இன்பமொடு, பிணி, மூப்பு, சாக்காடு என்னும் முன் கருவுட்பட்ட தவ்விதி அனுபவத்தால் எறிடும் முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது (சுப:99). வினைகள் சடமாம் தன்மைப் பெற்றன. ஆன்மாக்களுடன் இறைவன் பொருந்தும் அளவிலேயே பொருந்தும் தன்மையுடையது. தானாகப் பொருந்தாது.

"உள்ளதே தோற்ற உயிரையும் அவ்வுடனின் உள்ள தாழும் செய்வினை உள்ளடைவே தலைவன் செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யே போற் செய்வன் செயலனையா சென்று"

மாயை

"மனிதனைச் சூழ்ந்துள்ள புறப்பொருள் பற்றிய ஆன்மீக தெறிநிலை விளக்கம்.

மாயா என்ற சொல்லிற்கு மா ஒடுங்குதல், யா வருதல் என்று பொருள்.

சொல் விளக்கம்

மாயையினின்றே உலகம் காரியப் பொருளாய் தோன்றும்.

உலகத்திற்கோர் வித்து

மாயை சுத்தமாயை, அசுத்தமாயை, ப்ரக்ருதி மாயை என்று மூன்றாம். அசுத்த மாயையினின்று ப்ரகருதி மாயை தோன்றியதால் இரண்டென்பர் சிலர்.

மாயை

பிரபஞ்சம்

| சொற்பிரபஞ்சம் | | | | பொருட்பிரபஞ்சம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மந்திர | | பத | வர்ண | புவனம் | | தத்துவம் | கலை |
| பரா | ப்சயந்தி | மத்யமா | வைகரி | தனு | கரணம் | புவனம் | போகம் |
| பிரகருதிமாயை | சுத்தமாயையிலிருந்து தோன்றியது | | | அசுத்த மாயையிலிருந்து தோன்றியது | | | |
| 24 ஆத்மதத்வம் | 5. சிவதத்வம் | | | 7. வித்யாதத்வம் | | | |
| போக்ய காண்டம் | ப்ரேரககாண்டம் | | | போசயித்ரு காண்டம் | | | |

மாயை (காரியஸ்வருப விளக்கம்)

| | | |
|---|---|---|
| சிவதத்துவம் 5 | வித்யாதத்துவம் 7 | ஆத்மதத்துவம் 24 |
| சிவம் 1 | கால 1 | மனம் 1 |
| சக்தி 2 | நியதி 2 | புத்தி 2 |
| சாதாக்யம் 3 | கலா 3 | சித்தம் 3 |
| ஈஸ்வரன் 4 | வித்யை 4 | |
| சுத்தவித்யா 5 | அராகம் 6 | அஹக்காரம் 4 |
| | புருஷன் 6 | |
| | மாயை 7 | |
| ஞானேந்திரியம் | கர்மேந்திரியம் | பஞ்சபூதம் |
| மெய் 5 | வாக் 10 | ப்ருத்வி 5 |
| வாய் 6 | பாணி 11 | அப்பு 16 |
| கண் 7 | பாதம் 12 | தேயு 17 |
| மூக்கு 8 | பாயு 13 | வாயு 18 |
| செவி 9 | உபஸ்தம் 14 | ஆகாசம் 19 |

புருசதன்மாத்திரை

கந்தம் 20 ரசம் 21 ரூபம் 22 ஸ்பர்ஷம் 23, சப்தம் 24

(மாயை உடல், உளம், உயிர்சார்ந்த உடற்கூறுகளின் ஆன்மீகம் சார்ந்த அகப்பொருள் தெறிநிலை விளக்கப் பெயர்)

| | | |
|---|---|---|
| சிவதத்வம் 5 | வித்யாதத்வம் 7 | ஆத்மதத்துவம் 24 |

36 தத்வம்

சரீரம் 5

| | | | | |
|---|---|---|---|---|
| தூல | சூஷ்ம | குண | கஞ்சுக | காரண |
| சரீரம் 1 | சாரீரம் 2 | சரீரம் 3 | சாரீரம் 4 | சாரீரம் 5 |

மேற்கண்ட மாயை நித்தியப் பொருள் அறிவற்றது. அதாவது உடல் மற்றும் அதன் புறம் சுகம் சார்ந்த அனைத்துமாம் இது ஆன்மாக்களை உய்வு செய்ய உதவும். ஆனவ மலத்தோடு மாயா மலம் சேருவதனால் ஆன்மாக்களுக்கு சிறிது மயக்கத்தைச் செய்யும். மற்ற இரண்டு மலத்தோடு இணைந்தே இயங்கும் தனித்து நில்லாது.

அனைத்து சைவத்திலும் உள்ள நால்வகைப் பிரிவு

ஆகமங்கள் ஆன்மாக்களுக்கு இறைவுணர்வு ஏற்படுத்துவதற்கு மனிதர்களின் இயல்பு குணம், தகுதி, சார்ந்து சில வழிகளைச் சொல்கிறது.

மனிதனானவன் உடல், உள்ளம், அறிவு ஆன்மா, எண்ணம் இவை சேர்ந்த கலவையே, இதில் எண்ணமாவது, மற்ற நான்கையும் சார்ந்தே இயங்கும். அப்படி இயங்கும் விதத்தில் எந்த ஒன்றை அதிகமாக சார்ந்து இயங்குகிறான் என்பதை வைத்தே அவனுக்கான நெறியைத் தீர்வு செய்கிறது ஆகமம்.

சர்யா பிரதானம், கிரியா பிரதானம், யோக பிரதானம், ஞானபிரதானம்

எண்ணமாவது அதிகமாக உடல் சார்ந்தால் சரியை ப்ரதானம்.

எண்ணமானது அதிகமாக உள்ளம் சார்ந்தால் கிரியா ப்ரதானம்.

எண்ணமாவது அதிகமாக அறிவு சார்ந்தால் யோக ப்ரதானம்

எண்ணமாவது அதிகமாக ஆன்மா சார்ந்தால் ஞானம் பிரதானம்

ஞானம் க்ரியாச சர்யா யோகச் சேதி சுரேச்வரி சதுஷ் பாத சமாக்யாத மம தர்ம சனாதந:"

என்ற ஆகமப் ப்ரமானப்படி அளவை சரியை, கிரியை, யோகம், ஞானம் ஒவ்வொன்றனுள் மற்ற மூன்றும் அடங்கி அதனதன் தன்மையில் முக்கியத்துவம் பெற்று நிற்பதே சர்யா ப்ரதானம் முதலானவை.

| சரியையில் | கிரியையில் | யோகத்தில் | ஞானத்தில் |
|---|---|---|---|
| சரியை<br>கிரியை<br>யோகம்<br>ஞானம்<br>சரியாப்பிரதானம் | சரியா<br>கிரியா<br>யோகம்<br>ஞானம்<br>க்ரியாப்ரதானம் | சரியா<br>கிரியா<br>யோகம்<br>ஞானம்<br>யோகப்ரதானம் | சரியா<br>கிரியா<br>யோகம்<br>ஞானம்<br>ஞானப்ரதானம் |

மேற்கண்ட 16 வகை வழியும் முறையே அறம், பொருள், இன்பம், வீடு போற்ற பெரும் முகத்தால் முயலப் பெறுவது.

தர்ம, அர்த்த, காம, மோக்ஷஞ்ச, விந்ததி

| தாமர்த்த காம மோக்ஷஞ்ச விந்ததி (உப., ப.303) | | | |
|---|---|---|---|
| சரியாப்ரதானம் | க்ரியாப்ரதானம் | யோகப்ரதானம் | ஞானப்ரதானம் |
| சமயதீக்ஷா | விசேஷதீக்ஷா | நிர்வாணதீக்ஷா | ஆசார்யதீக்ஷா |
| ஆசாரம் | அனுஷ்டானம் | சும்ஸ்காரம் | உபதேசம் |
| குருபூஜா | ரூபபூஷா | ரூபாஅரூபாபூஜா | அரூபபூஜா |
| பத்ததி | கல்பம் | உபாகமம் | ஆகமம் |
| வைதீகசந்தி | ஔபசானம் | யமநியம | சிரவணம் |
| சைவசந்தி | சோடசசம்ஸ்காரம் | ப்ரத்யாஹார,தாரணை | நிதித்தயாசனம் |
| தேவசேவா | பரார்த்தபூஜா | த்யானசமாதி | அனுசந்தானம் |
| மந்தம் | மந்ததரம் | தீவ்ரம் | தீவ்ரதரம் |
| அப்பர் | சம்மந்தர் | சுந்தரர் | மணிவாசகர் |
| அறங்காவலர் | சிவாச்சாரியார் | கட்டளைத் தம்பிரான் | குருமகா சந்நிதானம் |
| செய்யும்தொழில் | ஆலயம் | சமஸ்தானம் | மடம் |
| சாமான்யசைவர் | சுத்த சைவர் | மிச்ரசைவர் | வீரசைவர் |
| 25 வயது வரை பிரம்மசரி | 50 வயது வரை கிரஹஸ்தன் | 75 வயதுவர வானப்ரஸ்தன் | 100 வயதுவரை சன்யாஸர் |

மேற்கண்ட 16 வகையான அடிப்படையிலேயே செய்யப்படும் மனம், வாக்கு, புத்தி, காயத்தினாலே செய்ய வேண்டிய கருமம் யாவும் அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் அடுத்த நிலையில் உள்ள படிக்கட்டுகள் போன்றவை. ஒன்றை ஒன்று சார்ந்தும் சாராத வகையில் பூரண பயணைத் தராது எனவும் இதையே,

> நாலுபேர் போன பாதை,
> சமயக்குரவர் நால்வர் அன்பு நெறி,
> சந்தானக் குரவர் நால்வர் அறிவு நெறி,
> சதமானம் பவதி சதாயு புருஷ சதேந்த்ரியே,
> ஆயுஷ் ஷேவேந்திரியே ப்ரதிதிஷ்டதி,
> பதினாறும் பெற்று பெறுவாழ்வு வாழ்க

என்பதை மேற்கண்ட வாழ்த்து, வழக்குச் சொல் போன்றவற்றால் நன்கு உணர வேண்டும். 16 என்பது சரியை முதலான 16 பிரிவு ஆகும்.

முப்பொருள் தொடர்பு உணர்த்தும் உண்மை

காணும் உலகம் யாவும் தோன்றி நிலைத்து அழிதலினாலே அதனைச்

செய்தவன் ஒருவன் உளன் (சிவ.1)

"அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கிய மலத்துள அந்தம் ஆதி என்மனார் புலவர்" (சி.போ.சூ.1)

அவன்சம்ஹார கர்த்தா அவன் உலகத்தை முத்தொழில் படுத்தலின் காரணம் ஆன்மாக்களை முக்தியடைய என்ற கருணையினாலே.

கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே (சுப.75:4)

ஆன்மாக்கள் ஏன் முக்தி அடைய வேண்டும். வினைக்கேற்ப இன்ப துன்பத்திற்குள்ளாகி பிறப்பிறப்பால் அலைகழிக்கப்படுவதே, அப்படி அலை கழிக்கப்படுவதன் காரணம் பாசம்.

அந்தப் பாசத்தை அறுத்தால் பதியோடு பசு சேர்ந்து பிறப்பிறப்பற்று என்று இன்ப நிலைப் பெற்றுத் திகழும்.

"பாசமாம் பற்றறுத்து பாரிக்கும் ஆரியனே" (தி.65) பாசம் அறுத்தற்கு வழி பஞ்சாஷரம் முறைப்படி தியானிப்பதாம். அப்படி தியானப்பதால், இறைவன் "மானுடச் சட்டைத்தாங்கி" குருவடிவில் தோன்றி பாசம் அறுத்து அருள் புரிவான்.

"லப்தவா சிவ பதச்சாயாம், த்யாயேத் பதம் பஞ்சாஷரீம் சுதீ" [15]

அப்படி முக்தி நிலையை அடைந்தவர்கள் இறைவனிடத்து மயக்கமற்ற தூய்மையான அன்பு செலுத்துவதால் அடியார் வேடத்தையும், ஆலயத்தையும் ஹரனாக கருதி மகிழ்ந்து தொழுவார்கள்.

மாலறநேன்யம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும்
அரன் எனத் தொழுமே (சி.போ.12)

அப்படி தொழுதற்குரிய கோயிலை அமைத்து அதில் இறைவனை எழுந்தருளச் செய்தும் அதைத் தொடர்ந்து நிலை பெறச் செய்தலும் ஆகிய இறையருட் பூசனை விதியே நம் ஆய்வுப் பகுதியாகும். கொள்கைகளாக விளக்கப்பட்டிருக்கும் முப்பொருள் உண்மையை நடைமுறைப்படுத்திய செயலாக்க வடிவம்தான் ஆலயத் தோற்றத்தின் வித்து.

# 3. வடமொழியில் ஆதிசைவனின் அறக்கொள்கை

*ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அருளிய ஞானவரண விளக்கமும் வெள்ளியம் பலவான சுவாமிகள் அருளிய மாபாடியமும் (முதல் மூன்று பாகம்) பரபக்கம். ஞானாந்தம் அளவியல் பக்கம் 241, 242, 243, 244, 245.*

இப்பகுதியில் உள்ள ஆதிசைவ அறக்கொள்கையானது மொழி மாற்றம் செய்யப்பட்டு இங்கே விளக்கப்பட்டுள்ளது.

வடமொழியில்நால்வகைப் பாகுபாடு

*சுத்த சைவம்*

சுத்த சைவம் இறை வழிபாட்டு நெறியைப் பற்றிய குறிப்பே ஆகும். இது சித்தாந்த நிச்சயம் என்ற நூலின் வழி சுருங்க கொடுக்கப்பட்டுள்ள வடமொழியின் தமிழாக்கமே.

*சுத்த சைவ சமயமானது சமான்ய சைவம் (சரியை பிரதானம்), மிச்ர சைவம் (கிரியை பிரதானம்), சுத்த சைவம் (யோக பிரதானம்), வீர சைவம் (ஞானபிரனம்) என நான்கு வகைப்படும்.*

*சாமான்ய சைவம் (வேளாளர் நெறி)*

*எப்பொழுது சிவலிங்கத்தைப் பார்க்கிறோமோ அதை அப்பொழுதே தொழுவது.*

*சுற்றியாவது (பிரதஷிணம்) கை கூப்பி தொழுதாவது, பார்த்து வணங்கியாவது செய்ய வேண்டியது.*

*திருநீரைத் தரித்த மாத்திரத்திமே தூய்மை உடையவனாய் ஆவது.*

*சிவ புகழைப் பேசுவது. சிவன் அன்பர்களிடத்து தீரா அன்புடையோனாய் திகழ்வது.*

*இவைகளையே பின்பற்ற வேண்டியது. வேறு தனியாக ஏதும் (ஜபம், பூஜா, ஹோமம் போன்றவை) இல்லாதது.*

மிச்ர சைவம் (பூசாரி)

சைவம், வைஷ்ணவம், கௌமாரம், கானாபத்யம், சௌரம், சாக்தம் பிற வழிபாட்டு தேவர்களுடைய பூஜையைப் பின்பற்ற வேண்டியது.

அந்தந்த தேவதைகளுக்குரிய மந்திரத்தைப் பயன்படுத்தி அவை குறிப்பிடும் அடையாளத்தில் (உருவத்தில்) வழிபடுவது.

மேற்கண்ட எல்லா சமய தெய்வத்தையும் வழிபடுவதால் மிச்ரசைவம் எனப்பட்டது.

சுத்த சைவம் (ஆதி சைவர்கள்)

தூய்மையினால் சிவன் பொருட்டு சிவனால் தோற்றுவிக்கப்பட்ட சைவம் சுத்த சைவம்.

சுத்தமும், சைவமும் சமயோகமாய் சேர்ந்திருதலால் சுத்த சைவம் எனப்படுகிறது.

சிவனால் தோற்றுவிக்கப்பட்டதால் சைவம்; அதிலிருந்து தோன்றியவர்கள் சிவ வேதியர்களாம்.

சிவ வேதியர்களாகிய அந்தனர்களுள் சிறந்தோர் “ஆதி சைவர்கள்” எனப் புகழப்பட்டனர்.

கௌசிகர், காசியபர், பரத்வாஜர், கௌதமர், அகஸ்தியர் இவர்கள் சிவனின் ஐந்து திருமுகங்களால் திக்ஷிகப்பட்டவர்கள்.

இவர்கள் ஐவர் வம்சத்தில் தோன்றியவர்களே சிவ வேதியர் என எண்ணப்பட்டனர்.

பிறர் வம்சத்தில் தோன்றியவர்கள் திக்ஷிக்கப் பட்டவர்களாயினும் அவ்வாறு ஆகாரே.

இவர்கள் முறையே காமிகத்தை முதலாக உடைய 28 ஆகமங்களிலும், வேத, சாஸ்திரம் முதலிய அனைத்திலும் பழக்கமுடையவர்களாயும்

சிவனைத் தவிர வேறெந்த தெய்வத்தையும் வணங்காதவர்களாயும் உளர்.

கர்ஷனம் முதல் பிரதிஷடை வரையினும், பிரதிஷ்டை முதல் உத்ஸவம் வரையிலும், உத்ஸவம் முதல் ப்ராய்சித்தம் வரையிலும், எல்லாவற்றையும் நன்கு அறிந்தவராயும் பின்பற்றுவர்களுமாம்.

மந்திர, யந்திர, கிரியா, முத்ரா, நியாச, ஆவாஹன முதலியவைகளினால் உபசாரங்களினால் பலவிதமான லிங்கத்தில்

(இறைத்திரு உருவத்தில்) அடையாளத்திற்குரியவரை வேட்பிக்க வேண்டும் (வழிபாட்டு நெறியில்).

பிராசாதம், பிரணவம், ஹம்சம், வியோ மவ்யாபி, சிவாக்ஷரம், அகோரம், தக்ஷிசினாமூர்த்தி, ம்ருத்யுஞ்ஜயம், அதற்கும் மேலானததையும்

ருத்ரனையும் மேலான ச்ரிமத் பஞ்சாக்ஷரத்தையும்

அகோரஸ்த்ரம், சிவாஸ்தரம் அதுபோலவே பாசு பதாஸ்த்ரத்தையும்

12 மந்திரங்களிலே சிவ மந்திரத்தை உத்தமமாக கொண்டு (வழிபட வேண்டும்).

அஸ்தர முத்ரா, வக்த்ர, மஹாமுத்ரா, அதனினும் மேலான சோதானாக்யா, மஹாமுத்ரா, அதைத் தொடர்ந்து சம்ஹிருதி முத்ரா, பஞ்சமுகிமுத்ரா அதுபோலவே சுரபிமுத்ரா

இதுபோல் எட்டு வகை முத்திரை கூறப்பட்டுள்ளது.

முத்திரைகளின் இலக்கணமாம்

ஆத்மார்த்தம், பரார்த்ம் என்று பூசை இரு வகையுள்ளது.

குருவினால் கொடுக்கப்பட்டுள்ள லிங்கத்திலோ, மண்டல வடிவிலோ, ஆத்மாவிலோ, ஆத்மார்த்தம் என்று கூறும் இதை செய்கிறார்கள்

பரார்த்த பூஜை (யை)

கிராமங்களில் நிறுவப்பட்ட லிங்கத்திலே, அப்படியில்லை எனில், தேவதையிலோ (உருவங்கள், உருவத்திருமேனி) எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க (ஸ்ர்வப்ராண ஹிதாவஹம்) செய்கிறார்கள்.

சிவத்விஜர்களால் செய்யப்படும் இரண்டு வகை பூஜைகளில் முன்னவர் அனைவரும் தன் பொருட்டு பூஜிக்கலாம். பரார்த்தம் பிறரால் செய்யத்தக்கன அல்ல.

மோகத்தினாலோ லாபத்தினாலோ செய்வார்களேயானால் அரசனுக்கும், அரசுக்கும் கேடு வரும்.

சிவத்தின் ஆவரண (சூழ்ந்த) தேவதையையும், எல்லோரும் பூசிக்கலாம் இரகசியமாக.

மீண்டும் நிலையில் உள்ள அனைவரும் அன்ய (பிற) தேவதைகளை பூசிக்க வேண்டும்.

மந்திர பிண்டத்திலோ (யந்திரம்) இதயத் தாமரையிலோ வசிக்க செய்யப்பட்ட மந்திரத்தை நினைப்போனாக.

ஆவாஹனம் முதலியவற்றோடு கூட விக்ரஹத்தில் பூசையை செய்ய வேண்டும்.

மந்திர லிங்கம் சரீரத்தில் உள்ளது. அதுவே பரமசிவன் என்று கருதி பூசிக்க வேண்டும். இதுவே சுத்த சைவம் எனப்பட்டது.

வேறிடத்தில் ஆதிசைவர் விசயத்தில் சன்யாஸம், உபவாஸம், விரதம், யஞ்ஞகர்மம், தீர்த்தயாத்ராநுகமணம் இவ்வைந்தும் சைவர்களால் விட்டுவிட வேண்டியது.

வீரசைவம் (ஞானப்ரதரானம்)

வீரசைவம் ஞானபாகம் ப்ரதானமானது. ஆன்மாக்களின் ஆணவமலம், ஆணவம், கண்மம் 2-ம் உடைய, ஆணவ, கண்ம, மாயா 3-ம் உடைய விஞ்ஞானகலர், ப்ரளயகளர் என்ற சீடன் பக்குவத்திற்கேற்ப மூன்றாகப் பிரித்து விளக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

எளியது, தேவபூசை மற்றும் ஆசாரம் அறியதானதும், ரஹச்யமானாதும் கைவல்யம் என்ற நிலை காரணமானது.

வீர சைவமே என அறிய வேண்டியது. ஒன்றேயான இது அனைத்திலும் குறைவர சாரமாயுள்ளது எதுவோ, அக்காரணம் பற்றியே வீர சைவம் எனப்பட்டது.

சிவத்துடன் சம்பந்தப்படுவதால், அறிவுடையோர்களால் சைவம் என்று நிலை நிறுத்தப்பட்டது.

மேற்கண்ட இரண்டும் இரண்டற கலந்ததாக பாவித்ததாலே வீர சைவம் என்று எண்ணப்பட்டது.

வீரமாஹேச்வரம் என்ற நெறியானது மூன்று விதமாய் முதலில் சாமான்ய லக்ஷனம் (இலக்கணம்) கூறப்படுகிறது.

சாமானியம் (சகலருக்கு)

கைகள், நெற்றி, இதயத்திலும், விபூதி பட்டையைத் தரித்துக் கொள்வதனால் சிவதேஹி என்று அறியப்படுகிறவன் அனைத்து பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

குருவினால் கொடுக்கப்பட்ட லிங்கத்தைச் சிவ மந்திரத்தினால் தரித்துக் கொள்கிறான்.

தலையுச்சியில், கழுத்தில், தோலில், கரத்தில், இதயத்தில், வயிற்றுப் பகுதியில் இவற்றுள் ஏதேனும் ஒரு பகுதியில் சிவலிங்கத்தைத் தரிக்க வேண்டும்.

ஒரு வேலை, இரண்டு, மூன்று வேலைகளாவது வழிபட வேண்டும்.

குரு, லிங்கம் அதுபோலவே விபூதியிடத்தினும் பக்தி செய்ய வேண்டும்.

விசேஷ (பிரலயகலருக்கு)

சிவ கும்பம் நிறுவி சிவமண்டலா காரத்தையும் நிறுவி, அதைப் பூசித்து வணங்கி மீதமுள்ள முறைகளை திக்ஷா விதி முறைப்படி செய்து மல, பாசங்களின்நுவிடுவித்து "பாசாதி மோசனம்" குரு சீடனை நோக்கி (நயனதீக்ஷா) தத்துவதே ஹத்தை சிந்திக்க வேண்டும்.

சிவ கும்ப தீர்த்தத்தைச் சீடனுக்கு அபிஷேகம் (நீராட்டி) செய்து சிவத்தினால், நாதம் விந்து கலைகளை முறைப்படி அந்தந்த இடத்தில் அடைக்க வேண்டும்.

ஷட்கம், ஷடங்கம், ஷடத்வாநம், ஷடாவநம். அந்தந்த இடத்தில் நியாசித்து (மந்திரங்களை யோகமுறைப்படி உடலில் அடைத்தல்)

பஞ்சப்ரமம் மந்திரம், மூலமந்திரம், உபதேசித்து லிங்கத்தை ஸ்தாபிக்க நிறுவ வேண்டும் (உடலில்)

குறிப்பிட விட்டு போனவை தீக்ஷாமுறைப்படி செய்க, தேஹத்தை ப்ராணனிடத்தில் இணைத்து ப்ராணணில் லிங்கத்தைத் தோற்றுவித்தல்.

அதனிடத்திலிருந்து யோக பாவத்தால் இரண்டையும் பிரியாமல் இணைத்துக் கற்பிக்க வேண்டும்.

பிறர் பார்த்த பொருள்களை விளக்கி தூய்மையான பொருள்களைச் சேர்த்து உடை பொருளாகிய லிங்கத்திற்கு சமர்ப்பிக்க வேண்டும்.

என்ற விரதத்தை எடுத்துக் கொண்டவர் சிறப்பான வீரசைவர் எனப்படுவர்.

நிராஹாரம் (விஞ்ஞானகலர்)

எல்லா சுகத்தையும் விட்டு சித்தத்தைச் சிவத்தில் லயிக்கச் செய்ய வேண்டும்.

தண்டம், கௌபினம், காஷாயம், ஜடை, மரவுரி, தரித்தவனாய் முடிமழித்து சிவச் சின்னங்களைத் தரித்து, புலி, மான் தோலாசனத்திலமர்ந்து பிச்சை எடுத்து மறைவான உணவை உண்டு இன்பத்தையும், இல்லறத்தையும் துறந்தவன்.

நிராஹாரன் என்னும் அவனே சிவன் என்று அறியப்பட வேண்டியவன்.

வீர. மாஹேச்வரனின் சாமான்ய விரதமாக கூறப்பட்டது முன்னர் கூறப்பட்ட சிவ முத்திரைகளில் (செய்யப்பட்ட நிலைப்பாடு) (யோக பயிற்சி) எப்போதும் நிலைத்தவனாய்

பிராணனை அறிவதையே பயனாகக் கொண்டவனும், அதனிடத்து அன்பு செலுத்துபவனும்

தீமைகளைச் செய்யாதவனும், யாரேனும் செய்தக்கால் முக்கரணங்களாலும் தான் அவைகளை விளக்கி, செய்கிறவனைத் தண்டித்து அவன் வலிமை அடக்கி

கரணங்கள் விலகிற்றோவேனில் புத்தியினால் அதை நிலை நிறுத்தி, எப்படியே வெனில் குருவினால் தீக்ஷையை தொடர்ந்து மல பாசம் விலக்குவது போல் விலக்கி அந்த வினாடியிலிருந்து லிங்கம், பிராணன் பிறவற்றை யோக பாவனையினால் ஒன்று சேர்த்து நிறுத்துவானாக.

உடலைப் பிராணனைத் தொடர்ந்து நிலை நிறுத்தி பிராணலிங்கத்தில் நிலைப்படுத்துக.

பிராணனில் நிலைப்படுத்தப்பட்ட லிங்கம் மீண்டும் தனித்தனியாக பிரித்தெடுக்க முடியாது. இதுவே வீரசைவ முறை என அறிக.

கொள்கையும் கொள்முறையும்

மேற்கண்ட கொள்கைகளை மனத்தில் நிலைநிறுத்தி அதை தானுணர்ந்து பிறர்க்கு உணர்த்தும் வகையிலும் முயலுவது தான் ஆதிசைவத்தின் (சுத்த சைவம்) நோக்கமும் செயல்பாடும்.

அதன் வழிதான் முன் சொன்ன சரியா முதலிய நெறி முறைகளாலும் பிறருக்கு உதவும் வகையில் சமுதாயம் சார்ந்து இயங்குவதன் நெறிமுறை ஆகம நெறி என்றும், அதன் வழிகள் ஒரு சமுதாயமே ஆன்ம உணர்வைத் தந்து நிலை சார்ந்து பக்குவமடைந்து முக்தி பெற வைக்கும் சாதனந்தான் பொது ஆலய வழிபாட்டு

நெறியாகும். அந்த நெறியை மையமாக வைத்தே மேற்கண்ட நான்கு நிலையிலுள்ளோருக்கு மையஸ்தானமே ஆலயம் எனவும் அதன் வழிபாட்டு முறை நூல்களில் ஒன்றே நம் ஆய்வுப் பகுதியாகும்.

முதன்மையான பூசை

முன்சொன்ன நால்வகை பூசைகளுமே சிறந்தது என அறியத்தக்கது. எதன் பொருட்டோவெனில், சாதகன் தான் பூசையைச் செய்ய வேண்டிவன். சாதகனின் மனம் முதலிய பக்குவநிலை குறித்தே சரியை முதலானவைகளுள் ஏதேனும் குரு முகத்தான் ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும்.

ஒவ்வொரு சாதகனும் தான் பின்பற்றுவது எதுவோ, அதுதான் சிறந்தது என நினைத்து பின்பற்ற வேண்டும். அதனால், எவன்எதை பின்பற்றுகிறானோ, அவனைப் பற்றி அதுவே சிறந்தது என உணர வேண்டும்.

மேலும், சரியை முடிவில் கிரியையும், கிரியை முடிவில் யோகத்தையும், யோக முடிவில் ஞானமும், ஞானத்தின் முடிவில் அனுபூதியும் சித்திக்கும்

உ.தா.

உச்சரிப்பு முறை - அ - சரியை

அ. என்ற எழுத்தறிவு - அ - கிரியா

தனிச்சிறப்பும் இலக்கணமும் சொல்லறிவும் - அ - யோகம்

அமைவிடம் சார்ந்த இலக்கிய அறிவு - அ - ஞானம்

பொருளறிந்து பயன்பாட்டிற்கே கற்றலால் கற்றிலின் பயனை முழுமையாய் தருவது அனுபூதியை, அது ஞானத்தால் வருவதால் ஞானபூசையே சிறந்தது.

மேற்கண்ட (உ.தா) கிரியை என்பதால், விளக்கப்படும் "இலக்கணம்" என்ற வகையில் ஒரு 'அ' அகரத்தின் அனைத்து நிலைக் கோட்பாடுகளையும் உணர்த்துவதால், கிரியா பிரதானமாக விளங்கும் ஆலயம் சார்ந்தே.

"அலகிட்டு கும்பிட்டு" - என்ற சரியையும்

"ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே - என்ற ஞானமும்

"சிந்தை செய் சிவபூசையும்" - என்ற கிரியையும்

"உடம்பெனும் மனையகத்து". - என்ற யோகமும்

அமைந்திருப்பதை நன்கு உணரலாம்.

# 4. தென் தமிழில் அந்தணன்

வடமொழியில் உள்ளது போல் தென்மொழியிலும் நால்வகைப்பாகுபாடு குறிப்பிடப்படுகிறது. இது பிறப்பின் அடிப்படையிலில்லை. தொழிலின் அடிப்படையிலேயே உள்ளது என்பதைத் தொல்காப்பியர் வழி காண்போம்.

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி
(தொல்.பொரு.மர.81)

உழவுத் தொழிலைச் செய்வதனாலேயே உழவன் எனப்பட்டான்.

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை
(தொல்.பொரு.மர.78)

வாணிகத் தொழிலைச் செய்வதனாலேயே வைசிகன் எனப்பட்டான்.

படையும் கொடியும் குடியும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய
(தொல்.பொரு.மர.71)

படைகளை நடத்துபவனும், அறத்தையும், மக்களையும் காத்தல் என்ற செயலைச் செய்வதனாலேயே அரசன் எனப்பட்டான்.

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயும் காலை அந்தணர்க்கு உரிய (தொல்.பொரு.மர.70)

வேதத்தில் கூறப்பட்டுள்ள செயலைச் செய்பவன் அந்தணன். அந்தணர்க்கும், அரசுக்கும் உண்டான சின்னங்கள் வெவ்வேறு செயலின் தன்மையைச் சுட்டும் (எ.டு.) அரசனின் வென்கொற்றக்குடை-அறத்தையே சுட்டும் அந்தணனின் பூனூல் - வேதத்தை அறியும் செயலைச் சுட்டுகிறது.

அந்தணர்க்கு உரியனவும் அரசர்க்கு
ஒன்றிய வடூஉம் பொருளுமார் உளவோ
(தொள்.பொரு.மர.73)

தொழிலின் அடிப்படையில் பாகுபடுத்தப்படுகிறது என்றும், ஒருவருக்கொருவர் மாற்றி (பிறப்பின் அடிப்படையில் அல்லாமல்) தொழிலைச் செய்யலாம் என்பதனால் தென் மொழிப்பாகுபாடு என்பது பிறப்பின் அடிப்படையில் அல்ல செயலின் அடிப்படையிலே என்பது உறுதியாகிறது.

எண்ணிக்கையைப் பொறுத்தவரை வடமொழியில் நான்கு சாதிகள் மட்டுமே கூறப்படுகிறன. தென் மொழியில் இலக்கியங்களிலேயே நான்கிற்கும் மேற்பட்ட சாதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

கண்ணு ளாளர் கருவிக் குயிலுவர்
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந் தொருபால்
முழவுக்கண் டுயிலாது முடுக்கரும் வீதியும்

(சில.புகா.இ.184-187)

என்கிறது சிலப்பதிகாரம்.

வடமொழியில் உள்ளதைப் போல் அந்தணர்களுக்கு என்று தெளிவான வரையறை (அறம்) தென்மொழியில் உள்ள அந்தணர்களுக்கு குறிப்பிடப்படவில்லை. எனவே தமிழ் இலக்கிய, இலக்கண, அகராதியில் ஆங்காங்கே கூறப்பட்டுள்ள அந்தணர்களைப் பற்றிய படைப்புகளை ஒன்றாக தொகுத்து ஒருவாறு வரையறை செய்ய முயலப்பட்டுள்ளது.

அந்தணன் என்பவன் யாக்கையின் பதினெண் வகை குற்றத்தை இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு நீக்க முயலுகிற வழியில் அறுவகைப்பட்ட தொழிலைச் செய்பவனும், அனைவ ருக்கும் முன்னின்று நன்மை செய்பவனும் (புரோகிதன்) தன் வாழ்க்கையையே பிறருக்குப் பாடமாக உபதேசிப்பவனும் (ஆசாரியன்) தொடங்கிய செயலை இடையறாது (தொழிலரா) செய்பவனுமாகவும் உயர்ந்த ஒழுக்க முடையவனாகிறான் என்று அவனது குண நலன்களைப் பற்றியும் பூணூல் அணிந்தவனும் (முப்புரிநூலோர்) கையில் நீர்பாத்திரத்தினையும் முக்கோலையும் குடையையும் கொண்டவனும், தர்பைபாயில் அமர்பவனும் சதாமந்திரத்தினை நவில்பவனும் இறையை வணங்குபவனும், தேசத்துள்ளவனும் (எக்காரணத்தைக் கொண்டும் இருப்பிடத்தை மாற்றிக் கொள்ளாதவன்) என்றவாறு அவனது வடிவத்தைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது.

ஐவகை நிலத்தில் உள்ள ஆலயங்களில் பிறருக்காக வழிபாடு செய்விப்பவனுமாகு அவனது தொழிலைப் பற்றி குறிப்பிடப் படுகிறது.

அந்தணனின் பணிக்களமாக ஆலயம் விளங்குவதால் அதன் தோற்றத்தைப் பற்றியும் அறிந்து கொள்வது இன்றியமையாததாகிறது.

அந்தணர்களின் வகை

இருபிறப்பாளர்களைச் சுட்ட இலக்கியம் பயன்படுத்தும் சொல் வேறுபாட்டைக் கொண்டு விளங்கிக் கொள்ளலாம். இவை ஒன்றுபோல் தோன்றினாலும் நுட்பமான பலவேறுபாடுகளை உடையது. அதனால் முதலில் பெயரும் பின்னர் சான்றும் தரப்படுகிறது.

இந்த அந்தணர்கள் யாக்கை குற்றத்தை நீக்கி நலம் பெற

அ. கடவுட்பேணி - (ஆலய அர்ச்சகர்)

முரண்பாடு கருங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருத்திறன் மரபிற் கடவுட் பேணியர் (பதி.21.1)

ஆ. அறம்பேணி - நீதித்துறை

மாமுது பார்ப்பன் மறைவழி காட்டிட
தீவலஞ் செய்து காண்பார்கணோன் பென்னை
(சில.மவா.54)

இ. அறிவுப் பேணி - (ஆசான்)

மறையறிய அந்தண் புலவர் முறையொடு (நான்.91)

ஈ. அமரர் பேணி - (பிறப்பு, இறப்பு சடங்கு செய்பவர்)

அமரர்ப் பேணியும் ஆவதி அருந்தியும் (புறம்.99:1)

உ. அரசுப் பேணி - (அரசு நிர்வாகத்துறை) புரோகிதர்

நட்பாளரும், அந்தணாளரும் மடைத்தொழில் வீரரும், மருத்துவம் செய்நரும் நிமித்தக் காரரும் நீள்நில வேந்தருக்கு உரைத்த ஐம்பேர் உறுதிச் சுற்றம் (திவா.பா 2360)

ஊ. ஆருடம் பேணி - (பஞ்சாங்காரர்) - (குறிசொல்லி)

சொற்பொருள் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
(பதி.21.19)

என இவர்கள் வெவ்வேறு துறையில் இருந்தாலும் யாக்கை குற்றம் நீங்கிய போது, இருபிறப்பாளர் என்ற ஒரே பொதுப் பெயரால் அழைக்கப்படுகிறார்கள்.

*கடவுட் பேணி (குருக்கள்)*

இவர்கள் பிறருக்காக பொதுவில் அமைக்கப்பட்டிருக்கிற ஆலயங்களில் உள்ள இறைத் திருமேனியை வழிபாடு செய்பவர்கள்.

*அறம் பேணி (அமாத்தியர்)*

அரசு சார்பில் நீதிவழங்குபவர்களாக இருந்து சமூகத் தொண்டாற்றி வந்தனர்.

*அறிவுப் பேணி (ஆச்சார்யர்)*

இவர்கள் வேதம் மற்றும் அதுசார்ந்த அறநூல்களைக் கற்பவராகவும் கற்பிப்பவராகவும் உள்ளனர்.

*அமரர் பேணி (உபாத்தியாயர்)*

பிறப்பு இறப்பு சடங்குகளைச் செய்பவர்கள்

*அரசுப் பேணி (புரோகிதர்)*

முன்னின்று நன்மை செய்பவர். அரசு நிர்வாகத்தில் உடனிருந்து செயல்படுவர்.

*ஆருடம் பேணி (நிமித்தகாரர்)*

அரசுக்கும், மக்களுக்கும் எண்ணியது எண்ணியவாறு எய்த காலத்தை அறிந்து இடத்தோடு பொருந்தும் செயலை விளக்குபவன்.

இவ்அறுவருள் கடவுட் பேணியைப் பற்றி விரிவாக விளக்குவதே ஆதிசைவம்.

**ஐவகை நிலத்து அறுவகை ஆதிசைவப் பிரிவு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வழிபாட்டு கடவுளின் பெயர் | மால் | சேயோன் | வேந்தன் | ஞாயிறு கொற்றவை | வருணன் |
| வழிபடும் மதம் | மாயோன்மேய காடுறை உகலம் | சேயோன மேய மைவரை உலகம் | வேந்தன்மேய தீம்புனல் உலகம் | குறிஞ்சியும் முல்லையும் முறைமை தப்பிவிளைந்த பாலையே | வருணன்மேய பெருமணல் உலகம் |

*(தொல்காப்பியம் அகத்திணையியல் பாடல் ஐந்தின் வழி)*

இங்கு உலகம் என்பது ஆகுபெயரால்
அவ்வந்நிலத்து மக்களைக் குறித்தது

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வழிபடுவோர் | தோன்றல் ஆயர் ஆய்ச்சியர் | வெற்பன் குறவர் குறத்தியர் | ஊரன் உழவர் உழத்தியர் | எயினர் எயிற்றியர் | சேர்ப்பன் பரதவன் பரத்தியர் |
| பிறருக்காக வழிபாடு செய்யும் கடவுட் பேணியின் தனிநிலை பெயர் | அடியார் (அடியைத் தொழுவதால்) | வேலார் (வேலனை வணங்குவோர்) | ஊரார் (இடம் பெயராதவர்) | ஐயர் (ஐயமற நின்றோன்) | சாமி ஆடி (அடுத்து கேட்பதனால்) |

**தென்தமிழில் வழங்கப்படும் அறுவகைப்பட்ட ஆலய அர்ச்சகர்களின் பெயர் குறித்த விளக்கம்**

ஐவகை நிலத்திற்கு உரிய கடவுள்களைப் பிறருக்காக வழிபாடு செய்பவர்கள் கடவுட்பேணி என்ற சொல்லில் குறிப்பிடப் படுகின்றனர்.

குறிஞ்சி-வேலார்

''வேலை'' (வேலன்-முருகனை வழிபடுவோன்)

வணங்குவதையே வேலையாகக் கொண்டவர்கள்.

முல்லை-அடியார்

திருமாலின் திருவடியைத் தாங்குகிற அடியவர்கள் (வைணவ ஆலங்களில் தலையில் வகைப்படம் ஜடாரியே இதற்கு சான்றாகிறது). அடியார்க்கு நல்லார் என்ற பெயரைக் கொண்டும் உணரலாம்.

மருதம் - பார்ப்பணர்

வேள்வி என்பது மந்திரத்தால் ஓம்பப்படும் தீயாம். வேள்வித் தலைவனானதால் வேந்தன் என அழைக்கப்படுகிறான் (இந்திரன்). வேள்விக்கு முக்கியம் மந்திரம். அந்த மந்திரத்தைக் கண்டதனாலே பார்ப்பான் எனப்பட்டனர்.

ரிஷிப்ரகேசனே-(நன்கு காண்பவன்-மந்திரத்தை)

அந்தணர் இவ்விருந்து ஊண் இன்னா ஆங்கின்னா மந்திரம் வாயாவிடின் (இன்னா 1)

நெய்தல் - ஊரார்

நெய்தல் நில கடவுளாகிய வருண்னை (வருணன்-ஊர்ந்து செல்வோனை) வணங்குவோர்கள் ஊரன் எனப்பட்டனர். வண்ணன் என்பவன் எப்போதும் ஊர்ந்து கொண்டிருக்கக் கூடிய சூரியனுக்குத் தேரோட்டியாவான். செல்லுதலுக்குக் காரணமான வண்ணனை வணங்கும் ஒளி (ஒளியை வணங்குதல்-செவ்வண்ணம்).

பாலை - ஐயர்

பாலை நில தொழிலான வழிப்பறி கொலை செய்பவர்களைக் காணும்போது ஐயம் தோன்றும். அவ்வாறு ஐயம் இல்லாதவர்களை உறவினர்களை ஐயர் என அழைத்தனர் (சந்தேகம் இல்லாதவன்-சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவன்) நம்புதற்குறியோன் என்ற வகையில்.

அல்லாத என்னையும் திரமற்று ஐயன்மார் (தி.மா.88)

இந்த ஐவருமே அந்தணர் எனப்பட்டனர்.

ஆதிசைவரைக் குறிப்பிடும் தனிநிலைச் சொற்கள்

1. பரிசுத்தன் 2. முன்னோர் 3. மறையோர் 4.ஆதிவருணர் 5. தொழுகுலத்தோர் 6. தேசிகன் 7. ஆசாரியன் (த.அ. II ப.654)

பரிசுத்தன்

எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவர்
உச்சந்தலையோ(டு) இவையென்ப யாவரும்
திட்பத்தால் தீண்டாப் பொருள். (ஆ.5)

பரிசுத்தன்

ஆதிசைவ மதத்திற்கு வேறொரு பெயர் சுத்த (பரிசுத்தன்) சைவம்.

முன்னோர்

ஆதி என்கிற பதத்திற்கு 'முன்' என்ற தமிழ் பெயர்ப்பே அர் விகுதி பெற்று முன்னோர் என்றானது.

மறையோர்

பிறர் அறியாமல் மறைத்து மொழிவதனால் மறையோர் என வழங்குவர்.

அருமறை காவாத நட்பும் (திரி.55:1)

ஆதிவருணர்

வருணம்[16] - இனம் என்பது குலப்பெயராகக் கொண்டு அதன் தனித் தன்மையை விளக்கும் விதமாக ஆதிவருணர் என அழைக்கப் பட்டனர்.

தொழுகுலத்தோர்

பிறரின் பொருட்டு இறைவனைத் தொழுவதனால் தொழுகுலத்தோர் எனப்பட்டனர். மேலும், இவர்கள் பரம்பரையாகத் தொழுவதால் இவ்வாறு அழைக்கப்பட்டனர்.

தேசிகன்

தேசிகன் என்ற சொல் இறைத்தொழு முறை நூல்களில் (ஆகமம்) ஆலய அர்ச்சகரைக் குறிப்பிடப் பயன்படுத்துகிறது.

தேசிகன் (தற்பவ சொல் - வடமொழி) புகார்க்காண்டம்

தேசிக மென்றிவை யாசியுணர்ந்து (சில.அ.ப.46)

ஆசாரியன்

ஆலய அர்ச்சகரைப் பிறப்பின்வழி அல்லாமல் சடங்கின் வழி உயர்த்தும் ஒருவகைத் தகுதிக்கு ஆசார்ய அபிஷேசம் என்று பெயர் (அந்தச் சடங்கை செய்து கொண்டவனைக் குறிப்படும் சொல்). இது அரசர்களுக்கு அரசப் பொறுப்பேற்றதாக அங்கீகரிக்கப்படுவதற்குச் செய்யப்படும் முடிசூட்டுவிழா என்ற சடங்கைப் போன்றது.

அம்பலத் தோற்றம்

வருணத்தாரால் தொழுகுலத்தோர் பற்றி பார்ப்பதற்கு முன் அம்பலத்தைப் பற்றிப் பார்ப்பது படிமுறை விளக்கமாக அமையும்.

முதல் நிலையில் உருவம் இல்லாத போது ஒருவர் மேல் பேய் பிடிப்பது போல் ஆவியேரி, அவர் வழியாக ஆவிபேசி அதன் மூலம் நன்மை தீமை அறிந்து நலம் பெற்றார்கள்.

தெய்வமுற்றாள் போலுந்தகைய (சில.மது.ஊர்:25)

தெய்வமேற்பட்டாளை - கலைப்பரி - பரிக்கலையென்க
(சிலப்பதிகாரம்)

இரண்டாம் நிலையில் இறந்தோர்க்கு அஞ்சி "பலியிட்டு வணங்கினர்"

ஈமப்பந்தரும் யாங்கணும் பரந்து (மணி.6:65)

(காக்காய்க்கு இடும் சோறுக்குப் பலி என்று பெயர்). பெரும்பாலும் இறந்தோர் பயன்படுத்திய கொளைக்கருவிகளையே கடவுளாக வணங்கி அதைக் கொண்டே பலியிட்டு வணங்கினர்.

புறம்பணையான் வாழ்கோட்டம் (சில.க:12)

மூன்றாம் நிலையில் ஆவி ஏறிய மரத்தின் கீழ் படையலிட்டு தேவையான போது குறிகேட்டு வணங்கினர்.

நான்காம் நிலையில் நடுகல் வைத்து இறந்தோர் தினத்தில் அவருக்குப் பிடித்த படயலிட்டு வணங்கினர்.

இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடும் ஓணங்கிய நெடுநிலைக் கோட்டமும்

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல் காதை தனித்தனி கதைத் தலைப்பாகவே உள்ளது.

ஐந்தாம் நிலையில் அவர் நினைவில் விளக்கு ஏற்றி வணங்கினர். "விரும்பி நல்விளக்கு தூபம்" இதுவும் பள்ளி சொல், இடது கண் துடித்தல், ஆந்தை அலறல் போன்ற சகுனத்தைக் கொண்டு குறைநாடி நலம் பெற்றனர்.

ஒரு மீன் விழுந்தன்றால் விசும்பினானே
அதுகண் டியாமும் பிறரும் பல்வேறிரவலர்
பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன்
நோயிலன் ஆயின் நன்றுமற்று இல்லென
அழிந்த நெஞ்சம் மடியுளம் பரப்ப
அஞ்சினம் எழுநாள் வந்தன்று இன்றே (புற.229)

ஆறாம் நிலையில் மரத்தால் கூரை அமைத்து இறைவனை தினந்தோறும் நீராட்டி படையலிட்டு வணங்கினர்.

ஐவகை மன்றத்து மரும்பலி யுறீஇ (சில.பு.இ:140)

(மன்ற-மரத்தினால் செய்யப்பட்ட கோயில்)

ஏழாம் நிலையில் சுண்ணாம்பு முதலிய பொருளால் கோயில் அமைத்து முழுமையாய் இறையுருவம் அமைத்து வணங்கினர்.

மண்ணினும் கல்லினு மரத்தினுஞ் சுவரினும்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
ஆங்கத் தெய்வத மவ்விட நீங்கா
ஊன்கணி னார்கட் குற்றத்தை யுரைக்கும்
என்றிறங் கேட்டியோ விளங்கொடி நல்லாய்
மன்பெருந்தெய்வ கணங்களினுள்ளேன்
துவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின்
மயனெனக் கொப்ப வகுத்த பாவையின்
நீங்கேன் யானென் னிலையது கேளாய் (மணி.கந்:130)

எட்டாம் நிலையில் முழுவதுமாய் கருங்கல்லில் ஆலயம் அமைத்து விழாக்கள் எடுத்து சிறப்பாக இன்றுவரை வணங்கி வருகின்றனர். (தமிழகத்தின் முதல் கல்தளி-காஞ்சிபுரம்).

பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்

காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின்
பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாம முறையொடு நாற்றுமின்
விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணன் மாற்றுமின் புதுமணற் பரப்புமின்
கதலிகைக் கொடியுங் காமூன்று விலோதமும்
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்து மின்
நுதல்வழி நாட்டத் திறையோன் முதலாய்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீறாக
வேறு வேறு சிறப்பின் வேறு வேறு செய்வினை
ஆறறி மரபினறிந்தோர் செய்யுமின் (மணி.விழா.45-55)

அம்பலமானது முழு வளர்ச்சிப் பெற்று ஆலயம்-கோயில் என அழைக்கப்பெற்றது.

பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
ஆறுமுகச் செவ்வேளணிதிகழ் கோயிலும்...
அறவோம் பள்ளியு மறனோம் படையும்
(சில.இ:169,170,179)

முதலாம் நிலையில் அஞ்சி வணங்கி அந்த கெட்ட ஆவியால் துன்பம் நேராதிருக்கவும் வழிபாடு செய்தனர்.

பூதசதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றந் தானிலேன்
கண்டோ னெஞ்சிற் கரப்பெளி தாயினேன்
வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வ நீயெனச் சேயிழை யரற்றலும்
மாபெரும் பூதந் தோன்றி மடக்கொடி (மணி.சி.50-60)

கொலைக்கு அஞ்சி வழிபடுவது

இரண்டாம் நிலையில் அவ்வாற்றலைக் கொண்டு பிறர் நமக்கு அழிக்கும் துன்பம் மற்றும் இயற்கை துன்பத்தை அறிந்து நீக்க வணங்கினர்.

"மாமாஹி கும்ஸி" - என்னைத் துன்புறுத்தாதே [17]

மூன்றாம் நிலையில் வளம் பெறவும், மழை முதலியன வேண்டியும் வணங்கினர்.

வான்முகில் வழாது பெய்க (கந்த.புரா. வா.)

நான்காம் நிலையில் கோயில்கள் தீர்ப்பு வழங்கும் நீதிமன்றங்களாகவும் செயல்பட்டன.

ஐந்தாம் நிலையில் ஊருக்குப் பொதுவான செய்தி அறிவிக்கும் நிலையமாகவும், ஒருங்கிணைந்த படித்தர வளர்ச்சிக்குக் காரணமாக கோயில்கள் அமைந்தன.

"நாயக்கர் ஆட்சியில் நாட்டில் நலப்பணி செய்தல் திருவிழாக்கள், ஆலயத் திருப்பணி ஆகியவை நடைபெற்றன. சிற்றூர்களிலும் வழக்கு மன்றம் இருந்தது. நடுவர் இருவர் இருந்தனர். அரசர்கள் சாத்திர வல்லுநர்களோடு கலந்து பேசித் தீர்ப்பு வழங்கினர். இதற்காக வேதம் உணர்ந்த பார்பனர்களைப் பயன்படுத்திக் கொண்டனர். பெரும்பாலும் அரசர்கள் கோயில் வழக்குகளையும் யாருக்குக் கோயிலில் முதல் மரியாதை, இரண்டாம் மரியாதை, யார் எந்த வாகனத்தில் செல்லலாம் யார், யார் பூணூல் அணியலாம் என்பன போன்ற வழக்குகளை விசாரித்து தீர்ப்பு கூறியுள்ளனர். மங்கம்மாள் சௌராஷ்டிரர்களுக்குப் பூணூல் அணியும் உரிமை உண்டு என தீர்ப்பு கூறியுள்ளார்".[18]

ஆறாம் நிலையில் திருவிழாக்கள் என்ற பெயரில் கோயில்களில், கலை நிகழ்ச்சிகள் மூலமாக மகிழ்வித்தலோடு அறம் வளர்க்கும் இடங்களாக செயல்பட்டது

கள்ளவிழ் பூம்பொழிற் காமக் கடவுட்கு
கருங்கய னெடுங்கட் காதலி தன்னொடு
விருந்தாட் டயருமோர் விஞ்சை வீரன்
தென்றிசை மருங்கினோர் செழும்பதி தன்னுள்
(சில.பு.கட:2-5)

ஏழாம் நிலையில் ஒருங்கிணைந்த நிருவாக அமைப்பும் ஆலயத்தில் செயல்படத் துவங்கியது.

"சங்ககால தமிழகத்தில் அம்பலம், பொதியில் ஆகிய இரண்டும் சிறு மாளிகை என குறிப்பிட்டனர் அவற்றின் நடுவில் சிறு பீடம் உள்ளது என்றும், நீதி வழங்கும் இடம் என்றும் குறிப்பிடப் பட்டது. அம்பலம் என்று பிறகாலத்தில் மாற்றப்பட்டது".

தொழுகுலத்தேர்

ஆதியில் யார் மீது ஆவி ஆவேசித்து ஆடுகிறதோ, அவரின் பாம்பரைக்கு நன்கு மரியாதை அளிக்கப்பட்டது.

அதைத் தொடர்ந்து பூசாரியிடம் ஆலோசனை கேட்கும் வழக்கம் இருந்தது.

அவருக்கான சம்பாவனை முதலியன அவர் சார்ந்த குடும்ப நலம் ஊர் பொதுவில் கொடுக்கப்பட்டது. "சாத்ரு" என்ற தலைப்பில் நிமித்தம் பார்த்துச் சொன்ன பூசாரிகளுக்கு தாம் கைப்பற்றிக் கொணர்ந்த பசுக்களை நமது சிறிய ஊர் மன்றத்தில் வைத்துப் பகிர்ந்து கொடுத்தனர்.

பொய்யாது புள்மொழிந்தார்க்கு
வையாது வழக்கு உரைத்தன்று (புற.வெ.பிள்ளைவழக்கு)

பூசாரிகளுக்கு முதல் மரியாதை என்ற விதத்தில் அவர் சொல்லுக்கு செல்வாக்கு இருந்தது. நட்பாளரும், அந்தணாளரும் மடைத்தொழில் வீரரும், மருத்துவம் செயுநரும்

நிமித்த காரரும் நீள்நில வேந்தற்கு
உரைத்த ஐம்பேர் உறுதிச் சுற்றம் (திவா.பா.2360)

பூசாரிகள் ஐம்பெரும் சுற்றத்தில் ஒருவராக இருந்தார் என்பதிலிருந்து அவரது செல்வாக்கு தெரிகிறது.

ஐந்தாம் நிலையில் பண்டாரங்கள் என்ற பெயரில் பூசாரிகள் ஊர் கணக்குகளையும் அரசியல் திட்டச் செயல்பாடுகளையும் வகுத்தனர்.

ஆறாம் நிலையில் அரசர்களின் இரகசியமான காவலராகவும் பூசாரிகள் திகழ்ந்தனர்.

ஏழாம் நிலையில் நிலங்கள் அவருக்கென்றே தனியாக வழங்கப்பட்டன.

எட்டாம் நிலையில் ஆலய நிர்வாகம் அவர் தலைமையில் அங்கம் வகுத்து செயல்படுவதாயிற்று.

ஆலய வளர்ச்சி அடைந்தபோது அவருக்கான இடமும் ஆலயத்தின் அருகிலேயே (அக்ரகாரம்) தரப்பட்டது. புது கிராமத்தையோ நகரத்தையோ உருவாக்க முதலில் பொதுமக்களுக்காக இறைவழிபாடு செய்பவர் குடியமர்த்தப்பட்டார்.

அதன் அருகிலேயே வழிபாடு செய்யும் ஆலயம் அமைக்கப்பட்டது. அவ்வாறு ஒரு ஊரின் துவக்கத்தில் முதலில் அவர் குடியேறியதால் தொல்குடி, ஆதி வருணத்தார் என்று அவர்கள் அழைக்கப்பட்டனர்.

இவ்வாறு தொழுகுலத்தோர் வளர்ச்சி அண்மைக் காலம் வரை நடந்து வந்துள்ளது. முதலில் தனியாளாக தோன்றிய பூசாரிகள் தங்கள் சந்ததிகள் தொடர போட்டி, பூசல்கள் இல்லாமல் அரசாங்கப் பணியும் செவ்வனே நடைபெற அவ்வத்தரத்திற்கேற்ப பல பிரிவுகள் தோன்றி

வளர்ந்தன (நயனார், ஸ்தானிகர், பரிஜாரகர்-காஞ்சிபுரம் நம்பியார், பூசாரி, கண்டியம்-ஆவுடையார் கோவில்).

கூட்டம் எண்ணிக்கை அதிகரிக்க குழப்பம் அதிகரித்தது. தெளிவுபெற பல கொள்கைகளும் தேவைப்படும் போதுதான் தனி மனித நிலையில் இருந்த ஆன்மீகம் சமுதாயம் சார்ந்து சமயம் எனப்பட்டு பல கட்டுப்பாட்டிற்குட்பட்டு தங்களின் தனியடையாளங்களை வெளிப்படுத்த அதுமுதல் செயலாகவும் சொல்லாகவும் இருந்த ஆன்மீக கோட்பாடுகள் முறையாக பதிவு செய்யப்பட்டு "ஆகமங்கள்" எனப் பெயர் சூட்டப்பட்டது.

ஆரியமும் செந்தமிழும்

இதுவரை உள்நாட்டுப் பூசல் மற்றும் தன் இன இடையூறுகள் இருந்து அதைத் தவிர்த்து வந்த நிலையில், புதிதாக ஆரியர் படையெடுப்பு தமிழினத்தைப் பெரிதும் தாக்கியது. அத்தாக்குதல்களைச் சமாளிக்கும் வகையிலும் ஆரியர்கள் தங்களை இங்கே நிலை நிறுத்திக் கொள்ளவும் சமூகத்தின் நன் மதிப்பிலிருந்த பூசாரிகளைத் தமக்கு உதவியாக்கிக் கொண்டனர். அந்த அளவில் அதுவரை தமிழர்களாக இருந்த தொல்குடிகள் புதிதாக வந்த ஆரியர்களின் பெண்களை மணந்தனர். அதனால் குடிக்கலப்பு ஏற்பட்டது.

அந்தக் குடி கலப்புகள் தமிழர்களாகிய பூசாரிகளின் நிலைகளைப் பெரிதும் பாதித்தது. அது ஆரியர்களையும் அதிகமாக பாதித்தது. அந்த நிலையில் தான் "ஆதி சைவம்" பிறந்தது.

ஆதிசைவம் தோற்றம்

வடவர்களாகிய வடமொழி பேசும் ஆரியர்கள், தன் பெண்களைத் தமிழர்களாகிய தொல்குடி பூசாரிகளுக்குத் திருமணம் செய்து கொடுத்த போதிலும் முழுமையாய் தமிழர்களை ஏற்க மறுத்து விளக்கினர் (பரிஜாரகர்).

தொல்குடிபூசாரிகள் ஆரியர்களுக்கு உதவிய காரணத்தாலும் அவர்களிடம் குடிகலப்பு செய்து கொண்டதாலும் தன் இனத்தோடு சேர்த்துக்கொள்ள மற்ற தமிழர்கள் மறுத்தனர்.

இதுவரை சாதி இனம் வேறுபாடில்லாத தமிழர் மத்தியில் கலந்து பழகிய தொல்குடி பூசாரிகள் தமிழர்களுடன் தொடர்ந்து பழைய நிலையில் பழக முடியாமலும், ஆரியர்களுடனும் சேர முடியாமலும், விளக்கப்பட்ட நிலையில் தனிநிலைப் படுத்தப்பட்டனர். அதனால், தனக்கென தனிப்பாதையைச் செவ்வனே வகுத்துக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

பழையன கழிதலும் புதியன புகுதலும்

சமணர்களும், பௌத்தர்களும் தங்கள் பங்கிற்குத் தமிழ் வழிபாட்டிற்கு இடையூறு செய்து வந்தனர்.

*அறவோர் பள்ளியு ம்றனோம் படையும் (சில.இ: 179)*

*சமணர் கோயில் (சில.இ:180)*

"தூநிற மாமணி சுடரொளி விரிந்த தாமரைப் பீடிகை தான் உண்டு ஆங்கு இடின்"- புத்தர்கள் வணங்கும் கோயில்.

இந்த நிலையில் சூழ்நிலையே மனிதனை உருவாக்குவது போல் தன் நெடிய அனுபவத்தாலும், பட்டத் துன்பத்தாலும் புதிய ஆவலாலும் இடையூரைத் தீர்க்கும் வகையிலும் தெளிவாக ஆரிய, செழுந்தமிழ், பௌத்த, சமண, கோட்பாடுகளையும் நன்கு ஆய்ந்து அவைகளில் அனைத்துச் சிறப்புகளையும் சேர்த்து, இடையூறுகளையும் நீக்கி, செம்மையுற உருவாக்கியது தான் "ஆதிசைவம்".

# 5. தண்டமிழ் செவ்விலக்கியத்தில் அந்தணன்

முன்னர் கூறியபடியே அந்தணர்க்கென்று தொகுத்த தனித்தகவல்களாக இல்லை என்றாலும், செவ்விலக்கியங்கள் முழுக்க ஆங்காங்கே கூறப்பட்ட தகவல்கள் அவர்களைப் பற்றிய தெளிவான செய்திகளைத் தருகின்றன. இப்பகுதியில் அந்தணர்கள், அவர்களின் உருவத்தோற்றம், செயல், ஒழுக்கம், சமூகத்தில் இருந்த நன்மதிப்பு, பின்பற்றிய ஆகம நூல்களில் உள்ள பல நுட்பமான தகவல்கள், ஆகமத்தில் கூறப்பட்ட தெய்வத்தின் பெயர்கள், அவற்றின் வடிவ குறிப்புகள், பண்டைய கால தொல்குடி தமிழரின் வழிபாட்டு முறைகள், அம்பல நிலையில் இருந்து ஆலயமாக வளர்ந்த நிலைக்கு உண்டான மறைமுகச் சான்றுகள், அந்தணர்களின் வகை இதுபோன்ற தகவல்களை மேலே ஆசிரியர் கருத்தாகவும், அதன் கீழ் சான்றாதார வரிகளுமாக தரப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றையும் விளக்க விரியும் என்பதால் தலைப்பின் நோக்கில் ஆசிரியர் வலியுறுத்த விரும்பும் கருத்திற்கான தக்க சான்றாக மட்டுமே இவை பயன்படுத்தப்படும் காரணத்தால் ஒருவரிச் செய்திகளாக கொடுக்கப்பட்டுள்ளன. சுமார் 150 தகவல்கலுக்கு மேல் இதில் உள்ளன. இவை ஒவ்வொரு கருத்தும் ''ஆதிசைவம்'' என்னும் கட்டிடத்திற்கான செங்கற்கள் போன்று தன்னளவிலும், பொதுவிலும் ஊடுருவி நின்று ஆசிரியர் கருத்தை வலுப்படுத்துகின்றன.

இதில் காணப்படும் பகுதி அனைத்தும் செவ்வியல் இலக்கியம் என மத்திய அரசால் அறிவிக்கப்பட்ட செம்மொழி நூல்கள். பதினெண்கீழ்கணக்கு 18, பதினெண்மேல்கணக்கு 18, இரட்டைக் காப்பியங்கள் 2, தொல்காப்பியம் 1, முத்தொள்ளாயிரம் 1, இறையனார் களவியல் 1 ஆகியவை. இவற்றோடு சில கைப்பிரதிகள், சில நேர்காணல் தகவல்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

இப்பகுதியில் முதலில் ஆசிரியர் கருத்தும் கீழே அதற்கான செவ்விலக்கியச் சான்றுகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

கடவுளுக்குப் பலி கொடுத்த பூசை முறை கூறப்படுகிறது.

பெரும கள்ளும் கண்ணியும் கையுறையாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி
தனிமருங்கு அறியாள், யாய்அழ,
மணிமருள் மேனி பொன்நிறம் கொளலே? (அக.156:12-17)

வழிபாடு கூறப்படுகிறது. "வினாதைந்யேந ஜீவதம்

அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
(அக.155:1,2)

கடவுளுக்கென்றே சூட்டப்படும் மலர்கள் தனித்துக் கூறப்படுகிறது.

கடவுள் காந்த ளுள்ளும், பலஉடன் (அக.155:1,2)

பல்லி சொல் கேட்கும் ஆலய சகுண வழக்கு கூறப்படுகிறது.

செல்லுநர்க்கு உறுவது கூறும்
சிறுசெந் நாவின்
மணிஓர்த் தன்ன தெண்குரல்
கணிவாய்ப் பல்லிய காடுஇறந்
தோரே (அக.151:12)

முருக வழிபாட்டு முறை

உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇ, கடம்பும்
களிறும் பாடி, நுடங்குபு தோடும் தொடலையும்
கைக்கொண்டு, அல்கலும்
ஆடினர் ஆதல் நன்றோர நீடு
நின்னொடு தெளிந்த நல்மலைநாடான் (அக.138, 10-14)

பரம்பரையாகப் பேணப்படும் முறை சொல்லப்படுகிறது.

கைதொழு மரபின் கடவுள் சான்ற செய்வினை மருங்கின்
சென்றோர் வல்வரின் (அக.125:14-15)

ஆகமத்தில் பயன்படுத்தப்படும் அனைத்துப் பொருட்களும் கூறப்படுகின்றன.

எள், தினை வரகு, அவரை, நெல், கரும்பு, மூங்கில், வெண்கடுகு, நெய்தல், இஞ்சி, கருணைக்கிழங்கு, வாழை, நாவல்பழம், மா, பலா (85 அடி முதல் 140 அடிகளுக்குள் விளக்கப்பட்டு உள்ளது).

அதிதிதேவோ பவ என்ற வேதவாக்கியம் தமிழில் கூறப்படுகிறது.

தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து
பலநாள் நிற்பினும் பெறுகுவீர் (தி.மு.565)

முருகனுக்குத் திருவிழா எடுப்பது கூறப்படுகிறது.

ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும் (தி.மு. 220)

ஐயர் என்ற அந்தணர்களைக் குறிப்பிடும் சொல் பயின்று வந்துள்ளது.

விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது (தி.மு.107)

அந்தணர்கள் வேள்வி செய்வது குறிப்பிடப்படுகிறது.

அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே-ஒருமுகம் (தி.மு.96)

முருகனுக்குக் கோவில் இருப்பது குறிப்பிடப்படுகிறது.

வெண்டலைப் புணார் அலைக்கும் செந்தில் நெடுவேல் நிலை
இய வியன்துறை

முருகனின் யானை வாகனம் குறிப்பிடப்படுகிறது.

கால் கிளர்ந்தன்ன வேழம் மேல் கொண்டு (திரு.82)

ஒரு தெய்வத்தோடு தொடர்புடைய பிற கோயில்கள் குறிப்பிடப் படுகின்றன.

நலம்புரி கொள்கைப் புலர்பிரிந்து உறையும், செலவுநீ
நயந்தனை ஆயின் (தி.மு.63)

காளி வழிபாடு சுட்டப்படுகிறது.

உலறிய கதுப்பின், பிறழ்பல் பேழ்வாய், சுழல்விழிப்
பசுங்கண் சூர்த்த நோக்கின்,
கழல் கண்கூகையொடு கடும்பாம்பு துங்கப்
பெருமுலை அலைக்கும் காதின் பிணர் மோட்டு
உருகெழு, செலவின், அஞ்சுவரு பேய்மகள் (திரு.47-51)

கோயில்களில் போடப்படும் நறும்புகை சாதனம் சொல்லப்படுகிறது.

நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் (பொ. 238)

பத்துப்பாட்டு சிறுபாணாற்றுப்படை

அந்தணர்களுக்கும் பொருணர், புலவர் இவர்களுக்கும் உண்டான சமுதாய நிலை கூறப்படுகிறது.

*பொருநர்க்கு ஆயினும், புலவர்க்கு ஆயினும், அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும் கடவுள் மால்வரை கண்விடுத்தன்ன அடையா வாயில் அவன் அருங்கடைகுறுகி*
*(சிறு. 203-206)*

பெரும்பாணாற்றுப்படை

அந்தணர் குடியிருப்பு அங்கு பெரும் உணவு முதலியன தெளிவாகக் கூறப்படுகின்றன.

*செழுங்கன்று யாத்த சிறுதாள் பந்தர்,*
*பைஞ்சேறு மெழுகிய படிவநல் நகர்*
*மனைஉறை கோழியொடு ஞமலிதுன்னாது*
*வளைவாய்க்கிள்ளை மறைவிளி பயிற்றும்*
*மறைகாப்பாளர் உறைபதிச் சேப்பின்*
*பெருநல் வானத்து வடவயின் விளங்கும்*
*சிறுமீன் புரையும் கற்பின், நறுநுதல்,*
*வளைக்கை மகடூஉ வயின் அறிந்துஅட்ட*
*சுடர்க்கடை, பறவைப் பெயர்ப்படு வத்தம்*
*சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து உருப்புறு பசுங்காய்ப்*
*போழொடு கறிகலந்து,*
*கஞ்சக நறுமுறி அளைஇ, பைந்துணர்*
*நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த*
*தகைமாண் காடியின், வகைபடப் பெருகுவிர் (பெ.297-310)*

முல்லை பாட்டு

அந்தணர்களின் உடை கையில் வைத்திருக்கும் கோல் இவை விளக்கப்படுகின்றன.

*கல்தோய்த்து உடுத்து படிவப் பார்ப்பான் முக்கோல் அசைநிலை கடுப்ப நற்போர் ஓடா வல்வில் தூணி நாற்றிக்*
*(மு.37-39)*

மதுரை காஞ்சி

வேள்வி, அரசனால் விரும்பி அந்தணர்களைக் கொண்டு செய்யப்படுகிறது.

*நிண ஊன்சூட்டு உருக்கமைய*
*நெய்கனிந்து வறை ஆர்ப்ப*
*குரூ உக்குய்ப்புகை மழை மங்குலின்*
*பரந்து தோன்றா வியன்நகரால்*
*பல்சாலை முதுகுடுமியின்*
*நல்வேள்வித் துறைபோகிய (மது.755-760)*

சூலுற்ற மங்கையர் நெல்தூவி செய்யப்படும் ஒரு விதமான சடங்கு

*கடுஞ்சூல் மகளிர் பேணிக் கைதொழுது பெருந்தோட்*
*சாலினி மடுப்ப ஒரு சார்* (மது.609-610)

பல்வேறு தொழில் செய்வோர் இருந்தாலும் அவர்களுக்கான இருப்பிடம் தனிதனியே அமைக்கப்பட்டுள்ளன (தெருக்கள்).

*கோடுபுகழ் கடைநடும் திருமணி குயினரும் சூடுறு*
*நன்பொன் சுடர்இழை புனைநரும் பொன்னுரை*
*காண்மரும்கலிங்கம் பகர்நரும் செம்புநிறை கொண்மரும்*
*வம்புநிறை முடிநரும் பூவும் புகையும் ஆயும் மாக்களும்*
*எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி நுண்ணிதின்*
*உணர்ந்த நுழைந்த நோக்கின் கண்ணுள் வினைஞரும்*
*பிறரும் கூடித் தெண்திரை அவிர் அறல் கடுப்பஒண்பல்*
*குறியவும் நெடியவும் மடிதரூஉ விரித்துச் சிறியரும்,*
*பெரியரும் கம்மியர் குழீஇ நால்வேறு தெருவினும்*
*கால்உற நிற்றர* (மது. 511-522)

அந்தணர்கள் அறத்துறையில் நீதிசொல்பவர்களாகி இருந்த அவை அறியப்படுகிறது.

*அச்சமும், அவலமும் ஆர்வமும் நீக்கிச் செற்றமும்*
*உவகையும் செய்யாது சாத்து ஞெமன்கோல் அன்ன*
*செசர்னமத்து ஆசிச்சிறந்த கொள்கை அறங்கூறு*
*அவையமும்* (மது.389:402)

காவிதி பட்டம் என்பது ஒழுக்க சிறப்புக்கு வழங்கப்படுவது.

*நறுஞ்சாத்து நீவிய கேழ்கிளர் அகலத்து ஆவுதி மண்ணி*
*அவிர்துகில் முடித்து மாவிசும்பு வழங்கும் பெரியோர்*
*போல நன்றும் தீதும் கண்டாய்ந்து அடக்கி அன்பும்*
*அறனும் ஒழியாது காத்து பழிஒரீஇ உயர்ந்து பாய்புகழ்*
*நிறைந்த செம்மை சான்ற காவிதி மாக்களும்*
(மது.493-499)

சமணர்கள் வழிபாட்டு நிலையம்

*சான்ற கொள்கைச் சாயா யாக்கை ஆன்று அடங்கு*
*அறிஞர் செறிந்தனர் நோன்மார்* (மது.480-481)

பௌத்தர்கள் வழிபடும் இடம்

*பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச் சிறந்து*
*புறங்காக்கும் கடவுள் பள்ளியும்* (மது.466-467)

வைதீக வழிபாடு

*சிறந்த வேதம் விளங்கப்பாடி விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து நிலமமர் வையத்து ஒருதாம் ஆகி உயர்நிலை உலகம் இவணின்று எய்தும் அறநெறி பிழையா அன்புடை-நெஞ்சின் பெரியோர் மோய் இனிதின் உறையும் குன்று குயின் நன்ன அந்தனர் பள்ளியும்*
*(மது.468-474)*

ஆதி சைவர்கள் பூசை

*நீரும் நிலனும் தீயும் வளியும்மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய மழுவாள் நெடியோன் தலைவன் ஆக மாசற விளங்கிய யாக்கையர் சூம்சுடர் வாடாப் பூவின் இமையா நாட்டத்து நாற்ற உணவின் உருகெடு பெரியோர்க்கு மாற்று அரு மரபின்உயர்பலி கொடுமார் அந்தி விழாவின் தூரியம் கறங்க* *(மது: 453-460)*

பல்வேறு இனத்தாரையும் சுட்டுவதற்குக் கொடிகள் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. இத்தமிழ் மரபே ஆகமத்திலும் இறைவனுக்கான கொடியை வரையறுத்துள்ளது.

*சாறுஅயர்ந்து எடுத்த உருவப் பல்கொடி*
*வேறு பல் பெயர ஆர்எயில் கொளக்கொள நாள்தோறு எடுத்த நலம்பெறு புனைகொடி நீர்ஒலித் தன்முன நிலவுவேல் தானையொரு புலவுப்படக் கொன்று மிடைதோல் ஓட்டி*
*புகழ் செய்து எடுத்த விறல்சால் நன்கொடி*
*கள்ளின் களிநவில் கொடியொடு நன்பல*
*பல்வேறு குழுஉக் கொடி பதாகை நிலைஇ* *(மது.366-373)*

நெடுநல்வாடை

*அந்தணச் சடங்குகளில் கட்டப்படும் காப்பு குறிப்பிடப் படுகிறது.*

*வலம்புரி வலையொடு கடிகை நூல்யாத்து* *(நெ.142)*

*சிற்ப சாத்திரப்படி ஆகமங்கள் கூறும் கால கணக்கீட்டு முறை கூறப்படுகிறது. விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம் இருகோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏர்பு ஒருதிறம் சாரா அரைநாள் அமயத்து நூலறி புலவர் நுண்ணிதின் கயிறுஇட்டு தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பின்* *(நெ.73-79)*

மாலைநேர வழிபாட்டு சடங்கு

இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ
நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது
மல்லல் ஆவணம் மாலை அயர (நெ.42-44)

குறிஞ்சி பாட்டு

இறைவனுக்குப் பல உருவங்கள் உள்ளதைப்போல மாறுபட்ட வழிபாட்டு முறைகளும் உள்ளன.

அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்
பரவியும் தொழுதும் விரவுமலா தூயும்
வேறுபல் உருவின் கடவுள் பேணி
நறையும் விரையும் ஓச்சியும் அலவுற்ற
எய்யாமையலை நீயும் வருந்ததி (குறி. 4-8)

பட்டினப்பாலை

அரசனால் அடிமைப்படுத்தப்பட்ட குலமகளிர் ஆலயங்களுக்குப் பணி செய்தனர் என்றும் ஆலயம் என்பதும் கோயில் என்பதும் ஒன்றே என உணரலாம்.

கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி அந்தி மாட்டிய நந்தா
விளக்கின் மலரணி மெழுக்கும் ஏறிப் பலர்தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில் பருநிலை
நெடுந்தூண் ஒல்கத்தீண்டிப் பெருநல் யானையொடு
பிடிபுணர்ந்து உறையவும் (பட். 246-251)

வானப்பிரஸ்த ஆசிரமத்தில் இருக்கும் அந்தணர் இருப்பு கூறப்படுகிறது.

தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பலசாலை
தவப்பள்ளித் தாழ்காவின்
அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்
ஆவுததி நறுபுகை முனைஇ, குயில்தம்
மாயிரும் பெடையோடு இரியல் போகிப்
பூதம் காக்கும் புகல் அருங்கஸநகர்த்
தூதுஉண் அம் புறவொடுதுச்சில் சேர்க்கும் (பட். 51-59)

மலைபடுகடாம்

ஆலயத்தில் பயன்படும் இசை கருவிகள் கூறப்படுகிறது.

நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை, கடிகவர்பு
ஒலிக்கும் வல்வாய் எல்லரி,
நொடிதரு பாணிய பதலையும் பிறவும் (மலை.9-11)

சிவவழிபாடு

நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல் பேரிசை நவரம்
மேஎய் உறையும் காரி உண்டிக் கடவுளது இயற்கையும்
(மலை.82-84)

எல்லா நிலையிலும் பரம்பரை போற்றப்படுகிறது.

கொடைக்கடன் இறுத்தஅவன்
தொல்லோர் வரவும் (மலை.89)

அகநானூறு

இறைவனைக் கருங்கல் தூண் போன்ற வடிவத்தில் வழிபட்டனர்.

கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து (அக.307.13)

வேப்பமரத்தில் இறைவியை வழிபட்டுள்ளனர்.

தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து, குருதிதூஉய்
புலவுப் புழுக்குஉண்ட வான்கண் அகல் அறைக்
(அக.309:4-6)

இருபெரும்தெய்வம் என்று குறிப்பிடப்படுவதால் சிறு தெய்வம் எனப்பாடும்.

வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து உருஉடன்
இயைந்த தோற்றம் போல (அக.360:6-7)

வடவர் என்று ஆரியர்கள் இப்படிக் குறிப்பிடுகிறார்கள்.

வடவர் தந்த வான்கேழ், வட்டம்
குடபுல உறுப்பின் கூட்டுபுநிகழ்த்திய
வண்டு இமிர் நறுஞ்சாந்து (அக.340:16-18)

முருகன் வழிபாடு விரிவாக கூறப்படுகிறது.

கடம்புகொடி யாத்து, கண்ணி சூட்டி,
வேறுபல் குரல ஒரு தூக்கு இன்னியம் காடுசெழு
நெடுவேல் பாடு காளைப்ஏற்ப,
அணங்குஅயர் வியன்களம் பொலியபையத்
தூங்குதல் புரிந்தனர், நமர்என (அக. 382:3-7)

புறநானூறு

தமிழின் தொன்மை

பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியவர் இவர்.

"முந்நீர் விழாவின் நெடியோன்" என்றும் "நன்னீர்ப்பஃறுளி" என்றும் இவர் சுட்டுதலால் கடல் கோளுக்கு முற்பட்ட குமரிக்கண்டத்தில் இருந்தவர் என்பது விளங்கும் பெருவழுதியின் வேள்வியையும் உரைக்கிறார்

ஆரியர்கள் படையெடுத்த விவரம் தெரிகிறது.

பாண்டியன் ஆரியப்படை கடந்த
நெடுஞ்செழியன் [19]

உடன்கட்டை ஏறுதல் பு. பாடியவர் வரலாறு

பூதப்பாண்டியன் இயற்கை எய்த அவனோடு தீபாயும் போது, தீப்பாய் தலைத்தடுத்த சான்றோர் பேராலவாயார் முலியவர்க்குச் சொல்லியது இவர் பாடல் (246) இவர் "வாழ்வார்க்கு வாழ்வார்" என ஒன்றி நின்றவர். கணவனோடு "பொய்கையும் தீயும் ஒரு தன்மையவே எமக்கு" என்கிறார்.[20]

காளியின் பெயர்தான் பேய்மகள்

பேய்மகள் இளவெயினி [21]

இப்பெயரானது ஆதிசைவர்களின் ஐந்து கோத்திரத்தில் ஒருவரைச் சுட்டுவது தெரிகிறது.

மதுரை இளங்கண்ணிக் கோசிகனார் [22]

ஊர்ப்பெயரும் இறைவன் பெயரும் ஒன்றியிருப்பது ஆலய வழிபாட்டை உணர்த்தும்.

மதுரைப் பேராலவாயர் ஆலவாய் என்பது மதுரைக் கோயிலுக்கு ஆலவாயார். [23]

இந்தப் பெயரானது வேள்வியைத் தலைமை தாங்கி நடத்தும் அந்தணரின் சிறப்பைக் குறிக்கும்

மதுரை வேளாசான் [24]

இந்தப் பெயர் ஆரிய அந்தணர்களை "தமிழர்கள் சூட்டும் பெயராம்.

வடநெடும் தத்தனார், வடவண்ணக்கன் தாமோதனார்,
வடமவண்ணக்கன் பெறும்சாத்தனார் [25]
பேரிசாத்தனார்.

"பார்பான்" என்பது பெயர் நடுவில் வந்தால் காசியப கோத்திரத்தைச் சார்ந்தவன். ஆதிசைவ ஐவர்களில் ஒருவகை.

பாடப்பட்டவர் வரலாறு
சோணாட்டுவப் பூஞ்சாற்றுப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் [26]

இப்பெயரானது அரசர்கள் அந்தணர்களைக் கொண்டு யாகம் வளர்த்ததைக் குறிக்கிறது.

பாடப்பட்டவர் வரலாறு

பாண்டியன் பல்யோக சாலை முதுகுடுமிப் பெருவழுதி. [27]

இதைக்கொண்டு பாடியவர் சமயத்தைப் புரிந்து கொள்ளலாம்.

கடவுளின் சிறப்புரைத்து வாழ்த்துதல்

பரம்பரை சிறப்பாக போற்றி பாதுகாக்கப்பட்டது.

நிலை உரைத்தல். பழமையும் வீரமும் மிக்க குடியின் வரலாற்றைச் சொல்லுதல். [28]

அந்தணர் சமுதாய மதிப்பை அறிய முடிகிறது.

பார்பனவகை கேட்க வேண்டுவன கேட்டுத் தலைமை பெற்ற பார்ப்பானின் வெற்றியைப் பாடுதல். [29]

உயிருக்கு நலம் செய்யும் ஒழுக்கம்

பொருண்மொழிக் காஞ்சி. உயிருக்குப் பெரிதுண்ணக் களவேள்வி செய்தல். இல்லறம் துறவறம் ஆகியவற்றின் வேறுபாட்டைக் கூறுதல் [30]

வேள்வி என்னும் சொல் பலியையும் குறித்தது. இரு அறங்களும் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

மரங்கள் வேள்வி பேய் மகள் பெரிதுண்ணக் களவேள்வி செய்தல் மனையறம் துறவரம் இல்லறமே துறவறம் ஆகியவற்றின் வேறுபாட்டை கூறுதல் [31]

ஆகமம் கூறும் முப்பொருள்

முதுமொழிக் காஞ்சி அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள் நலப்பாட்டைக் கூறுதல். [32]

கத்தி, இறைவனாக வழிபடப்பட்டது.

வாண்மங்கலம் தலைவனது வாளைப் புகழ்தல் [33]

சைவ நெறி உறுதிப்படுத்தப்படுகிறது.

கண்ணி கார்நறுங் கொன்றை, காமர் வண்ண மார்பில்
தாரும் கொன்றை;
ஊர்தி வால்வெள் ஏறே, சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்ஏறு என்ப;
கறைமிடறு அணியலும் அணிந்தன்று, அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே;
பெண்ணுரு ஒருதிறன் ஆகின்றன்று, அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்;
பிறைநுதல் வண்ணம் ஆகின்று, அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே;
எல்லா உயர்க்கும் ஏமம் ஆகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே [34]

ஆகமத்தில் கூறப்படும் எட்டு மூர்த்திகளும் இதிகாச கருத்தும் அந்தணர் வேள்வியும் சிறப்பாக கூறுப்பட்டது.

மண்திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும் புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பூதத்து இயற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்!
நின்கடற் பிறந்த ஞாயிறு, பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற்குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந!
வான வரம்பனை நீயோ பெரும
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பா அல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ அத்தை; அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்

*முத்தீ விளக்கில் துஞ்சும்*
*பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே*
*(புற.2:1-25)*

*மாரி பொய்ப்பினும் வார்குன்றினும்*
*இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்*
*காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகல் ஞாலம் (புற.35:27-29)*

அரசரோடு அந்தணர் இயந்து இருந்ததையும் ஒழுக்கச் சிறப்பையும் கூறுகிறது.

*ஆர்புனை தெரியல்லநின் முன்னோர் எல்லாம்*
*பார்ப்பார் நோவன செய்யலர் (புற.43:13-14)*

சைவம், சைவவழிபாடு கூறப்படுகிறது.

*ஓங்குமலைப் பெருவில் பாம்புஞான் கொளீஇ*
*ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றிப்*
*பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த*
*கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்*
*பிறைநுதல் விளங்கும் ஒரு கண் போல*
*வேந்துமேம் பட்ட பூந்தார் மாற (புற.55:1-6)*

சைவம், வைணவம் சிறப்பாக கூறப்படுகிறது.

*ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை*
*மாற்றரும் கணிச்சி மணிமிடற்றோனும்,*
*கடல்வளர் புரிவளை புரையும் மேனி*
*அடல்வெம் நாஞ்சில் பனைக்கொடியோனும்*
*மண்ணுறு திருமணி புரையும் மேனி*
*விண்உயர் புள்கொடி விறல்வெய்யோனும்.*
*பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும் என*
*ஞாலம் காக்கும் கால முன்பின்*
*தோலா நல்இசை நால்வர் உள்ளும்*
*கூற்றுஒத் தீயே மாற்றரும் சீற்றம்;*
*வலியொத் தீயே வாலியோனைப்;*
*புகழொத்தீயே இகழுநர் அடுநனை;*
*முருகுஒத் தீயே முன்னியது முடித்தலின்*
*ஆங்காங் கவரவர் ஒத்தலின் யாங்கும்*
*அரியவும் உளவோ நினக்கே; அதனால் (புற.56:1-16)*

வைணவ வழிபாடு

*பால்நிற உருவின் பனைக்கொடியோனும்*
*நீல்நிற உருவின் நேமியோனும் என்று (புற.58:14-15)*

மரபும் தென்புலத்தார் வழிபாடும் செய்யும் அந்தணர் பிரிவு கூறப்படுகிறது.

அமரர்ப் பேணியும்ட ஆவுதி அருத்தியும்
அரும்பெறல் மரபில் கரும்பு இவண்
தந்தும் நீரக இருக்கை ஆழி சூட்டிய
தொன்நிலை மரபின்நின் முன்னோர் போல (புற.99:1-4)

நற்றினை

கடவுள் வாழ்த்து

தமிழர்களிடத்து தொன்றுதொட்டு சிவபெருமானை வணங்குகிற வழக்கம் இருந்தது. இறைவனின் திருவுருவத்தை அவரைப் பற்றிய செய்திகளைப் பாடல் வரிகள் நமக்குச் சுட்டுகின்றன. இப்பாடல் வரிகள் ஆடவல்லானைக் குறிக்கும்

மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக
இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே

தெய்வம் ஆவி வடிவாய் ஒருவரின் மேல் ஆவேசித்து பேசும் என்ற நம்பிக்கை இருந்தது. சைவசித்தாந்தம் இதை 'ஆவேசுவாதம்' என்கிறது.

நின் அணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுள் ஆயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே (நற்.34:7-11)

குறவன் என்ற சொல் தந்தையைக் குறித்தது. அதே சொல்லை ஆலய அர்ச்சகருக்கு பயன்படுத்துவதால் அவருக்குச் சமுதாயத்தில் இருந்த நன்மதிப்பு விளங்கும்

மலையுறை குறவன் காதல் மடமகள் (நற்.201:1)

மக்கள் தெய்வத்திற்குப் பயந்தனர். அதனால் அறம் நிலைத்தது.

உருகெழு தெய்வமும் கரந்து
உறை யின்றே (நற்.398:1)

கார்த்திகைக்கு விளக்கேற்றி வழிபடும் வழக்கம் தமிழர்களிடத்தில் இருந்தது.

அகநானூறு: கடவுள் வாழ்த்து

அந்தணர்கள் இறைவனுக்கு வழிபாடு செய்து அத்திருவுருவிற்கு இட்ட சந்தன மாலையை அரசர்க்கு அணிவித்தார்கள்.

*கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த் தாரன், மாலையன், மலைந்த சண்ணியன் மார்பினஃதே, மைஇல் நுண்ஞான், நுதலது இமையாநாட்டம், இகல்அட்டுக் கையது கணிச்சியொடு மழுவே, மூவாய் வேலும் உண்டுஅத்தோலா தோற்கே ஊர்ந்தது ஏறே. சேர்ந்தோள் உமையே, செவ்வசன் அன்னமேனி, அவ்வான் இலங்குபிறை அன்ன விலங்கு வால்வை எயிற்று எரி அகைந் தன்னஅவிர்ந்து விளங்கு புரிசடை, முதிராத் திங்களொடு சுடரும் சென்னி மூவா அமரரும், முனிவரும், பிறரும் யாவரும் அறியாத்தொன்முறை மரபின் வரிகிளர் வயமான் உரிவை தைகிய யாழ்கெழு மணிமிடற்று அந்தணன், தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே.*

வேள்வி செய்யாத அந்தணர்களும் இருந்திருக்கிறார்கள். இவர்கள் அந்தணருள் ஒரு வகை.

கடவுள் வாழ்த்து

*தெறல்அரு மரபின் கடவுட்பேணி (அ.க.13; பா.வ.3)*

*குறவர் தந்த சந்தின் ஆரமும் (அக.13:3-4)*

*வேளாப் பார்ப்பான்*
*வாள்அரம் துமித்த வளைகளைந்து*
*ஒழிந்த கொழுந்தன் அன்ன (அக.24:1-2)*

பதிற்றுப் பத்து

அகத்தியர் ஆதிசைவரின் ஆசான் எனக் கருதப்படுகிறார்.

*பரமாச்சாரியன் என்ற சொல் ஆதி சைவரின் குருவை உணர்த்தும். "சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப் பரமா சாரியன் பதங்கள் சிரமேற் கொள்ளுதுந் திகழ்ந்தரற் பொருட்டே*
*(பாலைக்கௌதமனார் ப. ix)*

பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்து இவரால் எழுதப்பட்டது. குருவரின் பெயரை, தாத்தாவின் பெயரை ஆதிசைவர் வைப்பது மரபு. இதன்படி கௌதமர் என்பவர் ஆதி சைவர்களின் குரு ஆவார்.

நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னாயினும்

இந்த பாடினோர் வரலாற்றின்படி கௌதமனார் வேள்வில் புகுந்து இறையருள் பெற்றார் என்பது தெரிய வருகிறது

பொய்யா நாவிற் கபிலன் (174) ப. xxxiii

என்ற ஆசிரிய குறிப்பானது அந்தணர்கள் சொல், வாக்கு பளிக்கும் வண்ணம் உள்ளது என்று தெரிவிக்கிறது.

பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய் (பதி.2:12-13)

என்ற வரிகள் மரத்தினை வழிபாடு செய்யும் வழக்கம் தமிழர்களிடத்து இருந்ததைத் தெரிவிக்கிறது.

ஆரியர் துவன்றிய பேரிசையிமயம் தென்னங்
குமரியொ டாயிடை (பதி.ப. 2: 23-24)

ஆரியர் என்ற சொல்லானது பயின்று வந்துள்ளது என்பது தமிழ் அந்தணர்களை வேறுபட சுட்டுகிறது. இவ்வரிகள் சுக்கிரன், செவ்வாய் சேர்ந்தால் மழை வராது என்ற குறிப்பை நமக்கு உணர்த்துகின்றன. ஆருடம் பேணி என்ற அந்தணர் வகையே இதைத் தெரிவித்துள்ளனர்.

அழர்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரிநிற்ப நோயொடு
பசியிகந்தொரீ இப்

பூத்தன்று பெருமநீ காத்த நாடே (பதி.13:25-28)

இது ஆகமத்தில் இண்டமாலா என்று தெளிவாக குறிப்பிடப்படுகிறது.

கண்ணி-அடையாள மாலை; இது தலையிற் சூடுவது

இது அந்தணர்களுக்கு மட்டும் சிறப்பாக வழங்கப்பட்ட நிலத்துரிமையாகும்.

பிரமதாயம்-அந்தணர்களுக்கு விடப்படும் இறையிலி நிலம்; இத்தொடர் சிலாசாஸனங்களிற் பயின்று வழங்கும் (பப.ப-41)

இந்த அரும்பத விளக்கத்திற்கான சொற்கள் தமிழ் அந்தணர்களிடமிருந்து தனித்துக் காட்டுகிறது.

அரும்பத் விளக்கம் ஆரியநாடு, ஆரியர், ஆரியரானை ஆரியவண்ணல், ஆரெயில், ஆலயங்களுக்கு ஆபரணம் கொடுத்தல். (பப. ப.286)

அந்தணர்கள் வேள்வி தீயில் இறைவனை வழிபட்டனர்.

வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி (பதி.70:18)

இல்வாழ்க்கையை மிகவும் உயர்ந்ததாக தமிழர்கள் போற்றினார்கள்.

பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை மேவரு
சுற்றமோடுன்டினிது நுகரும் தீம்புன லாயமாடும்
காஞ்சியம்ட பெருந்துறை மணலினும் பலவே

(பப.48:15-17)

யூபம் என்பது வேள்வில் பலி கொடுக்க வைத்திருக்கும் விலங்குகளைக் கட்டும் தூண்.

தலைதுமிந்த தெஞ்சிய வாண்மலி யூபமெ, டுருவில்
மேய்மகள் கவலை கவற்ற (பதி.67:10-11)

மந்திரத்தோடு பூசனை செய்து பலி முதலியன கொடுப்பது தெரிவிக்கப்படுகிறது.

முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய்முழங்கு மந்திரத் தருத்திறன்
மரபிற் கடவுட் பேணியர் உயர்ந்தோனேந்திய
வரும் பெறற் பிண்டம் கருங்கம் பேய்மகள்
கையுடையூஉ நடுங்க (பதி.30:32-36)

ஜோதிஷம் ஷிக்ஷா இலக்கணம் யாப்பு பெயர் இவை வேதத்தின் ஆறு அங்கங்களைக் குறித்தது. அந்தணர் கோயிலில் பூசை செய்து வேள்வி செய்ததையும் குறிக்கிறது.

சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
றைந்துடன் போற்றி யவைதுணையாக
எவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலையன்ன சீர்சால் வாய்மொழி
உருகெழு மரபிற் கடவுட் பேணியர்

(பிரமதாயம்-அந்தனர்களுக்கு விடப்படும் இறையிலி நிலம்-இத்தொடர் சிவாசாஸனங்களிற் பயின்று வழங்கும்).

*கொண்டதீயின் சுடரெழு தோறும்ட விரும்புமெய் பரந்த*
*பெரும்பெயராவுதி வருநர் வரையார் வார வேண்டி*
*விருந்துகண் மாறா துணீகிய பாசவர்* (பதி.21:1-9)

*சுரிதகம்-கலித்தொகை*

*பாணியும் தூக்கும் சீரும் என்றிவை*
*மான் இழை அரிவை காப்ப*
*ஆணம் இல் பொருள் எமக்கு அமர்ந்தனை ஆடி*

கொண்டு கூட்டு

1. மணிமிடற்று என்கையாய்! அந்தணர்க்கு மறைபகர்ந்து, சடை(யில்) நீர் கரந்து (மறைத்து), திரிபுரம் தீமடுத்து களிப்போர் (உடையாய்) இனிக்கேள்
2. நீ பல் உருவம் பெயர்ந்து ஆடுங்கால், கொடிபுரை நுசுப்பினாள் சீர் (தாளம்) தருவாளோ? அமர் பலகடந்து ஆடுங்கால், வண்டு அரற்றும் கூந்தலாள் வளர் தூக்குத் (தாளம்) தருவாளோ" நீ அங்கை(யில்) (பிரமனின்) தலை கொண்டு, ஆடுங்கால், மு(ல்)லை அணிந்த முறுவலாள் முற்பாணி (தாளம்) தருவாளோ?
3. இவை, அரிவை காப்ப ஆடி, ஆணம் (நேயம்) இல் பொரு (ளாகிய) எமக்கு அமர்ந்தனை (பொருந்தினாய்)

என்ற பாடலின் வரி சிவபெருமானின் திருவிளையாடலில் கூறப்படுவது சிவவழிபாட்டைக் கூறுகிறது. (கலி.கா)

*வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்*
(கலி.1.20)

என்பது ஆதி சைவ மரபில் சடங்கில் இன்று கூறப்படுகிறது. (அருந்ததி பார்ப்பது)

*தொடங்கதற்கண் தோன்றிய முதியவன் முதலாக*
*அடங்காதார் மிடல்சாயஅமரர் வந்து இரத்தலின்,*
*மடங்கல்போல் சினைஇ மாயம்செய் அவுணரைக்*
*கடந்துஅடு முன்பொடு முக்கண்ணான் மூஎயிலும்*
*உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்*
*சீறுஅருங் கணிச்சியோன் சினவலின், அவ்எயில்*
*ஏறுபெற்று உதிர்வனபோல் வரைபிளந்து, இயங்குநர்*
*ஆறுகெட விலங்கிய அழல்அவிர் ஆரிடை,*
*மறப்பருங்காதல் இவள்ஈண்டு ஒழிய இறப்புத்*
*துணிந்தனிர். கேண்மின்மற்று ஐ இய!*
(கலி.1:1-10)

இக்கருத்தின்படி செல்வமானது பூர்வஜென்ம புண்ணியத்தின் வழி பெறப்படும் என்பது சைவ சித்தாந்த கருத்தாகும்.

கிழவர் இன்னோர் என்னாது பொருள் தான்
பழவினை மருங்கின் பெயர்புபெயர்பு
உறையும்

ஆதிசைவ முறைப்படி உழவர்கள் காமனுக்கு விழா எடுப்பது சிவனால் அவன் அழிக்கப்படுவதும் இன்று வரை கொண்டாடப்படுகிறது.

காமவேள் விழாவாயின் "கலங்குவள்" பெரிது என
ஏமுறு கருந்திண்தேர்கடவி நாம் அமர் காதலர்
துணைதந்தார் விரைந்தே (கலி.27:24-27)

குறுந்தொகை

அன்னம், காக்கை, குயில், கூகை, நாரை, கொக்கு, பருந்து இவை அனைத்தும் குறுந் தொகையில் குறிப்பிடப் பட்டுடிருக்கின்றன. இவையனைத்தும் சிவாகாமங்களில் கூறப்பட்டு உள்ளதால், சிவாகாமங்கள் பெரிதும் தமிழ்நடையை மையப்படுத்தி கூறப்பட்டுள்ளது என்று தெரிய வருகிறது.

| | | |
|---|---|---|
| பனை | - | அத்திமரம் |
| பாதிரி | - | அரலிச்செடி |
| குராமரம் | - | அறுகு |
| மருதம் | - | ஆம்பற்கொடி |
| மிளகு | - | இலுப்பை |
| வரகு | - | ஆலமரம் |
| வள்ளி | - | ஐயவி |
| வாழை | - | ஐவனம் |
| வேங்கை | - | கரும்பு |
| வேம்பு | - | குவளை [35] |

| | | |
|---|---|---|
| ஆடு | குரங்கு | பல்லி |
| ஆமை | செந்நாய் | மான் |
| எருமை | பசு | மீன் |
| எலி | பாம்பு | முதலை |
| குதிரை | | |

இவையனைத்தும் ஆகமத்தில் பூசனை பொருளாக குறிப்பிடப்பட்டுள்ளது.

ஐங்குறுநூறு

நடுகல் வழிபாடு கூறப்படுகிறது. இன்றும் செங்கல் வைத்து வழிபடும் மரபு தமிழர்களிடத்து உள்ளது.

விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல் (ஐ.நூ.352)

வாக்கு பொய்க்காத அந்தணர்களால் முருகனுக்குப் பலியிட்டு அருந்ததியை வணங்கி மழை பெய்ய பசி நீங்க வேந்து பகை தனிக போன்ற ஆகம வசனமானது மிக தெளிவாகக் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது. (சான்றாக ஆகம ஆசீர்வாதம்).

காலே வர்ஷது பர்ஜன்ய
மாரி வாய்க்க
ப்ருதிவி சஸ்ய வாலினி
நெர்ப்பலிபொலிக
ந்யாநே மார்கேந மஹிம் மஹீசா
அறன் நனி சிறக்க அரசுமுறை
செய்க
பிராம்மனேப்யோ கோ, ப்ராம்ம
பால்ப்பல உருக

நித்யம் லோகா சமஸ்தா சுகினோ பவந்து

திருக்குறள்

பூசை பற்றி திருவள்ளுவர்

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு (குறள்.18)

அந்தனர் பற்றி திருவள்ளுவர்

அறவாழி அத்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது (குறள்.8)

ஆதிசைவம் பற்றி திருக்குறள்

கோளில் பொறியிற் குணமிலவே என்குணத்தான்
தாலை வணங்காத் தலை (குறள்.9)

தத்துவம் பற்றி திருக்குறள்

சுவையொளி ஊறோசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு (குறள்.27)

அந்தனர் தவத்தின்பெருமை பற்றி திருக்குறள்,

*ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்புளார் கோமான்*
*இந்திரனே சாலும் கரி* *(குறள்.25)*

வேள்வி பற்றி திருக்குறள்

*இணைத்துணைத்து என்பதொன்று இல்லை விருந்தின்*
*துணைத்துணை வேள்பிப் பயன்* *(குறள்.87)*

*பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி*
*வேள்வி தலைப்படா தார்* *(குறள்.88)*

பார்ப்பான் ஒழுக்கம் பற்றி திருக்குறள்

*மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்*
*பிறப்பு ஒழுக்கம் குன்றக்கெடும்* *(குறள்.134)*

வேள்வி முறை பற்றி திருக்குறள்

*அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத்து உண்ணாமை நன்று* *(குறள்.259)*

தேவர் உணவுப் பற்றி திருக்குறள்

*செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்*
*ஆன்றாரொடு ஒப்பர் நிலத்து* *(குறள்.413)*

ஆதிசைவ அறம் பற்றி திருக்குறள்

*ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்*
*காவலன் காவான் எனின்* *(குறள்.560)*

அந்தணர் எறியோம்புவது பற்றி திருக்குறள்

*நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றலால் கௌவையால்*
*காமம் நுதும்பேம் எனல்* *(குறள்.1148)*

அந்தணர் கடமைக்குறியவர் தென்புலத்தார் தெய்வம்

*தென்புலத்தார் தெய்வம்விருந்து ஒக்கல்தான் என்றாங்கு*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை* *(குறள்.43)*

நாலடியார்

ஒன்றாயிருந்து ஆன்மாக்களுக்கு இறைவன் அறிவுறுத்துவது *(சைவ சித்தாந்தம்)*

*தோற்பையுள் நின்று தெழிலறச் செய்தூட்டும்*
*கூத்தன் புறப்பட்டக் கால்* *(நா.26:3-4)*

மந்திரித்த விபூதியினால் கட்டுப்படும் பாம்பைப் போல் மந்திரத்தின் மகிமை

*இடுநீற்றால் பையவிந்த நாகம்போல் தத்தம்*
*குடிமையான் வாதிக்கப் பட்டு* *(நா. 66:3-4)*

கண்மூன்று உடையன் "திரயம்பசன்"
இராகு, காக்கை வாகனம்
பிறர் உணரும் எளிய உதாரணமாய்
புகழ் பெற்றது காண்க

*கண் மூன்று உடையானும் காக்கையும் பையரவும்*
*என்ஈன்ற யாயும் பிழைத்தது என்பொன்ஈன்ற*
*கோங்கரும்பு அன்ன முலையாய் பொருள் வயின்*
*பாங்கனார் சென்ற நெறி* *(நா.400)*

பழமொழி நானூறு

*அம்பலம் தாழ் கூட்டு வோர்*
*பொதுவிடம் என்றும் இறை*
*வழிபாட்டு இடம் என்க*

பேய்ப்பிடித்தல் பற்றி குறிப்பிடுவது

*பேயோ டானும் பிரிவு* *(பழ.68:3-4)*

அர்தநாரி வடிவமும் வேல் கொடி
கொண்டவனும் உவமையால்
கூறப்படுவது

*ஒட்டிய காதல் உமையாள் ஒருபாலாக்*
*கட்டங்கம் வெல்கொடி கொண்டானும் கொண்டானே*
*விட்டாங்கு அகலா முழுமெய்யும் கொள்பவே*
*நட்டாரை ஒட்டி யுழி* *(பழ.77)*

அறம் பொருள் இன்பம் மட்டும் கூறியவாறு

*அடி நிமிர்வு இல்லாச் செய்யுள் தொகுதி*
*அறம் பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்*
*திறம் படவருவது கீழ்க்கணக்காகும்* *(ப.பா.348)*

திருமாள் வழிபாடு

*மதிமன்னும் மாயவன் வாள்முகம் ஒக்கும்*
*கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்*

முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண் ஒக்கும்பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம் (நான்.1)

மந்திர பயன்பாடு பற்றி கூறுகிறது

கந்தில் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர
மந்திரத் தால்பிணிப்பர் மாநகரம்-கொந்தி
இரும்பில் பிணிப்பர் கயத்தைச்சான்றோரை
நயத்தில் பிணித்து விடல் (நான்.12)

சைவ சித்தாந்தம் பற்றி கூறியவாறு

தத்துவ மான் நெறிபடரும் அந்நெறி
இப்பால் உலகின் இசைநிறீஇ-உப்பால்
கோளுணர்ந்தால்
உயர்ந்த உலகம் புகும் (நான்.30:3-5)

பிறப்பு உயர்வு கூறப்படுகிறது

அந்தணரின் நல்ல பிறப்பில்லை என்செயினும்
தாயின் சிறந்த தமரில்லை யாதும்
வளமையோ டொக்கும் வனப்பில்லை எண்ணின்
இளமையோ டொப்பதூஉம் இல் (நான்.35)

வேதம் வேள்வி கூறப்பட்டது

வேதம் உறுவன பாட்டுள வேளாண்மை
வேள்வியோ (டு) ஒப்ப உள (நான்.35)

வேள்வி அறம் கூறப்பட்டது

நெய்விதிர்ப்ப நத்தும் நெருப்பழல் சேர்ந்து
வழுத்த வரங்கொடுப்பர் நாகர் தொழுத் திறந்து
கன்றூட்ட நந்தும் கறவை கலம்பரப்பி
நன்றூட்ட நந்தும் விருந்து (நான்.63)

நான்கு வேதம் அறிய வேண்டியது

மறையறிப அந்தண் புலவர் முறையொடு
வென்றி அறிய அரசர்கள்- என்றும்
வணங்கல் அணிகலம் சான்றோர்க்கு அஃதன்றி
அணங்கல் வணங்கின்று பெண் (நான்.91)

சைவ சமயம் கூறப்பட்டது

கண்மூன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிதே
தொல்மான் துழாய் மாலையானைத் தொழலினிதே

முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்தல் இனிது (இனி.வா.)

அந்தணர் தொழிற் சிறப்பு கூறப்படுகிறது

அந்தனர் ஒத்துடைமை ஆற்ற மிக இனிதே
பந்தம் உடையான் படையாண்மை முன் இனிதே
தந்தையே ஆயினும் தானடங்கான் ஆகுமேல்
கொண்டடையான் ஆகல் இனிது (இனி.7)

அந்தணர் தானம் பெறல், கொடுத்தல் கூறப்படுகிறது

காவோ(டு) அறக்குளம் தொட்டல் மிக இனிதே
ஆவோடு பொன்னீதல் அந்தணர்க்கு முன் இனிதே
பாவமும் அஞ்சாராய்ப் பற்றுந்தொழில் மொழிச்
சூதரைச் சோர்தல் இனிது (இனி.23)

இன்னாநாற்பது

சைவ சமயம்

முக்கன் பகவம் அடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை உள்ளா(து) ஒழுகின்னா
சக்கரத் தானை மறப்பின்னா ஆங்கின்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு (இன்னா.வா.)

ஆகமச் சிறப்பான மந்திர சித்தி கூறப்படுகிறது.

அந்தணர் இல்லிருந்து(து) ஊண்இன்னா ஆங்கின்னா
மந்திரம் வாயா விடின் (இன்னா.1:3-4)

ஆகமத்தில் நாய், கோழி, அந்தணர்க்குக் கூடாது என்ற விதி விளங்கியவாறு

பார்ப்பாரில் கோழியும் நாயும் புகலின்னா (இன்னா.2:1)

மந்திரசித்தி பெற்ற உருவ வழிபாடு சிறப்பாகக் கூறப்படுகிறது.

குறியறியான் மாநாகம் ஆட்டு வித்தல் இன்னா
(இன்னா.29:1)

கார் நாற்பது

வைணவ சமயம்

பொருகடல் வண்ணன் புனைமார்பில் தார்போல்
திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் தாழ
வருதும் எனமொழிந்தார் வாரார்கொல் வானம்
கருவிருந்(து) ஆலிக்கும் போழ்து (கார்.1)

வேள்வியால் மழை

பொச்சாப்பு இலாத புகழ்வேள்வித் தீப்போல
எச்சாரும் மின்னும் மழை (கார்.7)

கார்த்திகை விழா

நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கின் தகையுடைய வாகிப்
புலமெலாம் பூத்தன தோன்றி சிலமொழி
தூதொடு வந்த மழை (கார்.26)

களவழி நாற்பது

தமிழர்களின் கலத்து வேலாயுதச்சிறப்பு கூறப்படுகிறது

ஆலயத்தில் கார்த்திகை சொக்க பானை பூசை சொல்கிறது

கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்றனவே (கள.17)

ஐந்திணை ஐம்பது

கடம்ப மரத்தில் முருகன் எழுந்தருளிப்பது கூறப்படுகிறது

மல்லர்க் கடந்தான் நிறம்போல் திரண்டெழுந்து
செல்வக் கடம்பமர்ந்தான் வேல்மின்னி - நல்லாய்
இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப ஈதோ
மயங்கி வலனேருங் கார் (ஐ.1)

நடுகல் பற்றி

கொடுவில் எயினர்தம் கொல்படையால் வீழ்ந்த
தடிநிண மாந்தியபேஎய் - நடுகல்
வரிநிழல் கண்படுக்கும் வெங்கானம் என்பர் (ஐ.35)

ஐந்திணை எழுபது

சைவ சமயமும்

எண்ணும் பொருளினிதே எல்லாம் முடித்தெமக்கு
நண்ணும் கலையனைத்தும் நல்குமால் - கண்ணுதலின்
முண்டத்தான் அண்டத்தான் மூலத்தான் ஆலம்சேர்
கண்டத்தான் ஈன்ற கன்று (ஐ.)

அம்பலத்தில் கல்நட்டு வழிபாடு.

மன்றத் துறுகல் (ஐ.எ.9)

இடக்கண் துடித்தல் கனவுக்கானல் போன்ற சகுணங்கள்.

பூங்கன் இடம் ஆடும் கனவும் திருந்தின (ஐ.எ.41)

திணைமொழி ஐம்பது

வேள்வி

புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி-யூட்டிப்
புகைகொடுக்கப் பெற்ற புலவோர் - துகள்பொழியும்
வானுயர் வெற்ப! (திமொ.1)

சோதிடம்

சேர்ப்ப நாள் ஆய்ந்து வரைதல் அறம் (தி.மா.52)

தாலி அணிவிக்கும் சடங்கு

செல்வர் சிறார்க்குப் பொற்கொல்லர் போல்-நல்ல
பவளக் கொழுந்தின்மேல் பொற்றாலி பா அய்த்
திகழக்கான்றிட்டன தேர்ந்து (தி.மா.66)

அய்யர் என்ற பதம் அந்தணரைக் குறிக்கிறது. தந்தையையும் குறிக்கும். உறவினரைப் போன்று அந்தணர் இருந்தனர்.

அல்லாத என்னையும் தீரமற்(று) ஐயன்மார் (தி.மா.88)

மாயவனின் திருவுரும்

இருள்பரந்(து) ஆழியான் தன்னிறம்போல் தம்முன்
அருள்பரந்த ஆய்நிறம் போன்றும் மருள்பரந்த (தி.மா.96)

மந்திரம் வேள்வி

பாட்டர வம்பண் அரவம் பணியாத (கோட்டரவம்)

இன்னிவை தாங்குழுமக் கோட்டரவம்
மந்திரம் கொண்டோங்கல் என்ன மகச்சுமந்து
இந்திரன் போல் வந்தான் இடத்து (தி.மா.145)

கைநிலை

மலரின் கால முரண்பாடு கூறப்படுகிறது
அரங்காம்பல் தாமரை "அம்செங்" கழுநிர் (கை.47)

சங்கேதச்சொல்

கொடுவாய்ப் புணர்அன்றில் கொய்மடல் (கை.57)

திரிகடுகம் (வைணவ சமயம்)

கண்ணகல் ஞாலம் அளந்த தூஉம் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம நண்ணிய

மாயச் சகடம் உதைத்ததூஉம் இம் மூன்றும்
பூவைப்பூ வண்ணன் அடி (திரி.கா.)

தென்புலத்தார் குலமகளிர் தொல்குடி சிறப்புக்குரியவர்

அருந்ததிக் கற்பினார் தோளும் திருந்திய, தொல்குடியின்
மாண்டார் தொடர்ச்சியும்-சொல்லின்
அரில் அகற்றும்கேள்வியர் நட்புமிம் மூன்றும்
திரிகடுகம் போலும் மருந்து (திரி.1)

அந்தணரின் பின் செல்வது

நான்மறை யாளர் வழிச்செலவும் இம்மூன்றும்
மேன்முறை யாளர் தொழில் (திரி.2)

இலிங்கி என்ற வார்த்தைக்குறியவர்

சொல்வென்றி வேண்டும் இலிங்கியும் இம்மூவர்
(திரி.17)

அந்தணர் கடமைக்குரியவர்

மூன்று கடன் கழித்த பார்ப்பானும் ஓர்ந்து (திரி.34)

வேள்வியில் பலி

தாமுறு வேள்வியில் கொல்வானும் இம்மூவர்
தாமறிவர் தாம் கண்ட ஆறு (திரி.36)

அந்தணருடன் பிறர் பழகும் முறை

பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் - ஒழுகல் (திரி.42)

மறை என்றால் இரகசியம்

அருமறை காவாத நட்பும் பெருமையை (திரி.55)

அரசர்-அந்தணர்-குடிமக்கள்

அந்தணர் உறவு

ஐங்குரவர் ஆணை மறுத்தலும் ஆர்வுற்ற (திரி.97)

செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும் (திரி.98)

அந்தணர் ஜோதிடம் கற்றவர்

"அர் எயில் மூன்றும் அழித்தான் அடியேத்தி
ஆரிடத்துத்தான் அறிந்த மாத்திரையான்
ஆசாரம்
யாரும் அறிய அறன் ஆய மற்றவற்றை
ஆசாரக்கோவை எனத்தொடுதரான்-தீராத் திருவாயில்

ஆய திறல்வண் கயத்தூர்ப் பெருவாயில் முள்ளி
என்பான் (ஆ.பாயி)

வேள்விக்குரியவை

பிறப்பு நெடுவாழ்கை செல்வம் வனப்பு நிலக்கிழமை கூற்றம்
கல்விநோயின்மை இலக்கணத்தால் இவ்வெட்டும் எய்து
என்றும் ஒழுக்கம் பிழைய தவர் (சிறப்புபாயிரம்)

தூய்மைத்தன்மை

எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவர்
உச்சந் தலையோ (டு) இவையென்ப யாவரும்
திட்பத்தால் தீண்டாப் பொருள் (ஆ.5)

தினமும் தொழுவது

நாளந்தி கோல்நின்று கண்கழீஇத் தெய்வத்தைத்
தானறியும் ஆற்றால் தொழுதெழுக அல்கந்தி
நின்று தொழுதல் பழி (ஆ.9)

குளிக்கும் முறை

தேவர் வழிபாடு தீக்கனா வாலாமை (ஆ.10)

அந்தணரின் சிறப்புக் கூறியவர்
ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்கள் ஞாயிறு
தம்பூதம் எண்ணாது திகழ்வானேல் தம் மெய்க்கன்
ஐம்பூதம் அன்றே கெடும் (ஆ.15)

அந்தணர் குடிமக்களுள் உறவு

அரசன் உபாத்தியாயன் தாய் தந்தை தம்முன்
நிகரில் குரவர் இவரிவரைத்
தேவரைப் போலத் தொழு தெழுக என்பதே
யாவரும் கண்ட நெறி (ஆ.16)

தேவரோடு அந்தணர் ஒப்பர்

இருதேவர் பார்ப்பார் இடைபோகார் தும்மினும்
மிக்கார் வழுத்தின் தொழு தெழுக ஒப்பார்க்கு
உடன்செலல் உள்ளம் உவந்து (ஆ.31)

அந்தணரின் தினக்கடன்

மனைப்பலி ஊட்டினமை கண்டுண்க ஊண் (ஆ.39)

தானம்

கல்யாணம் தேவர் பிதர்விழா வேள்வி- என்று
ஐவகை நாளும் இகழாது அறம்செய்க பெய்க
விருந்திற்கும் கூழ் (ஆ.48)

குருவைப்போல் கருத வேண்டும்

வால்முறை யான்வந்த நான்மறையாளரை
மேல்முறைப் பால்தம் குரவரைப் பொலொழுகல்
நூல்முறை யாளர் துணிவு (ஆ.61)

சிறப்பு

பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசும்பெண்டிர் என்று இவர்கட்கு
ஆற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப் போற்றி
எனப்படுவார் (ஆ.64)

சிறுபஞ்சமூலம்

பெண்களின் இறைவழிபாடு

திருவாக்குந் தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற
வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு (சிமூ.43)

சோதிடம்

நான் கூட்டம் மூர்த்தம் அவற்றொடு நன்றாம் அக்
கோள்கூட்டம் யோகம் குணனுணர்ந்து தோள்
உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானால்
பெற்றால் நாள்கொள்க பெரிது (சிமூ.44)

துறவோர் அறம்

நெடுக்கல் குறுக்கல் துறைநீர் நீ(டு)ஆடல்
வடுத்தீர் பகல்வாய் உறையே வடுத்தீரா
ஆகும் அந் நான் கொழித்(து)ஐந்தடக்கு வானாகின்
வேகும்பம் வேண்டான் விடும். (சிமூ.69)

அந்தணர் கற்கக் வேண்டிய நூல்

சத்தமெய்ஞ் ஞானம் தருக்கம் சமயமே
வித்தகர் கண்டவீ(டு) உள்ளிட்டாங்(கு)-அத்தகத்து
அந்தஇவ் ஐந்தும் அறிவான் தலையாய
சிந்திப்பில் சிட்டன் இறந்து (சிமூ. 86)

முதுமொழிக்காஞ்சி

ஆசிரியருக்குப் பணிவு தந்தான்
கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான் (முது.93)

ஏலாதி

நான்மறை சிறப்பு
இறைபுரிந்து வாழ்தல் இயல்பு (ஏ.க.)

ஆதிசைவ மந்திர நெறி

ஆறுமறையின் வழிவந்தார் கண்ணே
வனப்பு (ஏ.1)

இன்பம்

பார்ப்பார் பசித்தார் தவசிகள் பாலர்கள்
கார்ப்பார் தமையாதுங் காப்பிலார் (ஏ.54)

அந்தணர் செய்ய கூடாதவை

கூத்தும் விழவும் மணமும் கொலைக் களமும்
ஆர்த்த முனையுள்ளும் வேறிடத்தும் ஒத்தும்
ஒழுக்கமுடையவர் செல்லாரே செல்லின்
இழுக்கும் இழவும் தகும் (ஏ.62)

தன் குலநூல் கற்கும் முறை

அறுவர் தந்நூலும் அறிந்துணர்வு பற்றி மறுவரவு
மாறான நீக்கி-மறுவரவின் மாசாரியாரை மறுதலைச்
சொல் மாற்றுதலே
ஆசாரியன தமைவு (ஏ.75)

இன்நிலை

சமயம்

வேலன் தரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத்து அமரிய கொழுவேல்
கூற்றம் கதழ்ந்தெறி கொன்றையன்
கூடா உலகம் கெழீஇயமலிந்தே (இன்.க)

அந்தணர் கடமைக்குரியோர்

ஐம்புலத்தோர் நல்குரவோர் ஓம்பித் தலைப்பட்ட
செம்பாக நன்மனையைப் பேணிக்-கடாவுய்த்த,
பைம்புல் நிலைபேணி ஊழ்ப்பவடுஅடார்
ஐம்புலம் ஈரித் தாரில் தலை (இன்.35)

அந்தணரின் பனிதல்

ஐங்குரவர் ஓம்பல் இனல்நீக்கல் சேர்ந் தோர்க்குப்
பைங்கூழ் களைகணாப் பார்தளித்தல் (நையுளத்தார்க்(கு)
உற்ற பரி(வு) ஈர்த்தல் எண்ணான்(கு) அறநெறியில்
உற்ற புரிதல் கடன் (இன்.37)

# 6. வடமொழி சார்ந்த ஆரியமும் ஆசிரியர் கருத்தும்

செவ்விலக்கியங்களிலும் வடமொழி ஆகமத்திலும் கூறப்பட்டிருக்கும் பொதுவான அந்தணர்களிலிருந்து ஆதிசைவம் (தமிழ் தொல்குடி) என்ற அந்தணப் பிரிவு இங்கே குறிப்பிடப் படுகிறது.

ஐங்கோத்திரத்து உதித்தோர் பரம்பரை வழிவந்து தன் உடல் குற்றம் நீங்கி உயிர்வளர்த்தல் பொருட்டும், பசுபதி யென்னும் இறைவனை மலர்தூவி, மாலை அணிவித்து, நினைத்ததை அடைய ஆகம நெறிபேணி அறம் காத்து பொருள் சேர்த்து இன்பம் துய்த்து, துறந்து வாழ தீட்சிக்கப்பட்டு, இடம் பெயறா நின்று, அறுதொழில் பூண்டு, பிறர் பொருட்டு எல்லா உயிரும் இன்புற்றிருக்க ஆலயத்தில் பூசனை செய்து வாழ்ந்தார்கள் என தெரிகிறது.

வடமொழியானது பரவலான முறையில் மூன்று வகையான எழுத்துருக்களைப் பயன்படுத்தி எழுதப்பட்டுள்ளது. தேவநாகரி, நந்திநாகரி, கிரந்தம். தமிழகப் பகுதிகளில் ஆகமங்கள் அனைத்தும் கிரந்த எழுத்துக்களாலேயே எழுதப்பட்டுள்ளன. கிரந்த எழுத்துக்கள் என்பது ஆரிய அந்தணர்கள் பயன்படுத்தும் நந்திநாகரி, தேவநாகரி போன்ற எழுத்துருக்கள் போல் அல்லாமல் முழுவதுமாய் தமிழ், தமிழினமொழி சார்ந்த எழுத்துருக்களாலேயே அமைக்கப்பட்டுள்ளது. இவ்வகை எழுத்துருக்களே ஆதிசைவர்களின் பிரமான (அளவை) நூல்கள் எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. எழுத்துருக்களில் தமிழர்களைச் சார்ந்திருந்தாலும், பதிவு செய்யும் முறையில் முழுவதுமாய் ஆரியரின் முறைகளையே பின்பற்றினர்.

ஆய்வேட்டு அமைப்பு முறையில் பயன்படுத்தப்படும் வடமொழிப் பகுதியானது ஒலி பெயர்க்கப்பட்டு பின்பு மொழிபெயர்க்கப்பட்டு (Translitration & Translation) கொடுக்கப் பட்டுள்ளது. ஒப்பாய்வு முறை பின்பற்றப்பட்டு இருப்பதால் இரு பாகங்களாக பிரித்து ஒன்றோடு ஒன்று தொடர்புபடுத்தி அமைக்கப்பட்டுள்ளது.

| ஆரியம் | அருந்தமிழ்-ஆசிரியர் கருத்து |
| --- | --- |
| 1. சேவ்ய மாநம் மஹாதேவம்டச்றி கண்டம் விச்வநாயகம் கௌசிக, காச்யபோஸ் அகஸ்த்யோத கௌதமோ, நாரதஸ்ததா ஸநத்குமார ஸ்ஸநகஸ் ஸநாதந ஸ்ஸநந்தனௌ<br>ப்ருகுஸ்சாத்ரி பரத்வாஜ வஷிஷ்டாத்யா மஹர்ஷயு:<br>காமிகாகமம் தந்த்ராவதார படலம் - ஒன்றுமுதல் 18 வரையுள்ள அனைத்தும் [36] | வணங்கிய கௌசிகர், காசியபர், அகஸ்தியர், கௌதமர், பரத்வாஜர் முதலான மகரிசிகளைக் குறித்து கரியமிடற்றினை உடைய உலகத்தலைவனான மகாதேவர் கூறியது (ஆகமம்)<br>இது ஆகமத் தோற்றத்தினைக் குறித்து ஆகமங்களில் முதலாவதான காமிகாக மத்தில் கூறப்பட்ட செய்தியாகும்.<br>ஆகமம் ஆகிநின்ற அள்ளிப்பான் தாள்; வாழ்க - திருவாசகம்<br>ஆரியன் ஆகிவந்து ஆண்டதும் கண்டாய்.<br>அ.க. ஆரியர்கள் தமிழ் தொல் குடியினரை தீட்சை செய்து ஏற்றுக் கொண்டனர். இங்கே ஆரியன் கடவுள் என வருணிக்கப்பட்டான். தேவர் தலைவராகிற இறைவனானவன் பசுக்களின் (உயிரின்) பாசத்தை விடுவிப்பவன். |
| 2. பகவந் தேவ தேவேச பசு, பாச விமோசுக | அ.க. சிந்து சமவெளி நாகரீகத்தில் காணப்படும் பசுபதி என்ற கடவுள் ஆதிசைவர்கள்போன்றும்ஆகமங்களில் பசுபதி என்றே குறிப்பிடப்படுகிறார். |
| 3. ஸிந்தாந்தம், காருடம், வாமம் | காருடம், வாமம், சித்தாந்தம்<br>காருடம் - வைணவ ஆகமம்<br>வாமம் - சாக்த ஆகமம்<br>சித்தாந்தம் - சைவ ஆகமம்<br>அ.க. ஆகமம் என்பது ஆரியர்களின் வேதத்தோடு தொடர்புடையது அன்று என்பதைத் தெளிவாக விளக்க தங்களது நூல் முடிவை சித்தாந்தம் என்று குறிப்பிடுகின்றனர். |
| 4. த்ராணஞ்ச குருதே யஸ்மாத் தந்த்ரமித்யபிதீயதே | நினைத்ததை நினைத்தவாறே வழங்கும் சிந்தாமணியைப் போன்றது ஆகமம். |

ஆ.க. உடல், உள்ளம், உயிர், எண்ணம் இவைகளைக் காப்பதற்கு சாதனமாய் அமைதலாலேயே இதற்கு தந்தரம் என்று பெயர்.

5. தநோதி விபுலார்தாநாம்ஸ் தத்தவ மந்த்ர சமாச்ரிதாந்

உடலைக் காத்ததால் உடற்காப்பது எனப் பெயரியது.

அ.க. பதினென்வகை யாக்கை குற்றங்களில் இருந்து உடலைக் காத்தலால் தந்தரம் எனப் பெயர் கொண்டது.

6. சிவபேதமிதிப்ரோக்தோ ருத்ரபேதஸ் ததோச்யதே

இதுவரை சிவ வேறுபாடு என்று கூறப்பட்டது. இனி ருத்ர வேறுபாடு கூறப்படுகின்றது.

அ.க. ஆதிசைவர்களால் பின்பற்றப் படும் ஆகமங்கள் சிவன், ருத்ரன் என்ற இருவரைக் கொண்டு இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதிலிருந்து ஆரியர்களால் பிற்பற்றப் படும் (சிந்து சமவெளி நாகரிகத்தில் ஆரிய வேறுபாட்டால்) சிவனையும் நன்கு வேறுபடுத்தியிருப்பது தெரிகிறது.

7. குஹயஞ்சாப்யேவ மஷ்டதா

இரகசியமானது இவ்வாறாய் எட்டாம்.

அ.க. சிந்துசமவெளி காலந்தொட்டே தமிழர்களிடம் வழிபாட்டுமுறை இருந்த போதும் இரகசியம் என்று சொல்லப் பட்டதால் எழுதி வைக்கும் பழக்கம் இல்லை. ஆரியரின் வருகைக்குப் பின்னரே பதிவு செய்யப்பட்டது.

8. பிம்பம், புஷ்பேசமால்யேச சித்தாந்தேந நிவேதிகம்

உருவில், மலரையும், மாலையையும் சித்தாந்தத்தால் (முறையால்) படைக்கப் பட்டது.

அ.க. தமிழரின் முறைப்படி நடுகல்லுக்கு மலர், மாலையையும் முறைப்படி இடுக என்பதிலிருந்து தமிழர் நடுகல் வழிபாடே வழிபாடு என்று கூறாவிட்டாலும் தெரிகிறது.

9. சிந்தா மணிரிவ ப்ராஜி சைகதா பஹூதா திசேத்

நினைத்ததை நினைத்தவாறே வழங்கும் சிந்தாமணியைப் போன்றது ஆகமம்.

அ.க. ஆரியர்களால் வீடுபேறே பெரிதும் விரும்பப்பட்டது. தமிழர்கள் அறம், பொருள், இன்பத்தைப் பெரிதும் போற்றினார்கள் என்பது நினைத்ததைத் தரும் சிந்தாமணியைப் போன்றது என்ற உதாரணத்தால் ஆகமம் தமிழர் பழக்கம் என்பது தெரிகிறது.

10. கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம் மூலே நைவை சமாசரேத் க்ருதஞ்சே துபபேதேந கர்தாபர்தா விநச்யதி கேவலம் யஜநம் ப்ரோக்தம் முபபேதைர் விஷேஷத.

ஆலயத்தின் ஆக்குதல் முதலாய குற்றம் களைதல் ஈராய நான்கும் மூலாகமத்தை முதலாகக் கொண்டே பின்பற்றப்படக் கடவது. வேட்டல் மட்டுமே உபாகாமத்தால் சிறப்பாக செய்யத் தக்கது. மாறுபடின் செய்வோர்க்குக் கேடு வரும்.

அ.க. தமிழர் முறைப்படி முதல்நூல் சார்புநூல், புடைநூல் இங்குப் பிரிக்கப் பட்டிருப்பதை உணர்க

முதல் நூல்-மூலாகமம்
சார்பு நூல் - உபாகமம்
புடை நூல் - பத்ததி

11. சிவஸ்ய வாதுளம் ப்ரோக்தம் க்ரந்தா சத சஹச்ரகம்

சிவனுடைய "வாதுலம்" என்ற ஆகமமானது நூறாயிரம் முடிச்சு (க்ரந்தம்) எண்ணிக்கையால் சொல்லப் பட்டது.

அ.க. தமிழர்கள் பயன்படுத்திய கிரந்தம் என்ற வடமொழி சொல்லானது முடிச்சு என்கின்ற பொருளைக் குறிக்கும். இதை ஆகமத்தைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்துகிறார்கள். இதிலிருந்து இரகசியமானதும் சிலருக்கு மட்டுமே புரியும்படியாக உள்ளது என்பதையும் அறியலாம் (குழுஉக்குறியைப் போன்றது).

12. ப்ரதிஷ்டாத்யம் துமூலைச் சேத் சட் சச்டி கதிதைர் வரம்

எழுந்தருளச் செய்வது முதலான மூலமோ வெனில் அறுபத்தி ஆறுவற்கு கூறப்பட்டது.

அ.க. ஆகமமானது அறுபத்தி ஆறு பேருக்குச் சொல்லப்பட்டது என வரையறுக்கப்பட்டது.

| | |
|---|---|
| 13. யேநதந்தரேந சாரப்தம் சார்சநாத்யாச்ச நாந்தகம் | ஆலயம் நிறுவுதல் முதலாய வணக்குதல் ஈறாய இருபத்தி எட்டாம் (ஆகமம்) |
| | அ.க. இது ஆதிசைவர்கள் பயன் படுத்தும் நெறிநூலாகும். இவைகளின் மொத்த எண்ணிக்கை 28 ஆம். இது முதல் நூல் எனப்படும். |
| 14. சதுஷ்பாதயுதான் யேவ புக்தி முக்த்யாத்த சாதநம் | நான்கு பகுதியுடன் கூடியதான (இவை) அறம், பொருள், இன்பம், வீடுபேற்றைத் தரவல்ல துணைப்பொருளாம் (சாதனம்) |
| | அ.க. ஆகமங்களானது அறம், பொருள் இன்பம், வீடுபேற்றைத் தரவல்லது. |
| 15. ஏசாமத்ய யநம் கார்யம்சிவ விப்ரைர் குருக்ரமாத் அத்யா பணஞ்ச கர்தவ்யம் ந.கார்ய மிதரைர் நரைர் | இவைகளைப் படித்தாலாவது ஆதிசைவ குரு முறையாய் வந்தோர்க்கே. படித்தல் ஆகா பிறர் இதை. |
| | அ.க. பிற இனத்தாருக்குச் கூறப்படாமல் பரம்பரை என்ற பெயரில் போதித்து வரப் பட்டுள்ளதாக தெரிகிறது. |
| 16. தீக்சா விஹிந விப்ராத்யாஸ் த்ரி வர்ணச சூத்ர ஜாதய | தீட்சை விலக்கப்பட்ட அந்தணர்க்கோ (ஆரியர்) அன்றி மூவர்ணத்தார்க்கோ (அனுலோமா) கலப்புத் திருமணத்தார்கோ படிப்பிக்க கூடாது. ஆகையால் அரசானவன் அவர்க்கே உரித்தாக்குக. |
| சுவர்ணாத்யனுலோமாச்ச சில்பிற காருகாதய | |
| படந்தி சிவ சாஸ்த்ரஞ்சேத் பாபபாந் நிருப ராச்ட்ர யோ | அ.க. இக்கூற்றின்படி ஆகம பாடமானது தீட்சைக்கே முக்கியத்துவம் வழங்கப் பட்டது தெரிகிறது. |
| அசிரேன விநாச-ஸ்யாத் தர்மாத் ராஜா நிவாரயேத் | |
| 17. காபாலம் பாஞ்ச ராத்ரஞ்ச லாகுலம் குல சாஸ்த்ரகம் | காபாலம்-பைரவர் வழிபாடு |
| | பாஞ்சாராத்ரம்-திருமால் வழிபாடு |
| தந்தரம் பாசுபதமன்யத் புராணம் தர்ம சாஸ்த்ரகம் | லாகுலம்-இடுகாட்டுவழிபாடு (அரிசந்திரன்) (கடலமாடசுவாமி) |
| இதிஹாசம், சடங்கஞ்ச, ருக்யஜுஸ்சாம சம்ஞகம | குலசாத்திரம்-குலதெய்வழிபாடு |
| | தந்திரம்-யோக வழிபாடு |
| அதர்வணம் ததா பௌத்தம் ஆர்ஹத மேவச | பாசுபதம்-கிராதமூர்த்தி வழிபாடு (வேடர்வழிபாடு) வள்ளி |
| இதிஹாசம், சடங்கஞ்ச, ருக்யஜுஸ்சாம சம்ஞகம் | |

அதர்வணம் ததா பௌத்தம் ஆர்ஹத மேவச

காபாலம்-பைரவர் வழிபாடு

ஊர்த்வஸ்ரேதோ அக்ஷபாக

ஸ்ததாதபரம் க்ராமாத்

காமிகாதி சிவஞானம் மூர்த்தா பகவதஸ்ஸதா

பாஞ்சாராத்ரம்-திருமால் புராணம்-கதைப்பாடல்
தர்மசாத்திரம்-சாத்தா (ஐய்யனார்)
இதிகாசம்-இராமன், திரௌபதி அம்மன்
சடங்கம்-நாத்திக வழிபாடு (இறையில்)
ரிக், யசுர், சாம, அதர்வனம்-வேத வழிபாடு
பௌத்தம்-புத்தவழிபாடு
ஆறுகதம்-மகாவீரர் வழிபாடு
ஊத்வஸ்ரேதோ-பிரமச்சர்யவழிபாடு

அக்சபாக-ஏழுமாதார் (ம) கன்னி வழிபாடு

அ.க. பிறதேசத்திலிருந்து வந்த மதங்களாதலால் புத்தர், அருகர், லாகுலர் வைதீகர், பிற மார்க்கத்தில் உள்ள தந்திர நெறியர் இவர்கள் அனைவரும் தங்கள், தங்களின் குறியீடுகளை மட்டும் (இறைத்திரு உருவங்கள்) வணங்கினர். ஆதி சைவர்களாகிய தமிழர்கள் இவர்கள் அனைவரின் குறியீடுகளையும் (இறைத்திருவுருவங்களை) ஐங்குலத்தார் (தமிழன்) என்ற காரணத்தால் வழிபாடு செய்யும் உரிமை பெற்றனர்.
ஒன்றன் பின் ஒன்றான முறையில் காமிகம் முதலான ஆகமம் தலையாயது.

18. ஹேயோ பாதேய வஸ்துநாத் நிர்ணயே பரமார்த்தத

தத் ஸர்வதர்மதரீக்ருத்ய சைவ சித்தாந்த சாஸ்த்ர நிஷ்டைச்

சிவ விப்னரர் யாதக்ரமம்

சாஸ்த்ராந்தரைஸ்து சம்ஸ்தாப்ய லிங்கந்தது பயார்தகம்

காரணகாரிய அடிப்படையில் நிறுவப்பட்ட முடிவான "சித்தாந்தத்தை" ஆதி சைவர் பின்பற்றி லிங்கவடிவை இரு பயனின் பொருட்டு (வீடுபேறு, இல் வாழ்க்கை) தன்பொருட்டும், பிறர் பொருட்டும் வழிபாடு செய்வாராக.

அ.க. தமிழர் மரபுபடி அறம், பொருள், இன்பம், வீடு பேறு கருதி தன் பொருட்டும் குறிப்பாக பிறர் பொருட்டும் பூசித்தனர் என்பது

சைவஸ்சர்வாதி காரிச் யாத் ஸ்வகீயே ச. பரத்ரச

தெரியவருகிறது. ஆரியர்கள் ஆலயங்களில் தன் பொருட்டு தானே பூசிக்கிறார்கள். உதா. காசி தமிழர்கள் மட்டுமேபரம்பரையைஉருவாக்கினார்கள்.

**வாமதேவ பத்ததி**

ஆசர்ய லக்சனமிதம் வக்ச்யதே சாத்த்ர சம்மதம்

சாத்த்ரக்ஞும், இருதயசந்தம் ச சகலாகம பாரகம் குடும்பினம்

ச்ரோத்ரியம் சீல சம்பந்தம் ஸ்நாந்நிக பராயனம்

தயாலும், சாந்த மனசம் ஸ்வரூபக்ஞும் சுலக்கனம்

வேதாத்யான சம்பந்தம் சிவ பூஜா பராயணம் தீக்சா மந்தம்

ச பத்நிகா மநூநாங்க மபாலகம்

அநத்யங்கச, வ்ருத்தம்ஞ்ச ச்தலக்ஞும்

கர்ம கோவிதம் ஏதரருசம் குரும் சமீக்ச்ய வரயேத் ப்ரபு.[37]

நெறிநூற்கு உடனான ஆசிரிய இலக்கணத்தைக் கூறுகிறேன். நெறிநூல் அறிந்தோனும், உண்மைக் விளம்பு வோனும், அனைத்து ஆகம அறிவு கடந்துதோனும் (பெற்றோனும்) நோயற்றறோனும், ஆசையற்றவனும், இறையன்பு கொண்டவனும், இல்லறத்தானும் வேதம் அறிந்தோனும், (கேள்வி சிறிந்தோனும்) ஒழுக்க முடையோனும், தூய்மையானவனும், அமைதியானமனத்தைக் கொண்டவனும், தன்னை அறிந்தவனும், நல்ல வடிவுடையோனும், நான்மறையைத் தினமும் ஒதுவானும், சிவவழிபாடு செய்வதில் சிறந்தவனும், தீக்ஷிக்கப் பட்டவனும், மனைவியுடன் கூடியவனும் குறைவற்ற அங்கம் உடையவனும், குழந்தை பருவமற்றோனும், அதிக வளர்ச்சி அற்றவனும், முதுமை அற்றவனும், அவ்விடத்தைச்சேர்ந்தவனும், செயல்பாடுஉடையவனும், இவைகளோடு கூடியவனுமாகிய நல்ல குருவை நன்கு கவனித்து இயமானன் அழைப்பான் ஆக.

அ.க. இதில் கூறப்பட்டுள்ள குருவினுடைய இலக்கங்களின்படி அந்த இடத்தை என்பது தமிழகத்தையும், மனைவியோடு கூடியவன் என்பதுவும் ஒழுக்கத்தையே உயிராக கொண்டவன் என்பதனாலும் ஆதிசைவர்கள் தமிழர்கள் என்பது உறுதியாகிறது.

**ஆசீர்வாதம்**

அஸ்ய தேவாலயஸ்ய ஆசர்ய அர்சாநாசார்ய, அலங்க்ருதாசார்ய சாதகா சார்யா, பாசக, பரிசாரக, ஸ்தானிக, மந்த்ரபுஷ்ப, வேத பாராயண பரம்பரா சித்தி

இந்தக் கோயிலுடைய ஆசான் ஆனவன்
அர்ச்சனை ஆசான்
ஒப்பனை ஆசான்

| | |
|---|---|
| பூயாதிதி பவந்தோ மஹாந்தோ அநுக்ருண்ணந்து | சொல்லுதற்குறியோன் அடுக்களை ஆசான் துணை நிற்போன் இடத்து நிற்போன் (மரபுளி) பொன்மலர் நிற்போன் நான்மறையோதி இவர்கள் பரம்பரையாய் (வழிவழியாய்) இருக்கக்கடவ. |
| | இடத்தைச் சார்ந்தவனும், ஆலயம் சார்ந்த பாகுபாட்டையும் குறிப்பிடுகிறது. இதுவும் தமிழர் என்பதையே அறிவுறுத்துகிறது. இக்கோயிலுடைய அந்தனன் ஆனவன் நான்மறை பயின்று தினஎறியோம்பி மறைச் சடங்கு, மறைச்சாலீ; அறச்சடங்கு, வேள்வி செயல்களில், நான்மறை முற்றியோனும் வேதவழிச் சடங்கை முடித்து சைவ வழிச்சடங்கான நிலை நிருத்தல். |
| | அ.க. ஆதிசைவர்கள் ஆரியர்களை அவர்களின் சடங்கு வழிகளை முழுவதுமாய் பின்பற்றினார் என்பதையும் அதைத்தவிர தமிழர்களின் பண்புகளையும் கூடுதலாகப் பின்பற்றினர் என்பதும் தெரிகிறது. அதுவே அவன் சமுதாயத்தை விட்டு தனித்து விடப்பட்டதற்குக் காரணமாயிற்று. |
| ச்தாபன ப்ரோக்சன அஸ்ய தேவாலயஸ்ய கர்ம ப்ராயச்சித்த நித்ய நைமித்திக காவ்யாகம் பேதாதிபேத ப்ரபல யஜந யாஜந அத்யாநாத்யாபந தானப்ரதிகரஹ ஷட்கர்மா சார சமய விஷேச நிர்வாணா சார்யாபிசேகபரம் பரார்த்த பூஜா ப்ரகரண ஔபாசந யஞாதி கர்ம. தேவாலய பிரதக்சின ச்தோத்தர நமஸ்கார தேவ தர்சன வித்யா பீட குருபசார கபிலார் ச்சனச்ரவண மாத்யாந்நிக வைச்வ தேவபலி | (இறைத் திருவருளை) நிலைநாட்டல், நீராட்டல், குற்றம் களைந்த தின வழிபாடு, சிறப்புவழிபாடு, விருப்ப வழிபாடு, இலக்கிய ஆகம சிறப்பறிவு பெற்று வேட்டல், வேட்ப்பித்தல், கற்றல், கற்பித்தல், கொடுத்தல், பெறுதல் முதலான அறுவகை தொழில் செய்து சமய விசேஷ நிர்வாண ஆசார்ய அபிஷேக முதலான தன்மை தகுதி பெற்று வழி வழியாய் பிறர்பொருட்டு பூசனை, எறியோம்பல், கடவுட்பேணல், ஆலையம் வலம் வரல், துதிபாடல், வணங்கி எழுதல், இறைவனைக் காணல் அவை ஏறி |

ஹரனை பிக்சாதான தர்மச்ரவண
தர்ம சங்கீர்த்தன புராண ச்ரவண
க்ருஹோப கரணயுக்தாசார

தேசிக சிவயாச்சார்ய உத்தரோத்

தராணாமபி வ்ருத்திர் பூயாத்இதி

பவந்தோ-மஹாந்தோனுக்ருந்நந்து [38]

அறிவித்தல், ஆவிற்கு தழை இடல், காக்கைக்கு உணவிடல், சிறந்தார்க்கு அவியிடல், அறம் கேட்டல் இசையுண்ணல் இல்லத்திற்கு உதவல் சிவன் அன்பு பெருக்கல் முதலான வற்றில் நலம் பெறுவானாக.

அ.க. ஆசான் இலக்கணமானது தமிழர்களிடத்திலிருந்து பெற்ற காக்கைக்கு உணவிடல் (பராய்க்கடன்) பிறர் பொருட்டு இறைவழிவாடு ஆவிற்கு வாயுறை அளித்தல் (ஆரியர்கள் பசுவை கொள்பவர்கள்) அறுவகைத் தொழிலோர், நடுகல் வழிபாடு, ஆரியர்களிடத்திலிருந்து தான் பெற்ற நால் வகை தீட்சை இதிலிருந்து தமிழர்களிடமித்தும் ஆரியர்களிடமிருந்து பெற்றுத் தோன்றியது ஆகமப்பண்பு என்பது தெரிகிறது.

பூசா ஜாதனா சஜ்நா-
ஷட்கர்ம
ப்ரவரா, த்விஜா ப்ரத்தனா

வித்யாநவத்யாசதா வாணிசந்திக்தாசிரரம்

கவிமுகை - ஸ்வாநந்தம் அவ்யாகுலா

சர்வே சந்து சிவார்சனா சுசரிதா [39]

(சௌ ஜந்யதோஷினி)

## சூர்நிகா

கோன் முறை அரசு செய்க, நல்லோர் நலம்பெறுக அறுதொழில், மற்றுலோர் இரு பிறப்பாலர் தினமும் சிவ வழிபாடு செய்க அனைவரும் நல்பெற

அ.க. அரசர் பொருட்டு ஆரியர் செய்யும் வழிபாடு, பிறர்பொருட்டு தமிழர் வழிபாடு இணைந்தது விளங்குகிறது.

கோரூபா மாத்ருகா சக்தி -

ச்ருங்காக்ரேசா;வ தேவதா ரு-

முகப்து சந்த்ர தைவத்யம் பிருஷ்டே
சரஸ்வதீ

பயதேஷீ தர்ம தேவாச்ச ஸ்கந்ததரோ

அக்நி சூர்யாக்நௌ

புச்சாக்ரோ சர்வ தீர்த்தாநி ரோம

மூலோரிஷீச்வரா-

## சிவலிங்க பித்ஷ்டாவதி

ஆவோம்பல்
பசுவெனும் அன்னையின் ஆற்றலில் கொம்பு நொனியில் அனைத்து அமரர்களும் முகத்தில் மதியும் பின்னழகில் கலைமகளும், திருத்தாளில் அரிவடிவும் முலைமார்பில் அழலும், ஆதவனும், வால்நுனியில் அனைத்து புனித நதியும், முடிநுனியில் பார்ப்பாரும் இவ்வாறே ஆவினது அருள்வடிவை வணங்குவோம் நாம்.

இத்யேவம் தேவதாரூபம்

கோதேவித்வாம் நமாம்யஹம்[40]

அ.க. ஆவினைக் கடவுளாக ஓம்பும் தமிழர்கள் ஆரியர்களின் பசுவை உண்ணும் அறத்தைப் பின்பற்றவில்லை என்பது தெரிகிறது.

இத்தம் த்ராவிட லிங்கஸ்ய[41]

திராவிடலிங்கத்திருவுருவை மனம் எண்ணி வடிவமைக்க

அக. பிற மதத்திலும் லிங்க வழிபாடு இருந்தது தெரியவருகிறது. தமிழில் லிங்க வழிபாடு சிறப்பாககூறப்படுகிறது.

இதம் க்ஷேத்ரம் சிவபுரி, வ்ருத்தாசல, அருணாசல, காலா சகாஞ்சி, தக்ஷின காஞ்சி, ச்ரீகண்டஹாலய மாத்ருபூத ராமநாத கைலாஸநாத, விஸ்வநாத, நடாரண்ய வடாரண்ய தர்பாரண்ய, வேதாரண்ய பில்வாரண்ய, ச்ரோத்ராரண்ய குராரண்ய, சாயாரண்ய, பஞ்சநதி, பாபவிநாச,கோகர்ண,கேதார, குடசாலீ, வடமௌீகுடதேவ கோபுர, ச்ரீபுர, கஞ்சிபுர சூதபுரி பௌண்டரீக புரபுஸ்யப பாத்ரபுவந மத்யார்ஜீந, மாயூர, கேதார, ப்ரபுதாதிஷு, சேஷத்ரேஷீ ப்ரஸ்தம் பூயாதிதி பவந்தோ, மஹாந்தோ நுக்ருன்னந்து[42]

இந்தக் கோயிலானது சிதம்பரம், முதுகுன்றம், அண்ணாமலை, கச்சி, தென்கச்சி, திருநலகண்ட தாயும்மான ராமநாத, கயிலாசநாத, விஷ்வநாத, நடரான்ய, வடான்ரான், வேதாரான்ய, பில்வரான்ய, (திருக்கடையூர்) தர்பாரன்ய (திருநள்ளாறு) ச்ரோத்தரான்ய, குராரன்ய (புரசூர்) சாயரன்ய, பன்ச்சநதை (ஐயார்) பாபவிநாச (பாபநாசம்) கோகர்ணம், கேதாரம், குடசாலி (திருநெல்வேலி) வடமௌலி, குடதேவகோபுர (கும்பகோணம்) ஶ்ரீபுர (திருவாரூர்) சூதபுரி (மாங்காடு), இபலான்ரிகபுர (ஆதிச்சிதம்பரம்) புஷ்யபபாத்ரா (முல்லைவாயில்) புவன (புவனகிரி) மத்யார்ஜன (திருவிடைமருதூர்) மாயுர, கேதார முதலிய கோயில்கள் புகழ் அடைந்தது போல் புகழடைக.

அ.க. இவ்வாலயங்களின் பட்டியல் பெரும்பாலும் தமிழகத்தில் அமைந் திருப்பது குறிப்பிடத்தக்கது.

### உத்தரகாமிகாகமம்

ஆப்த பௌருஷாத் க்ராஹ்யம் ததத்பும்சாம் ம்ருத சூதயோ-

தத்ராபி த்ரயமாசௌசம் பரத-பஞ்ச பௌருஷாத்[43]

இந்த தீண்டலானது மூன்று தலைமுறைக்கும் உரியதாகுக. மேலும் உள்ள தீட்டானது ஐந்து தலை முறைக்கம் உள்ளதாகுக.

அ .க. பரம்பரைக்கு முக்கியத்துவம் தருபவர்களாக ஆதிசைவர்கள் இருந்தது தெரிகிறது. ஏழு தலைமுறைக்கும் தீண்டல் (தீட்டு) உள்ளது

என்பதிலிருந்து பரம்பரையைப் பாதுகாத்தது தெரிகிறது.

செந்தமிழால் பாடி இறைவனை மகிழ்விக்க

த்ராவிடம் நருத்தயுதம் துவா
சமஸ்கிருதம் ததப்ரம்ஷம்
நாநாஸ்வரசமன்விதம்[44]

அ.க.

இதிலிருந்து ஆகமம் தமிழகத்தைச் சார்ந்தது என்பதுதெரிகிறது.

பதினெட்டு மொழிகளில் பாடல்களை யேனும் பாடுக.

யதாஷ்டாதச பாஷோத்தம் காநம் வா பரிகல்பயேத்[45]

அ.க. தமிழன் உடன்பாட்டு மொழியாக குறிப்பிடுவதால் உணரலாம்.

நாநாதேச ப்ரசித்தம் நர்த்தனம் பரிகல்பயேத்[46]

அனைத்துத் தேசங்களிலும் உள்ள ஆடல் கலைகளால் மகிழ்விக்க

அ.க. எல்லா பண்பாட்டுடனும் ஆதி சைவர்கள் விருப்பு வெறுப்பு முறை இன்றி உடன்பாட்டு முறையில் அணுகி யிருப்பது நன்கு உணரலாம்.

ஆசார்யைவ தேயம் ஸ்யாத் பஞ்ச கோசார வார்த்தகே[47]

ஐங்குலத்தோரை ஆசானாக வரிக்க

நிஷ்காதி தசநிஷ்காந்தா தேசிகே தக்ஷிணோ மதா[48]

அ.க. ஆகமக் கூற்று

நிஸ்கம் முதலான தட்சிணைகளை ஆசான்களுக்குத் தென்மதம் சார்ந்து அளிப்பாயாக. (தட்சிணோமதா- தெற்கத்தி காரன்)

அ.க. தெற்கத்திய என்பதிலிருந்து தமிழர் நன்கு குறிப்பிடப் படுகின்றனர். பதஞ்சலியும் தாக்சிணாத்யர் தெற்கத்தி யர்கள் என்று நம்மைக் குறிப்பிடுவது நன்கு விளங்கும்

ஆசார்ய லக்ஷனம் வக்ச்யே லிங்க சம்ஸ்தாபநாயச பஞ்ச சைவா சமாக்யாதா சித்தாந்தேது ப்ரஜாபதே[49]

லிங்கத்தை எழுந்தருளச் செய்வதற்கு ஐச்சமயத்தாராகிய சித்தாந்தமானது கூறப்படுகிறது.

ஆதிசைவ த்விதியஸ்து சச்சிவப் ராம்மணச் ஸ்ம்ருத[50]

அ.க. லிங்க வழிபாடு தொன்மையாகவே தமிழகத்தில் இருந்து வந்ததை உணர முடிகிறது.

ஆதௌ சதாசிவேனவை தீகஷிதஸ் ஸத்வாதிசைவக, கௌசிக காச்ய பச்சைவ பாரத்வாஜோதகௌதம

ஆதிசைவர்கள் சிவபிராமணயர்கள் எனப் பட்டார்கள்.

அகஸ்தய பஞ்சைதே பஞ்சவக்ரேஷீ தீக்ஷிதர்

அ.க. பிற அந்தணர்களிடம் இருந்து தன்னை வேறுபடுத்திக் காட்டிக் கொள்வதற்கு சிவ என்ற அடை மொழியைச் சேர்த்துக் கூறினர்.

முதலில் சதாசிவனாலேயே தீட்சை அளிக்கப்பட்ட சைவர்கள் கௌசிக, காசிப, பரத்வாஜ, கௌதம, அகஸ்திய ஆகிய ஐவரும் சதாசிவத்தின் ஐம் முகத்தினால் தீட்சிக்கப்பட்டவர்கள்.

காச்யபர்-என்பது "பச்யக கச்ய பச்சைவ" என்ற வார்த்தை இடம்மாறி காச்யப என்றானது. இதற்கு "பார்ப்பான் என்று பொருள்.

பாலை கௌதமனார் பொதிய மலை அகத்தியர் [51]

அ.க. இதில் கூறப்பட்ட ரிஷிகளில் அகத்தியர் தமிழில் குருவாகவும், இந்தக் கோத்திரத்தில் பிறந்தாரின் பெயர்களையும் சில தொல்கவிஞர்களின் பெயர்களையும் கொண்டு ஆதிசைவர்கள் தமிழர் என்பதை உணரலாம்.

ஆதிசைவர்கள் என்று அழைக்கப் படும் இவர்கள் கோத்திரத்தில் (வேறுபாடு) உதித்த (கோசரம்- உயிர்ஓம்பி வருமாகிய (கடவுட்பேணி) இவர்களே ஆலயத்தை எழுந்தருளச் செய்யும் செயல்களுக்கு உரியவர்கள்.

ஆதிசைவ இமேக்யாதா

கோசரம் குலமுச்யதே

குலேஷே தேசு சம்ஞாத ஸ்தாபநாதி க்ரியார்ஹகா [52]

அ.க.தமிழகத்தின் தொல் குடியினராகிய இவர்கள்தங்களின்தனி அடையாளத்தை கோத்திரம் என்று ஆசிரியர்கள் குறிப் பிடுவதுபோல் "கோசரம்" என்ற சொல்லைப் பயன்படுத்தி உயிர்ப்பேணி, கடவுட் பேணி என்ற இலக்கிய அந்தனர் குறிப்பிலிருந்து சரியான தமிழாக்கம் பெற்றிருப்பதை உணர முடியும். திருவள்ளுவரும் "பகுத்துண்டு பல்உயிர் ஒப்புதல்" என்று கூறுவதிலிருந்து கோசர் என்பதன் சரியான தமிழாக்கமே 'உயிர் ஓம்பி'.

## இல்லறமும் நல்லறமும்

அறம் என்பது நால்வகை

பயிலுதல், பொருளீட்டல், அனுபவித்தல், துறத்தல்.

பிரம்மசாரியம், க்ருகஸ்தம், வானப்ரஸ்தம், சன்யாசம்

என்ற நான்கில் ''க்ருகஸ்தம்'' என்ற இல்லறமானது, பயிலும் மாணவர்க்கு அறிவிப்பதாயும், ''வானபரஸ்தம்'' என்பது முதியோர்க்குக் காவலாயும், சன்யாசம் என்ற துறந்தோர்க்கு அன்னமிட்டு அடிப்படையாயும் அமைவதால், மற்றெல்லா அறங்களைவிட ''இல்லறம்'' சிறந்தது.

# 7. செவ்விலக்கியமும் சிவாகமமும்

தென்மொழிப் பகுதியானது இலக்கிய வரிகளை அப்படியே கொடுத்து, விளங்கிக் கொள்ள சிறுகுறிப்புகளும் தரப்பட்டுள்ளது. மேலும், நம் ஆய்வுக் குறிக்கோளுக்குப் பொருந்தும் வகையில் உள்ள செவ்வியல் இலக்கியங்களில் காணப்படும் அந்தணர்கள் பற்றிய பகுதிகளே இங்குப் பயன்படுத்தப் பட்டுள்ளன. அவ்வரிகளானது வடமொழியில் உள்ள ஆகமத்தில் ஆரியரின் மொழியில் உள்ள ஆகமத்தில் காணப்படும் வரிகளே, அவற்றை மொழி பெயர்த்தது போல் உள்ள பகுதிகளை இங்கே சுட்டுவதன் மூலம் பொருள் சார்ந்து இவை முழுவதுமாய் தமிழர்களுடைய பண்பாட்டு முறையே என்பதை இலக்கிய வரிகள் சான்று பறைகின்றன். இது தமிழ் நெறியே வடமொழியில் பதிவு செய்யப்பட்டது என்பதை நிறுவுவதற்கு உதவும்.

இந்த பகுதியில் உள்ள

ஆ. ஒ - என்பது ஆகம ஒலி பெயர்பு

ஆ. மொ - என்பது ஆகம மொழிபெயர்பு

செ. கூ - செவ்விலக்கியக் கூற்று

நி. க - அதன்வழி அறியப்படும் நிரல் (வரிசை) கருத்து

என்பதைக் குறிக்கும்.

ஆ. ஒ.

"காசிப - கௌசிகம் சைவ" . . . . . அதி தீ கஷிதா (ஞா.ப.243)

ஆ. மொ.

காசிபரும் கௌசிகரும் . . . . . . திக்கை செய்யப்பட்டவர்கள்

செ. கூ. "கோசிக மாமணிக் கூறக்கேட்டே" (சில.ம.புற:53)

நி. க.

கௌசிக கோத்திரத்வர்கள் அந்தப் பெயரை வைத்துக் கொள்வர்.

அதனால் ஆதிசைவ ஐங்கோத்திரத்தில் ஒருவரான கௌசிக கோத்திரத்திற்கு உரியர் என்க

ஆ.ஒ.

சிகரே தீபம் சம்ச்தாப்ய
*மாகோத்சவ விதி-"கார்த்திகை"* *(கைப்.ப.4)*

ஆ.மொ.

செ.கூ. உயர்சிமை மருங்கில் விளக்கை நிறுத்தி

அருவி ஆன்ற உயர் சிமை மருங்கில் பெரு விழா விளக்கம் போல

நி. க.

மாதாந்திர விழாக்கால சிறப்பு கோயில் வழிபாட்டில் கார்த்திகை மாத முழுநிலவு அன்று கோபுரத்தின் மேல் விளக்கு வைத்து வணங்கும் வழிபாடு இன்றும் உளது.

ஆ.ஒ.

*கால லோபே நா வ்ருச்டி நஅதிவ்ருட்டிநிவ்ருத்யர்த்தம்*
*(ப்ர.ப.4)* சங்கல்பம்

ஆ.மொ.

*காலக்குறைவினால் மழையின்மை போக்க*

*அழல் சென்ற மருங்கின் வெள்ளி யோடாது மழை வேண்டும் புலத்து மாரி நிற்ப (பப.13:25)*

நி.க.

செவ்வாயும், சுக்ரனும் சேர்ந்தால் மழை வராது என்ற சோதிடக் கருத்தும், அதைக் கண்டு சொன்ன அந்தணர்கள் இருந்தார்கள் என்றும், அவர்கள் "நிமித்தகர்கள்" என அரசனின் ஐவகை சுற்றத்துள் ஒருவர் என்று, அதற்கான பரிகாரமாய் சிவன் தலைமேல் தாராபாத்திரம் (நீர்செட்டு) கட்டப்படுவது.

ஆ.ஒ.

சடக்ஞோ சட்கர்ம நிரத

*(கை.18)* ஆசீர்வாதம்

ஆ. மொ.

ஆறு அறி அறு தொழில் செய்த

செ.கூ. ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து *(கலி.க:1)*

நி - க

ஆறு வகையாக எதிர்காலத்தை அறிந்து நல்வழிச் செலுத்தும் அந்தணர்கள் என்றும் அது அவர்களுக்கு இறைவனால் கூறப்பட்டது (ஆகமம்) என்ற கருத்து.

| | | |
|---|---|---|
| சகுணம் பார்த்து சொல்லல் | - | பல்லி கத்தல், நாய் ஊளையிடல் போன்றன |
| ஜ்யோதிஷம் பார்த்து சொல்லல் | - | பிறந்தநாள் கொண்டு அன்றிருக்கும் கோல் அமைவு கொண்டு கூறுவது |
| . நிமித்தம் பார்த்து சொல்லல் | - | நட்சத்திரம் விழுதல் போன்றது |
| வாக்கு பார்த்து சொல்லல் | - | மந்திரம் சபித்து கூறல் |
| சோழி, கழற்சிகாய் | - | சதுரங்க பலகை எழுதி கூறுவது வெற்றிலைப்பாக்கு கொண்டு |
| குறி கூறல் | - | ஒருவர் மேல் இறைவன் ஆவேசித்து கூறல். |

ஆ. ஒ.

*சிவ விப்வீரர் குரு க்ரமாத் (காழி.ப.18)*

ஆ. மொ.

*சிவ வேதியர்கள் வழி வந்த மரபிலிருந்து*

*செ.கூ. மந்திர விதியின் மரபுளி வழாஅ (திமு:95)*

*நி க*

*மந்திரத்தைப் பரம்பரையாய் பெற்று ஓதிவந்த வழக்கம் தொன்று தொட்டேயிருப்பது*

ஆ. ஒ.

*வடாரண்ய, தர்பாரண்ய, குராரண்ய, பில்வாரண்ய*

*ப்ரபூதாதி சேத்ரேசு (கைச்.18) ஆசீர்வாதம்*

ஆ. மொ.

ஆலங்காடு, தருப்பைக்காடு (ஒருவகைப் புல்) குராமரக்காடு, வில்வக்காடு முதலிய கோயில்கள் போல

*காடுரை கடவுட் கடன் கழிப்பிய பின்றை (பொ:52)*

நி. க

பெரும்பாலும் காடுகளில்தான் முதலில் கோயில்கள் இருந்தன. மேலும், காட்டிலே மட்டுமே வசிக்கக்கூடிய (காடுகிழாள்,

கொற்றவை, வனபத்ரகாளி, வனதுர்க்கை) போன்ற தெய்வ வழிபாடு கூறப்பட்டுள்ளது.

ஆ. ஒ.

*கைலாச வாசிநே நம -*
*(சிவசஹஸ்ரநாமம், ப.28)*

ஆ. மொ.

கையிலை மலையில் வசிப்போநே போற்றி

செ.கூ. *கடவுள் மால் வரை கண் விடுத்தன்ன அடையா வாயில் அவன் அருங்கடை குறுகி (சிறு:205)*

நி. க.

கடவுளர் வீற்றிருக்கும் மேரு மலையின் கண் போன்றது. ஏனையோர் புகுதற்கு அரிய வாயில். அது எப்போதும் திறந்திருக்கும் ஆகமம் வணங்கும் கைலாச நாதனை தமிழர்கள் தெளிவாக வணங்கியிருப்பது அறிய முடிகிறது.

ஆ. ஒ.

*. . . . . ச்வாநகுக்குடாபி சம்ஸ்ப்ருச்டம் வாதஸ்யுபி*
*தத்தோச சாந்தயே யத்ர ப்ரோக்சநம் க்ரியதே ந்ரு பி -*
*(வாம தேவபத்தி, ப.26)*

ஆ. மொ.

நாயும், கோழியும் தீண்டினால் அதற்காக அந்த இழுக்கை போக்க மங்கல நீராட்டை அரசனானவன் செய்து.

மனை உறை கோழியொடு ஞமலி துன்னாது

செ.கூ. மறைக்காப்பாளர் உறைப்பதிச் சேப்பின் *(பெ:301)*

நி. க.

ஆதிசைவ அந்தணர்கள் கோழியையும், நாயையும் இழுக்காக கருதும் ஆகமக் கொள்கை தமிழக அந்தணர் பற்றிய செய்தியாக கூறப்பட்டுள்ளது.

ஆ. ஒ.

*தக்ச சவ்ய கரே க்சிப்த வேத்ர யோக தர்வேஷ்டிகம் . . . . .*
*. . . . சைவத்விசா க்ராநும் (சிவாகமத்யா நரத்நாளாவளி, ப.40)*

ஆ. மொ

வல, இடக்கையில் துணியைக் கட்டிய ஓது கோல் வைத்திருப்பவரும், யோக ஆடைகட்டி யவரும், ஆதி சைவ குழந்தையுமாம்.

செ.கூ. கல்தோய்த்து உடுத்த படிவ உண்டி பார்ப்பான், முக்கோல் அசை நிலை கடுப்ப. நற்போர், ஓடா வல்வில் தூணி நாற்றி (மு:37)

நி. க.

ஆதி சைவர்கள் கையில் யோகதண்டம், மாணதண்டம், பச்சதண்ட ம், ஒரு நிலைக்கு ஒன்று வீதம் முக்கோல் ஏந்துவதும், அதில் துணி சுற்றுவதும் ஒரு விதமாக தாம் சுற்றி கட்டிக் கொள்வதும் தெளிவாகும்.

ஆ. ஒ.

சந்யாசம், உபவாசம், ச. வ்ரதம் யக்ஞ கர்ம ச தீர்த்த யாத்ராநு கமநம் சைவா பஞ்ச விவர்சிதா (ஞானாவரண விளக்கம், ப.241)

ஆ. மொ.

துறவு, உண்ணாமை. நோன்பு (ப்ரம்சர்யம்) புனித நீராடல், யக்ஞம் (மாமிசம் சொரிந்து வளர்க்கப்படும் வேள்வி) ஆதிசைவர்கள் ஐந்தினின்றும் நீங்கினார்களே.

செ.கூ. நிண ஊன் சுட்டு உருக்கமைய நெய்கனிந்து வறை ஆர்ப்ப, குருஉக்குய்ப் புகை மழை மங்குலின் பரந்து தோன்றா வியன் நகரால், பல்சாலை முதுகுடுமியின், நல்வேள்வித் துறை போகிய (மது:755)

நி க

ஆரிய அந்தணர்கள் மாமிசத்தோடு கூடிய பலி கொண்ட வேள்வியை (யாகத்தை) செய்வார்கள் என்பதை "நின ஊன் சுட்டு உருக்கமைய நெய்கணிந்து"

என்ற வாக்கியத்தாலும் தொல்குடி செய்யும் வேள்வி ஹோமம் என்று கூறப்படுவதை பிரித்தறிய வேண்டியது.

ஆ. ஒ.

சங்கஸ்தாபனம் விதாய

(சிற்பச் செந்நூல், ப.140)

ஆ. மொ.

ஆகம மரபுளோர் திசை, சூரிய ஒளியின் போக்கு அறிய இரு கோள்களை நட்டு அதன் நுணியில் சங்கை வைத்து கோடு வரைந்து ஆலயத்தின் திசையையும், கடவுளரின் உருவத்தை வைக்க வேண்டிய பகுதியையும் உறுதி செய்வது சங்கஸ்தாபநம்.

செ.கூ. "விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம் இரு கோல் குறி நிலை வழுக்காது குடக்கு ஏர்பு ஒருதிறம் சாரா அரை நாள் அமயத்து, நூலறி புலவர் நுண்ணிதின் கயிறுஇட்டு, தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி" (நெ:73)

நி க

மேற்கண்ட பாடல் வரிகள் ஆகம மரபுப்படி, கோயிலும், அரண்மனையும் சிற்பிகள் அமைத்தார்கள் என்றவாறு.

ஆ. ஒ.

கர்ஷனாதி ப்ரதிஷ்டாந்தம்

மூலேனைவ சமாசரேத் க்ருதஞ்ச உப பேதேந கர்தா பர்தா விநச்யதி

ஆலய அமைப்பு முதலாய நான்கு ஈராய இறைவழிபாட்டை ஒரே (மூலாகமதில்) ஆகமத்தில் கூறியவாறு செய்க. (காமி காகமம்,ப.60)

வேறுபாடு உடைய பிற ஆகமத்தால் வழிபாடு செய்யின் செய்வோன் செய்விப்போனுக்கு நலமிலை என்க.

செ.கூ. "அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்
பரவியும் தொழுதும் விரவு மலர் தூயும்
வேறு பல உருவின் கடவுள் பேணி" (குறி:5)

நி. க.

அறிவோர் பலரிடம் கேட்டு பலபேர் சொன்னவாறு பல்வேறு வகையில் பல்வேறு வடிவுடைய கடவுளைத் தொழுதும் வணங்கியது என்பது. ஒரே ஆகமம் சார்ந்த வழிபாடே பலவிதமாக கூறப்பட்டுள்ளது. பல்வேறு தெய்வ வழிபாடும் கூறப்பட்டுள்ளது என்பதாம்.

ஆ. ஒ.

"த்வஜ தண்டம் நமஸ்க்ருத்ய" (காரணாகமம்,ப.120)

ஆ. மொ.

கொடி மரத்தை வணங்கி

செ.கூ. கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி, அந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்கும் ஏறிப் பலர் தொழ, வம்பலசேக்கும் கந்துடைப் பொதியில் பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டிப் பெரு நல் யானையொடு பிடிபுணர்ந்துஉறையவும் (பட்:245)

நி.க

திருவாரூரில் கொண்டி என்ற அடிமை தலைமுறை இன்றும் உண்டு, கொடிமரம் வணங்குவதையும், சாணமிட்டு மெழுகுவதையும், நந்தா விளக்கும் பாதுகாப்பதையும், மிகவும் அழகாக வரிசைப்பட கூறியுள்ளனர். அம்பலம் என்பது ஆலயத்தைக் குறித்தது. கந்து - என்பது த்வஜதண்டத்தைக் குறித்தது.

ஆ. ஒ

சோம சூர்யாக்நி லோசநம்

(கைப்.40) சிவாகம்த்யாநம்

ஆ. மொ.

மதி கதிர் அழற் கண்கள்

செ.கூ. பசுங்கதிர் மதியமொடு சுடர் கண்ணாக (நற்:க:4)

நிரல் கருத்து

ஐந்திணை மருங்கில் சிவன் என்ற கடவுள் கூறப்பட வில்லை எனினும் சிவன் வழிபாடு இருந்தது எனத் தெரிகிறது.

ஆ. ஒ.

"பூஜா" (சிவ பூஜா விதி, ப.60)

ஆ. மொ.

பூஜா சென்ற சொல் தமிழில் "பூசனை" என்று தத் சமச் சொல்லாகும். இது மனித நலம் பொருட்டு விண்ணோரை வணங்கும் வாக்கு, மணம், காயத்தால் செயல்படும் வினையைக் குறிக்கும்.

செ.கூ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு (திரு.18)

நி. க

பூசை குறித்து வள்ளுவர் தெளிவாக கூறியுள்ளது.

ஆ. ஒ.

வச்யோச்சாட விஸாதாதௌ புமாம்ச . . . . .

ஆ. மொ.

வசியம் (வயப்பட வைத்தல்) உச்சாடனம், விரட்டுதல்

விடம் முதலிய தன்மையுடையன

செ.கூ. "இடு நீற்றால் பையவிந்த நாகம் போல்" (நா.66:3)

நி க

காமிகாகமத்தில் மந்தராவதாரப் படலத்தில் இப்பகுதி கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து மந்திரம் செய்து விடம் தீர்க்கும் முறை உள்ளது குறிப்பிடப்படுகிறது.

ஆ. ஒ.

ச்ரீ பார்வதீ குசா போக

குங்குமாங்கித வகச்சாம் (சிவத்யானம்.கை.30)

ஆ. மொ.

உமையாள் முலையொடு முயங்கி தடம் படிந்த குங்குமத் தோளாம்

செ.கூ. ஒட்டிய காதல் உமையாள் ஒரு பாலாக் கட்டடங்கம்

நி. க.

வாமதேவ பத்ததி என்னும் இறைவழி பாட்டு நெறிநூல் (ஆகமம்) பார்வதியும் பரமனும் இணைந்துள்ளதைப் போல் தலைவனும், தலைவியும் இணைந்தவாறு வணங்குகின்றனர்.

ஆ . ஒ.

"ஷட் த்ரிம்ஷத் தத் வாதிகம்
தஸ்மாத் உத்தர தத்வம்
அக்ஷரமிதம் (தைத்ரீய மந்த்ரகோசம்,ப.120)

ஆ. மொ.

36 தத்வத்தினும் மேலான தத்துவம் அழிவற்றது இது

செ.கூ. தத்துவ மான் நெறிபடரும் அந்நெறி, இப்பால் உலகின் இசைநிறீ இ - உப்பால் கோளுணர்ந்தால், உயர்ந்த உலகம் புகும் (நான்.30:4)

நி. க.

தத்துவம் அறிந்து வழிபடும் ஆகம முறை கூறியவாறு

ஆ. ஒ.

"யசுச்சாகாத்யாயி - (சந்யா வந்தனம்,ப.60)

ஆ. மொ.

யசுர் வேதம் பயில்வோன்

செ.கூ. அந்தணர் ஒத்துடைமை ஆற்ற மிக இனிதே (இனி.7:1)

நி க

'ஒத்து' என்பது பிறப்பு முதல் இறப்பு வரை செய்து முடிக்க வேண்டிய சடங்கிற்கான மந்திரத்தின் தொகுப்பாகும். இந்த ஒத்து- வடமொழியில் சாகை எனப்படும் ஒவ்வொரு வேதமும் பலசாகைகளாகத் தொகுத்தவாறு உள்ள. . . .

ஆ. ஒ.

ச சித்த மந்த்ரோ பவதி
(கணபதி அர்வசீர்ஷோபாநிஷத், ப.180)

ஆ.மொ.

மந்திரம் வாய்க்கப் பெரும்

செ.கூ. ஆங்கின்ன மந்திரம் வாயாவிடின் (இன்.1:4)

நி க

"மந்திரம் சித்தியாக வில்லை எனின்" மிகுந்த தொந்தரவைத் தரும் "அருந்தாப் பத்தி நியாயத்தால்" உணர்க நெடியவன் தாழ்ந்து நோக்கினான்

நெடிய (உயரமான) இராமன் அகத்தியரைத் தாழ்ந்து நோக்கினான் என்பது அகத்தியர் குள்ளமானவர் என்பதை நமக்கு உணர்த்துகிறது.

ஆ. ஒ.

சுத்த மந்த்ரேண அக்நிம்ப்ரஜ்வால்ய

*(அக்நி கார்ய விதி, ப.80)*

ஆ. மொ.

(சொற்குற்றமற்ற) மறைமொழியலழல் விளங்கச் செய்து

செ.கூ. பொச்சாப்(பு) இல்லாத புகழ் வேள்வித் தீப்போல, எச்சாரும் மின்னும் மழை *(கார்.7:3)*

நி க

குற்றமற்ற (சொற்களால்) "மந்திரங்களால் புகழ்ந்து பாடி வளர்கப்படும் தீயே வேள்வி

ஆ. ஒ.

தேஜோ மய தண்டாகார ரூபிம் த்யாத்வா

சொக்கப்பனைத்யானம்

*(கைப்.40)*

ஆ.மொ.

ஒளிமயமாக எரியும் கொம்பு வடிவில் எண்ணி

செ.கூ. கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கைப் போன்றனவே, கழி - கொம்பு - விளக்கு ஆகு பெயர் கழிகளால் ஆகிய விளக்கு பற்றி எரிவது *(கள.17:3)*

நி. க.

கார்த்திகை விழாவாக கொண்டாடப்படுவது தமிழக கோயில்களில் இன்றும் கொண்டாடப்படுகிறது. சொக்கப்பானை என்பது காய்ந்த ஓலையை ஆற்றி கட்டப்பட்ட பனைமரத்தண்டு. இதைக் கொளுத்தி கொண்டாடுவார்கள்.

ஆ. ஒ.

துர் நிமித்த சாந்தி நிவ்ருத்யர்த்தம்

சு நிமத்த சாந்தி தேவே

*(கைப்.90)* அக்நிகார்யம்

ஆ.மொ.

தீய சகுனங்கள் அமைவுரும் காரணத்திற்காக நற் சகுனங்கள் காரணமாக,

செ.கூ. பூங்கண் இடம் ஆகும் கனவும் திருநங்கின (ஐ.எ.41)

நி. க.

நிமித்தம் என்பது இங்கே நல்ல சகுணத்தை ஆகமம் கூறுகிறது.

ஆ. ஒ.

ஸ்தல வ்ருக்ஷம் (கைப்.4.வில்வனப்புராணம்)

ஆ. மொ.

கோயில் மரம்

செ.கூ. "செல்வக்கடம்பமர்தான் வேல் மின்னி" (ஐ.1:2)

நி க

ஒவ்வொரு சிவன் கோயிலுக்கும் ஒரு மரம் இருக்கும். பூசை இல்லாத நேரத்தில் இறைவன் அங்கு அமர்வான் என்பது ஐதீகம். அவ்வகையில் கடம்ப மரத்தில் முருகன் அமர்ந்திருப்பது கூறப்படுகிறது.

ஆ. ஒ.

அக்நி கார்ய விதி -

கைப். 8 ஆகமப்பகுதி

ஆ. மொ.

எரியோம்பல் நெறி

செ.கூ. புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி யூட்டிப்
புகை கொடுக்கப்பெற்ற புலவோர் - (தி.மொ.1:1)

நி க

முறையாக சமித்துக்களைக் கொண்டு செய்யப்படும் முறையினைத் தெளிவாக புலப்படுத்தயுள்ளனர்.

ஆ. ஒ.

"நிச்சயதார்த்தம்

போதாயன பூர்வப்ரயோகம்,ப.82

ஆ.மொ.

நல்லநேர உறுதி முறை

செ.கூ. "நாள் ஆய்ந்து வரைதல் அறம்" (தி.மா.52:4)

நி. க.

நிச்சயதார்த்தம் என்ற சடங்கு காலத்தை உறுதி செய்ததை வரையறுத்து கூறுகிறது.

ஆ. ஒ.

ச்ரி பத்ம நாயகி
சிரீ நிலோத்பலாம்பிகா

உமையம்மன் பெயர்

தலப்புராணம் திருவாரூர்.கை.5

ஆ. மொ.

தாமரைத் தலைவி அல்லியங்கோதை

செ.கூ. அரக்காம்பல் தாமரை அம் செங்கழுநீர் (கைப்.47:1)

நி. க.

தாமரை சூரியன் அல்லி - சந்திரன்

இவை இரண்டையும் கண்களாகக் கொண்டவன் இறைவன். அதை மறைமுகமா கற்பு மணம், களவு மணம் சுட்டி - காலத்தையும் சூட்டுகிறது.

ஆ. ஒ.

பரம்பராகதம் பூயாதிதிபவந்தோ
கைப்.12 ஆசீர்வாதம்

ஆ. மொ.

தொல்குடி வழி வழியாய் இருக்கக்கடவது

செ.கூ. தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியும் (திரி.1:2)

நி. க.

தொல்குடி என்பது பரம்பரையாக வரும் வாரிசு முறையில் வந்த தன்மையைச் சுட்டுகிறது,

ஆ. ஒ.

கர்மவிஹுன ஜன்ம ப்ராம்மண சாதிச்சாண்டால உத்தம -
சந்தாவந்தன விதி, ப.60

ஆ. மொ.

நெறி விட்ட பார்பரினும் குலமறியான் சிறப்பு

செ.கூ. தக்கினை, வேள்வி, தவம், கல்வி, இந்நான்கும், முப்பால் ஒழுங்கினால் காத்து ய்க்க (ஆ.3:1)

நி. க.

மேற்கண்ட நான்கு அந்தணர் நெறி வகையும் அதைப் பின் தொடரா இழிவும் பின் தொடரும் சிறப்பும் கூறப்படுகிறது.

ஆ. ஒ.

சறிர கத பூத தோஸாந் தக்த்வா
லிங்கப்பிரதிஸ்டாவிதி, 192, பூத சுத்தி

ஆ. மொ.

மெய் தோன்றிய குற்றத்தை எரித்து

செ.கூ. உடம்பொழிய வேண்டின் உயர் தவம் ஆற்றீண்டு (சிறு.6:1)

நி. க.

உடம்பை பாவனையால் எரித்து பழவினை அழித்து மந்திர யாக்கைச் செய்யும் ஆகம முறை கூறியது. அதற்குத் தவம் செய்யக் கூறுவது தமிழ்

ஆ.ஒ.

"பத்நீமபி காரயேத்"

ஆத்மார்தநித்ய பூஜா விதி, ப.90

ஆ.மொ.

மனையால் உடன் செய்ய வேண்டும்

செ.கூ. திருவாக்குந் தெய்வத்தையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு செய்வதே பெண்டிர் சிறப்பு (சிறு.43:2)

நி. க.

பெண்கள் ஆத்மார்த பூசையில் செல்வம் குறித்து வழிபாடு செய்தது.

ஆ.ஒ.

வேத விஸ்மரணமந்த்ரம் (சிக்ஷாவல்லி, ப.92)

ஆ.மொ.

மறையை மறவாதிருக்க மந்திரம்

செ.கூ. மேதையில் சிறந்தன்று கற்றது மறவாமை

(முது.சி.11.3)

நி. க.

கற்பவை மறவாதிருக்க மந்திரங்கள் ஆகம நெறியான வேதத்தில் கூறப்பட்டுள்ளது.

ஆ. ஒ.

நாட்யோத்செவ ஹரகேஷத்ர
கலஹோன்ய சேஷத்ரப்ருத்
ஆத்தர்மோ நிதநம்ஸ்ரேயம்
சை வா பஞ்ச விவர்ஜிதா

கைப். ஆகம வனம்,. 140

ஆ. மொ.

கூத்தும் விழாவும் கொலைக் கலமும்
போரும் வேறிடமும் தன் அறனாம்
இறப்பினும் ஆதிசைவ ர்அ கல்வார்

செ.கூ. கூத்தும், விழவும், மணமும் கொலைக் களமும்
ஆர்த்த முனையுள்ளும் வேறிடத்தும் ஒத்தும்
ஒழுக்கு முடையவர் செல்லாரே (ஏ.62:1)

நி.க.

ஆதி சைவர்கள் ஆரிய அந்தணர்களின்றி முழுவதும் வேறுபட்ட தமிழர்கள் எனத் தெளிவாக உணர்த்தும் ஏலாதி

ஆ. ஒ.

சஞ்சிதாகம்யப்ராரப்த கர்ம
தோஷ சாந்த்யர்தம் கைப்.48. சங்கல்பம்

ஆ. ஒ.

செல்வினை நிகழ்வினை வருவினை
தொடக்கு அற

செ.கூ. அம்மை இழைத்த தலைப்பட் (டு) அழிவாயா இம்மையும் கொண்டுறுத்தும் ஈர்ம் பெயலாம் - மும்மை

உணர்ந்தார் திருவத்தர் ஓரார் உழணடைத் தளைப் படுவர் தட்பம் தெறார் (இன்னி.6:1)

நி. க.

சைவ சித்தாந்த கர்ம கோட்பாடு தெளிவாய் கூறப்பட்டுள்ளது.

ஆ ஒ

ஆசார்ய வரணம்

கைப்.1. ப்ரதிஷ்டாவிதி

ஆ மொ

ஆசானை அழைப்பது

செ.கூ. அந்தணாளர்க் கரசு வரைவின்றே (தொ.பொரு.மர:83)

நி. க.

அந்தணர்கள் அரசியல் பூண்டொழுகலும் விலக்கப்படாது. அதாவது மந்திரி புரோகிதனாகிய வழி கொடியும், குடையும், கவரியும், தாரும் முதலியன அரசர் பெற்று அவரொடு ஒருதன்மையராக இருத்தல்

ஆ. ஒ.

ப்ராம்மநே தீத்ய (கைப்.5.நித்யவிதி)

ஆ. பொ.

பார்பாரோதுக

செ.கூ. பார்ப்பாரோதுக (ஐ.நூ.வே.4:2)

நி. க.

பார்ப்பார்களைக் கொண்டு ஓதச் செய்து என்பது ஆகமத்தில் "வேத பாராயணம்" என்ற சடங்கிற்குப் பார்ப்பாரைக் கொண்டு ஓதவைப்பது ஒரு முறை

ஆ. ஒ.

"ப்ரம்மோபதேசம்"

(சந்தயாவந்தன விதி, ப.76)

ஆ. மொ.

மந்திரத்தைக் கூறச் செய்வது

செ.கூ. "மந்திரங்கொள்கென வாய்மையினோதி
மதி நான் முற்றிய மங்கலத் திருநாள்" (மணி.மந்:83)

நி. க.

"மந்திரத்தைக் காலமறிந்து உபசேதம் செய்திருப்பது"

ஆ. ஒ.

அர்சகஸ்ய சிவஸ்சாக்சாத்

(கைப் ஆகம வசனம், ப.42)

ஆ. மொ.

வழிபடுவோரே சிவனென்பது கண்கூடு

செ.கூ.நின்னோ ரன்னோ ரந்தணரருமறை (பரி.பு:65)

நி. க.

இறைவனுக்கு நிகரானவர்களாக வைத்து எண்ணத்தகுந்தோர் என்ற சான்று

ஆ. ஒ.

அதீக்ஷசோ சதுர்வேதி

கைப்.6 ஆகம வசனம்

ஆ.மொ.

தீட்சை இல்லாதவர் நான்கு மறை அறிந்தோன் ஆயினும்

செ.கூ. பார்பன மகனே பார்பன மகனே
செம்பூ முருக்கி ன்நல்நார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பனமகனே!
எழுதாக் கற்பின் நின்சொலுள்ளம்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்தும் உண்டோ மயலோவிதுவே (குறு. 156)

நி. க.

ஆரிய அந்தணர்களின் இலக்கணம்,
கையில் புரசதண்டு, கமண்டலம்,
வேதம் கூறுவது தெளிவாக கூறப்பட்டுள்ளது

ஆ. ஒ.

அக்நிம் ஸ்வவ்ருத்த ஜலோநாபி பூதம்

பூதசுத்தி, தேவிப்ரதிகடாவிதி, 16

ஆ. மொ.

தீ முரணிய நீரும் தோன்றிய

செ.கூ. தீ முரணி நீரும் என்றாங்கு (புற:2:5)

நி. க.

ஆகமக் கருத்தின் படி தீயிலிருந்து

நீர் தோன்றிய தன்மை கூறியவாறு

ஆ. ஒ.

ச்ரிகண்டத்யாநம் விஷ பாயிநே

(தய்ானரத்நயவளி, ப.60)

ஆ. மொ.

கரிய மிடற்றை உடையவன் உருவம் விடமுண்டி

செ.கூ. காரி உண்டிக் கடவுளது இயற்கையும் (மலை:83)

விடத்தை உண்டதால் கண்டங் கருத்தவன். ஆதலால் ச்ரீ கண்டன். அவன் உருவம் தான் ப்ரதோஷ காலத்தில் வணங்கத்தக்கது.

## 8. வடவேதியர்களும் சிவவேதியர்களும்

அந்தணர்கள் என்றதும் பொதுமக்கள் மத்தியில் ஓர் இனத்தவர் என்றே கருதப்படுகின்றனர். அவர்களுக்குள் இருக்கும் நுட்பமான வேறுபாடு ஆதி சைவத்தின் தோற்றுவாயாக இருப்பதால், தமிழ் தொல்குடியினர் ஆரியர்கள் இவர்களின் கலப்பு, அதன் வழித்தோன்றிய மணிப்பிரவாளம் என்ற மொழி வகை கிரந்தம் என்ற எழுத்து இவை தொடர்பான கருத்துக்களை நாம் உறுதி செய்து கொள்வதற்கு இந்த வேறுபாடுகளை முக்கியமானதாக இங்கு சுட்டுவது தேவையாகிறது.

| வடவேதியர்கள் | தொல்குடியினர் |
|---|---|
| வடவேதியர்களின் உறுதிக் கோட்பாடு துறவே (தை.140) சந்நியாசயோகாத்யதய - சுத்த சத்வா | தொல்குடியினரின் கொள்கை இல்லறமே (துறவு கூடாது) |
| இடம் பெயர்வார்கள் | இடம் பெயர மாட்டார்கள் |
| கூட்டமாக வாழ்வார்கள் (தில்லை மூவாயிரவர், திருவெண்காடு எண்ணாயிரவர், ஆவுடையார் கோயில் முந்நூறு) | தனித்து வாழ்வர் |
| ஆரியர்கள் வேறிடத்திலிருந்து தமிழகத்திற்கு வந்தவர்கள் | தமிழகத்துத் தொல்குடியினர் |
| எரியோம்பி (அனலாடி) வேட்டல் (திவா:2365) | புனலாடி, மங்கல ஸ்நானம்; |
| பிறப்பும், இறப்பும் விளக்கோடு தோன்றும் (சாந்தி கல்யாண விளக்கு, இறந்த சடலத்தின் அருகில் விளக்கேற்றுதல்) | பிறந்தபோதும், இறந்த பின்பும் நீராடுவர் |

| | |
|---|---|
| கைவினைக்கருவி வேள்வி அகப்பை ஸ்ருக்கு, ஸ்ருவம் (பிரம்மா தியானம்) | கரகபாத்திரம் (தொல்.பொ.மர:71) |
| முன்குடுமி வைத்திருப்பவர் (சிதம்பர தீட்சிதர்) | பின்குடுமி வைத்திருப்பர் |
| பாதுகை அணியும் வழக்கம் உண்டு | பாதுகை அணியும் வழக்கம் இல்லை. |
| தத்துவக் கோல் வைத்திருப்பர் | மானக்கோல் வைத்திருப்பர் |
| மொட்டையடிக்கும் வழக்கம் இல்லை | ஒரு வயதில் மட்டுமே மொட்டையடிப்பர் |
| பின்பற்றப்படும் நீதி நூல் வேதம் | தொல்குடியினர் பின்பற்றுவது ஆகமம் |
| பிறப்பு முதல் இறப்பு வரை நாற்பது சடங்கு | ஆரியர்களின் 40 சடங்குகள்<br>தமிழர்களின் 16 சடங்குகள்<br>ஆலயத்திற்காக 8 சடங்குகள்<br>மொத்தம் 64 சடங்குகள்<br>தொல்குடியினரால் செய்யப்பட்டன |
| ஐவகைப் பட்டோர் (பிரிவு)<br>அறம் பேணி (நீதிபதி)<br>ஆருடம்பேணி (ஜோதிடம்)<br>அரசுப் பேணி (மந்திரி)<br>அழல் பேணி (சடங்குசெய் பவர்) | தொல்குடிப் பிரிவுகள்<br>சாமான்யசைவம் (2 வகைப்படும்)<br>மிஷ்ரசைவம் (6 வகைப்படும்)<br>சுத்த சைவம் (5வகைப்படும்)<br>வீரசைவம் (3கிளைப்பிரிவுகள்) |
| அறுவகைத் தொழிலோர் | சாமான்ய சைவம் |
| கற்றல், கற்பித்தல், பெறுதல், யாத்தல், வேட்டல், வேட்பித்தல் | 1. ஆலயத்தில் ஏவல் செய்வோர் அகத்தடியார்<br>2. ஆலயத்திற்காக புறத்தில் பணி செய்வோர் (புறத்தடியார்)<br>மிஷ்ர சைவம் (ஞா.241)<br>கணபதியை முழுமுதற் பொருளாய் கொண்டாடுபவர்<br>அம்மையை முழுமுதற் பொருளாய் கொண்டாடுபவர்<br>சிவனை முழுமுதற் பொருளாய் கொண்டாடுபவர்<br>பெருமாளை முழுமுதற் பொருளாய் கொண்டாடுபவர்<br>சூரியனை முழுமுதற் பொருளாய் கொண்டாடுபவர்<br>கந்தனை முழுமுதற் பொருளாய் கொண்டாடுவர்<br>சுத்த சைவம் (ஞா.243) |

| | |
|---|---|
| | ஐவகைப்பட்ட கோத்திரத்தார், காசிபர், கௌசிகர், பரத் வாஜர், கௌதமர், அகஸ்தியர்.<br>சிவலிங்கத்தையும் இணைபிரியா உமையம்மையையும் முழுமுதற் பொருளாக வழிபட்டாலும், அவரின் ஐந்து முகங்களின் பெயர்களான ஈசானம், தத்புருசம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் இதில் முகத்தையே சிறப்பாக குறிப்பிடுவர் அந்தந்த முகத்தின் பெயரே அவ்வாசான்களை சூட்டும் பெயராகும். அந்தந்த முகத்திலிருந்து தோன்றிய தெய்வங்களையே வழிபடுவர் தெய்வங்கள் (இறைத்திரு வுருவங்கள்) 16, 25, 50, 64 என்ற வேறுபட்ட கருத்துண்டு. ஒரு முகத்திற்கு ஐந்து ஆகமம் வீதம் இருபத்தைந்தும் என்றும் ஈசானத்திற்கு மூன்று கூடுதலாய் மொத்தம் 28 ஆகமங்களை முதற்நூலாகக் கொள்வர். |
| பிரம் மதத்தை வழிபடுவர் (அருவுருவப் பரம்பொருள்) இந்திரன் முதலாய் தேவர்களின் இனத்தை வழிப்படுவர் | வீரசைவம் (சந்யாசி) 10<br>அருவம்-இரகசியத்தை வணங்குவோர் (சிதம்பரம்)<br>உருவம்-நடராசரை வணங்குபவர் |
| தன்னையே அதுவாக கருதுபவர்கள். | அருவுருவம் - சிவலிங்கத் திருமேணியை மட்டும் வணங்குவர். |
| வடவேதியர்கள் அனைத்து வீட்டிற்குள்ளும் சென்று சடங்கு செய்வர். கோயில்களில் சடங்கு செய்ய மாட்டார்கள். | தொல்குடியினர் பிறர் வீடுகளுக்குச் செல்ல மாட்டார்கள்<br>வீடுகளில் சடங்கு செய்யமாட்டார்கள் கோயில்களில் மட்டும் சடங்கு செய்வர். |
| யாத்திரை செய்பவர் | யாத்திரை செல்லக் கூடாது (ஞா.ப.243) |
| விரதம் இருப்பார் | விரதம் இருக்கக் கூடாது |
| அந்தணர் சந்யாசியானால் காவி உடுத்துவர் | காவி எக்காலத்திலும் உடுத்தக் கூடாது |
| இறைத்திரு உருவம் வைத்து வழிபட மாட்டார்கள். நெருப்பை மட்டும் வணங்குவர். | இறைத்திரு உருவங்களை வணங்குவர் (சிற்ப.38) |

| | |
|---|---|
| சந்யாசிகளைக் குலகுருவாக கொள்வார்கள் | சந்யாசிகளை வணங்க மாட்டார்கள் |
| குலதெய்வ வழிபாடு இல்லை | குலதெய்வ வழிபாடு உண்டு |
| பிறர் பொருட்டு சடங்கையே செய்வர், பிரார்த்தனை செய்ய மாட்டார்கள் | பிறர் பொருட்டு வேண்டுதல் (பிரார்த்தனை) செய்வர் , சடங்கு செய்ய மாட்டார்கள். |
| தன்நல வழிபாடு செய்வார்கள் (ஆத்மார்த்த பூசா விதி பிறர் நல வழிபாடு செய்ய மாட்டார்கள் (பரார்த்த பூஜை) | பிறர் நல வழிபாடு செய்வர் |
| ஆரியர்கள் தொல்குடியினருக்குப் பெண் கொடுப்பர், பெண் எடுக்க மாட்டார்கள். | ஆரியர்களின் பெண்களை மணந்து கொள்வர். தங்கள் பெண்களுக்கு ஆண்களை எடுக்க மாட்டார்கள் (தற்போது இது வழக்கில் இல்லை) |
| ஆலயங்களில் கடவுட்பேணியாக பணியாற்ற மாட்டார்கள். | கடவுட் பேணியாக இருப்பார்கள். |
| ஆரியர்கள் தொல்குடியினரிடம் விபூதி பெறுவர். ஆனால் அவரைத் தன் வீட்டிற்குள் அனுமதிப்பதில்லை. முழு பிராமணர்கள் எனப்பட்டனர். | தொல்குடியினர் வீட்டில் ஆரியர்கள் அனைத்துச் சடங்குகளையும் செய்ய அனுமதிப்பர். முழங்கை பிராமணர் என்று அழைக்கப் பட்டனர். |
| ஆரியர் ஒரு வேதத்தில் ஒரு பகுதியை மட்டுமே பயில்வார்கள் (அபிவாதனா -வணங்கும் போது சொல்லும் அறிமுகத்தில் குறிப்பிடப்படும்) ஒரு வேதம் முழுவதுமாய் பயின்ற பின் கற்பித்தல் பிரிவில் உள்ளவர்கள் மட்டுமே பிற வேதங்களையும் பயில்வர் ''அபிவாதையே காசிப நைத்திருவ கௌசிக த்ரயார்''. | நான்கு வேதங்களையும் பயில்வர் பின்பற்ற மாட்டார்கள். |
| வேதம் படைத்த ரிஷிகளையே குருவாகக் கருதுவர் (வியாசர்) அகோர ரிஷி | ரிஷியினால் போற்றப்பட்ட தேவதையை மட்டுமே குருவாகக் கருதுவர் சதாசிவோ தேவதா (ரு.ப.1) |
| தட்சிணை பெறும் வழக்கம் உண்டு. நிலத்தைத் தானமாகப் பெறும் வழக்கம் உண்டு (வாமன அவதாரம்) | இறையிலி நிலங்களை உரிமையளிக்கப்படும், தட்சினை வழங்கும் வழக்கம் இல்லை. இவர்களுக்குப் பணமாக அல்லாமல் பொருளாகவே தரப்பட்டது. இது தற்போதைய நிலையில்லை. |

| | |
|---|---|
| பிறர் காதில் கேட்கும் வகையில் மந்திரம் சொல்வார்கள் | பிறர் காதில் கேளா வண்ணம் மந்திரத்தை மனதிற்குள்ளே சொல்லுவார்கள். |
| மந்திரத்தை எழுதி வைக்கும் வழக்கம் இல்லை (எழுதாக்கிளவி) | எழுதி வைக்கும் வழக்கம் உண்டு. (தட்சிணாமூர்த்தி கையில் புத்தகம்) |
| | பாலைக் கௌதமனார்<br>பார்பான் காஸ்யபர்<br>அகத்தியநார்<br>கௌசிகன்-சிலப்பதிகார அந்தணன் |
| பல கோத்திரங்கள் உள்ளது. | பரத்வாஜர் என்ற கோத்திரத்தில் நிறைய தமிழ் இலக்கியங்களில் பெயர் குறிப்பிட்டுள்ளது. |

# ஆரியமும் செந்தமிழும்

இப்பகுதியில், தமிழக வரலாறும் பண்பாடும் என்ற தலைப்பில் பக்கம் 40-ல் கொடுக்கப்பட்டுள்ள சிந்துவெளி நாகரீகமும் ஆரிய நாகரீகமும் என்ற பகுதியை ஆகமங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டுள்ளது. [53]

| ஆதிசைவம் | சிந்துவெளி நாகரீகம் | ஆரிய நாகரீகம் |
|---|---|---|
| காமிகாதிஆகமத்தில் நகர அமைப்பு விளக்கப் படுகிறது. | நகர்ப்புற நாகரீகம் | நாடோடி, கிராம நாகரீகம் |
| சிற்பத்தில் தலைவேறுபாடு பல விதமாய் கூறப்படுகிறது. | சிந்துவெளி மனிதனின் தலை வேறுபட்டது. | ஆரியரின் தலை அமைப்பு வேறுபட்டது. |
| தெய்வதிருஉருவில் (அகோராஸ்த்ர த்யானததில் இது தெளிவாய் விளக்கி காட்டப்பட்டுள்ளது) (உத்.611) | சிந்துவெளி மனிதனின புருவம் நெற்றிக்குமேல் ஏறியிருக்கிறது. | ஆரியர் புருவம் நெற்றிக்குக் கீழ் இறங்கி உள்ளது. |
| கோயில்களில் உள்ள (த்யானத்தில் உள்ளபடி) காளி, வீரபத்திரர், அகோரஸ்தரம் போன்ற தெய்வத்திரு உருவத்தில் உதடு பிதிங்கியிருக்கும். | உதடுகள் தடித்துப் பிதுங்கியவை. | மெலிந்து உள் வாங்கியவை. |
| தமிழகம் முழுவதும் இந்த வழிபாடு இன்றும் காணப் படுகிறது. | லிங்க வழிபாடு கொண்டவர்கள். | லிங்க வழிபாட்டை எள்ளிப் புறக்கணித்தவர்கள் |
| இறைத்திருவுருவின் கீழ் வைக்கப்படும் யந்திரம் இத்தகையதுதான் (சக.ப.142) | எழுத்து முத்திரை மற்றும் செப்பேட்டில் செய்திகள் பொறிக்கும் வழக்கம் உள்ளவர்கள் | எழுத்து முத்திரையோ செப்பேடுகளோ அறியாதவர்கள் |
| தமிழில் மாட்டுப் பொங்கல் மலையாளத்தில் யானை | காளை, யானை, காண்டா மிருகம் முதலியவற்றை அறிந்து போற்றினர் | பசு, ஆடுகள் தவிர பிறவற்றை அறிந்து போற்றவில்லை. |
| மீனாட்சி என்ற பெயரும் ஆதிசைவரின் நடராஜா திருவுருவில் கங்கை மீனாக சித்தரிக்கப்படுகிறது. (காசி.ப.292) | மீனுக்கு வாழ்வில் உயர்விடம் தந்தனர். | மீனுக்கு, வாழ்வில் அத்தகைய உயர்விடம் அளிக்கவில்லை. |

| | | |
|---|---|---|
| காரணாகமத்தில் எந்தெந்த இறைவனுக்கு எந்தெந்த வாகனம் என தெளிவாக கூறப்பட்டுள்ளது. (உ.) சிவன் காளை, பாலமுருகன் மயில் கருடன்-விஷ்ணு (பூர்.ப.241) | வாகனங்களாக விலங்கு பறவைகளை இறைவனுடன் தொடர்புபடுத்தினர் | இறைவனுடைய வாகனங்களாக விலங்கு பறவைகளைத் தொடர்பு படுத்தவில்லை. |
| | கி.மு. 2000 ஆண்டு | கி.மு.1200 களுக்கு முற்பட்டது. |
| ஆதிசைவம் இறைவனை பசுபதி என்றே குறிப்பிடப்படுகிறது | யோகநிலையில் சாந்த சொரூபியாக அமர்ந்த பசுபதி (சிவன்)வழிபாடு கொண்டது. | உருத்திரமூர்த்தியாக சிவனைக் குறிப்பிட்டு அவரை ஒரு பெருங் கடவுளாக மதிக்காதது. |
| கோயில்களில் சொல்லப்படும் கால, இட, செயல் தெளிவுக்கான சங்கல்பம், தற்போது பின்பற்றப்படும் பஞ்சாங்கமுறை நட்சத்திரத்தை மையப்படுத்தியே கணக்கிடப்படுகிறது. | சிந்துவெளி மக்களின் சமயம் கோள்கள் விண்மீன்களுடன் தொடர்புடையது. | அவ்வாறு தொடர்பு காணாதது. |

# 9. தென்தமிழ் வடமொழியானது எப்பொழுது?

வழிபாட்டு செயல் முறைகள் முன்பு முறையாக, முன்மாதிரியாக யாரும் தென்மொழியில் தனியான வகையில் பதிவு செய்தது இல்லை.

தமிழ் தொல்குலத்தோர் இறையியல் சார்ந்த நடைமுறைகளை மறைமுகமாகவே பின்பற்றி வந்தது வழக்காய் இருந்தது.

தொல்குலத்தோர் வணங்கும் கடவுள்கள், வணங்கும் இடம் மற்றும் காலம் சார்ந்த வகையிலும் அமைந்திருந்தது. ஆகையால் பல்வேறு முறைகள் (வழிபாட்டு வழி முறைகள்) ஒருங்கிணைந்து தொகுப்பது சற்று கடினமாய் இருக்கலாம். பேச்சாயிக்கு-கருவாடு, வீரனுக்கு-சாராயம், குட்டிசாத்தானுக்கு-பன்றி இதுபோல என உணர்க.

பொதுவாக வயதில் முதியோரே வழிபாடு செய்து வந்தனர். அவருக்குப் பின் அவரது புதல்வரே செய்து வந்ததால் எழுத அவசியமின்றி பழக்கத்திலேயே தொடர்வதாக இருந்தது. எழுதி வைத்துப் படித்தல் என்பது பெரும்பாலும் நீதி மன்றம், இலக்கணம் போன்றவையே வழக்கில் இருந்ததால், உலக வழக்கம் பற்றி வழிபாட்டு முறை நூல் எழுதப்படாமல் இருந்தது.

இறைவழிபாட்டுச் செயல்முறைகள் மறைவானதே என்ற கருத்தும் அவைகளை வெளிப்படுத்துவோருக்கு இடையூறு நேரும் என்ற நம்பிக்கையும் மக்களிடத்திலே வேரூன்றியிருந்தது.

"யோ மோகாத் தாச்யதி பாபியான் பவதி"

"மோகத்தால் இரகசியத்தை சொன்னவன் பாபத்தை
அடைவான்"

அதர்வசீர்சோபநிஷத்

தொடர்ந்த வழிபாடு என்று தினமும் தொல்குலத்தோர் எதையும் பின்பற்றி யதில்லை. அதனால் பயிலும் அளவிற்குச் செய்தி விளக்கம் தேவையாய் இருக்கவில்லை.

குலதெய்வ பூசை வருடத்திற்கு ஒருமுறை மட்டுமே செய்யும் வழக்கம் இருந்தது.

தொல்குலத்தோர் மந்திரம் என்று ஒரு சிறு சொல்லையே மீண்டும் மீண்டும் உச்சரித்து வந்தனர். ஆகையால் எழுதி வைக்கவில்லை (ஆறு எழுத்து மந்திரத்தை அருணகிரி திருப்புகழ்).

தொல்குலத்தோர் இறைவழிபாட்டில் பெரும்பாலும், இசைக் கருவிகளையும் (கரகம், உடுக்கை, யாழ்) வேண்டுதல்களையும் செய்யுள் வடிவிலேயே அமைத்துப் பயன்படுத்தினர்.

ஒன்றன்பின் ஒன்றாக வரிசைப்படுத்தியோ வழிபடும் எல்லா இடத்திலும் ஒருங்கிணைந்த தன்மையாக உள்ள செயல் முறைகளையோ பொருள்களைப் பயன்படுத்தும் வகைகளையோ பதிவு செய்யவில்லை. பால்முனி, பச்சைமுனி, மகாமுனி, பால், கோழி, முட்டை, பன்றி, சர்க்கரைப் பொங்கல்.

வழிபாட்டிற்கான கருவிகளைப் பற்றிய குறிப்பும் இல்லை (மணி, தீபாராதனை தட்டு முதலியன).

மலரும், மணப்பொருளும், சூழ்ந்துள்ள மக்கள் பயன்படுத்தும் பொருள்களை வைத்தே வழிபாடுசெய்தனர். (முத்தாரம்மன் திருவிழா).

வடமொழியில் தொகுத்ததன் காரணம் என்ன?

வடமொழியில் முன்னதாகவே வழிபாட்டு விளக்கமுறை செம்மையுறத் தொகுக்கப்பட்டிருந்தது பூர்வ மீமாம்சா

சில வழிபாட்டில் உள்ள செயல்முறைகள் தமிழ் வழிபாட்டில் உள்ளபடி இருந்தன. அவை, எளிமையாகவும், செம்மையுறவும் தொகுக்கப்பட்டிருந்தன (நறுமணப் பொருள்களைப் பயன்படுத்துதல், சாம்பிராணி போடுதல், விளக்கேற்றுதல்).

நிலையாக, ஒருங்கிணைந்த அமைப்பை அனைத்து வழிபாட்டிலும் பெற்றதாய் இருந்தது (தூப, தீப, நெய்வேத்தியம்)

வழிபாடு சார்ந்து தினமும் உள்ள சில நடைமுறைகள் செம்மையாக தொகுக்கப்பட்டிருந்தன. நித்யானுஸ்டானவிதி.

பிறப்பு, இறப்பு, மற்றும் மகிழ்வான மனித சூழல்களின் போது செய்ய வேண்டிய செயல்முறைகள், நன்கு தொகுக்கப் பட்டிருந்தன (பத்ததி).

நெடிய மந்திரங்கள், தொடர்ச்சியான செயல்முறைகள், இவைகள் அதிகம் காணப்பட்டன (மந்திரம் சொல்லிக் கொண்டே வழிபாடு செய்வது).

வழிபாடு என்னும் செயலைப் பிறருக்காக ஒருவர் எவ்வாறு செய்ய வேண்டும் (இறையுணர்வைப் பிறர்க்கு உணர்த்தும்) என்பது, ஒரு தனி மனிதரின் கீழ் அரசு நிறுவனம் போல் படித்தர நிலையில் இயங்கும் முறைமை போல் ஒரு ஆசானின் கீழ் அனைவரும் இணைந்து இயங்கும் முறை தெளிவாக கூறப்பட்டிருந்தது (சாதகர், போதகர், பரிசாரகர், உபதிஸ்டா).

தேவை, காலம், சூழல் இவைகளுக்கேற்ப அவ்வப்போதைய நடை முறைகளாக இருந்த வழிபாடு எச்சூழலிலும், குழப்பமில்லாமல், வடிவமைக்கப்பட்ட சட்டகத்தில் அதற்கென்றே தெளிவுற உருவாக்கப் பட்டிருந்தது.

வழிபாடு செய்வதற்கான சில தகுதிகளையும் வழிபாடு செய்து வைப்பதற்கான தகுதிகளும் நன்கு வரையறுக்கப்பட்டிருந்தன. (அதிகாரி) தொடர்ந்து ஆரியர்களின் வெற்றி அவர்களைப் பின்பற்றுவதற்கான ஒரு சிறு காரணமாகவும் அமைந்தது.

வாழ்வில் வெற்றிகான வழியில் வழிபாடும் ஒரு பகுதி, என்றிருந்த நிலை போய், வழிபாடே வெற்றிக்குக் காரணமாய் அமைந்தது போல் இருந்தது ஆரியரின் வழிபாட்டுக் கொள்கை.

வழிபாட்டு முறைகள் நன்கு பிறருக்குப் பயிற்றுவிக்கப்பட்டன. (கற்றல், கற்பித்தல்) "வேதோநித்யமதியத"

ஆரியர்கள் வழிபாட்டு நெறியை வாழ்க்கையின் தொடர்ச்சியாகவும் பல சிக்கல்களுக்கிடையே இடையீடு இன்றி பின்பற்றியதும் அவர்களது வழிபாட்டுச் சிறப்பை நமக்கு உணர்த்த காரணமானது (தீயோம்பல்).

பிறர் நெறியை ஆரியர்கள் ஏற்காத தன்மையும், தன் நெறியில் அவர்களுக்கு உள்ள ஈடுபாடும் அசைக்க முடியாத நிலையில் இருந்தது.

ஆரியர்கள், "இறையை அடைதற்காகவே வாழ்க்கை நெறி", என்ற கொள்கையுடையவராதலால் எல்லா நிலையிலும் ஆன்மீகத் தொடர்ச்சி விடாதிருந்ததும் ஆகும். "அந்நிய சாஸ்த்தரம் நப்ரவ்ருத்யதே"

"பிற நெறி பிடித்தொழுகாதிருக்க"

புதிதாக இறைவழிபாட்டு நுணுக்கங்களை எழுதி வைக்கவும், அதை முன் மாதிரியாக விரைவாக வடிவமைக்கவும் ஏற்றதாக இருந்தது.

எ.டு. படத்தை மொழி பெயர்ப்பது என்பதை விட மீட்டுருவாக்கம் செய்வது கடினமானது (Dubbing & Remaking).

வழிபாட்டு நுணுக்கம் மறைத்து வைக்கபட வேண்டியது என்கிற கொள்கை தொல்குடியினரிடத்து உள்ளதால், புதிதாக வந்த ஆரிய மொழியில் அதைப் படைப்பது என்பது மறைத்து வைக்க எளிமையானது. பிற தமிழர் அதை கற்பது அறிது.

தொல்குடி தமிழர்கள் தவிர மற்றவர் அதைப் பின்பற்றுவதும், ஆரியர்கள் அதை 'தமிழருக்கு கற்பிப்பதும்' அரிதாகும் என்பதாகும்.

பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல கால வகையினானே என்பதால் வழிபாட்டுச் செய்திகளைப் படைப்பது பழக்கமில்லை என்ற படியாக நீக்கி, புதிதாக வடபுலத்தோரிடம் உள்ள ஒன்றைத் தமக்குத் தக்கவாறு பயன்படுத்தல், "புதியன புகுதலும்;" தமிழர், ஆரியர்; இருவராலும் விளக்கப்பட்ட "கால வகையினானே" என்ற அடிப்படையில் தமிழ் வழிபாட்டுக் கருத்துக்களை, வடமொழியில் பதிவு செய்தல் ஆயிற்று.

வடமொழியில் உள்ளக் கருத்துக்களைத் தமிழ் தொலகுடியினர் பின்பற்றினால் புதிதாக "வழிபாட்டு நெறிநூல்" படைக்கத் தேவையில்லை. ஏற்கெனவே உள்ள வடபுலத்தோர் நூலையே பயன்படுத்தியிருப்பர்.

தொல் குடியினரின் நோக்கம் தமிழ் வழிபாட்டு முறையினை நெறிப்படுத்தலே அன்றி ஆரியனைப் பின்பற்றுவது அல்ல:

ஆரியர் மொழி அமைப்பை அப்படியே பின்பற்றி தான் அதைக் கற்கும் வாய்ப்பு அவர்களுக்கு இருந்தபோதும் அந்த மொழியிலேயே அதைப் படைத்தாலும் எழுத்துக்களை மாற்றியமைத்து, தமிழ் எழுத்துக்களைப் பயன்படுத்தி (க்ரந்த லிபி) தனக்கு மட்டும் புரியும் வண்ணம் ஆரியர்க்கு புரியாவண்ணம் பார்த்துக் கொண்டனர் தொல்குடியினார்.

தமிழ்த் தொல் குடியினர் ஆரிய "தேவநாகரி" மொழியை நன்கு கற்றாலும், தங்கள் தமிழிடத்தில் தன் படைப்புக்கான சில அமைவுகள் ஆரியத்தில் இருந்ததைப் புதிதாக கைகொள்ளவும், தயங்கவில்லை. "வந்தாரை வாழ வைக்கும்" தமிழ் பண்பாட்டை மறக்கவில்லை, அதனால், ஆரியரிடத்து சிறப்பு எழுத்துக்கள் தன் தமிழ் எழுத்தில் இல்லை என்றாலும் தமிழன் தன் இன மொழியாகிய மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்ற மொழி எழுத்துக்களைப் பயன்படுத்தி கிரந்த மொழி எழுத்து வடிவில் தங்கள் தொல்குடித் தமிழ் வழிபாட்டு நெறி விளக்கத்தை பின்னாளில் எழுதியிருக்கிறார்கள்.

# பயன்படுத்திய எழுத்துருக்கள்

மலையாளம்

மலையாளம்

மலையாளம்
கண்டம்

மலையாளம்
தமிழ் கு ஒற்றை
கொம்பு
தெலுங்கு
உகரம் தமிழ்

மலையாளம்
மலையாளம்
கரம்

கரம்
மலையாலம்

மலையாளம்
மலையாளம்

தமிழ்
நகரம் தமிழ்

மலையாளம்
வகரம் தமிழ்

மலையாலம்
மலையாலம்

மலையாலம்

தமிழ் 'இ'கரம்
நெடில்
வடிவம்

தமிழ் 'உ' கரம்

தமிழ் 'உ' கரம்
நெடில் வடிவு

தெலுங்கு "ஆ"
உயிர்மெய்
குறியீடு
பக்கவாட்டில்
பயன்படுகிறது.

தமிழ் "ள" கரம்

தெலுங்கு 'ஓ'கர
உயிர்மெய்
குறியீடு
பக்கவாட்டில்
உள்ளது

தமிழ் ஒற்றைக
கொம்பு

தமிழில் 'ள'
வடிவம்

தெலுங்கு
முறை "ம்" ஒலி

ஒலி "அஹ"
என்ற
தன்
அடையாளம்
தெலுங்கு

தமிழ்துணைக்கால்
வடிவம்

தமிழ் இகர
உயிர்
மெய்க்குறி

தமிழ் இகர
உயிர்மெய்க்குறி
நெடில்

தெலுங்
"ஆ"கார
உயிர்
மெய்க்குறி

'ஓ' கரக் உயிலீ
மெய்க்குறி
தெலுங்கு

| | | | |
|---|---|---|---|
| மலையாள மொழி வடிவம் െ | தமிழ் ஒற்றைக் கொம்பு ெ | மலையாள மொழி வடிவம் "ஐ" உயிர் மெய்க்குறி ൈ | தமிழ் "ஒ" கர உயிர்மெய்க்குறி ொ |
| தமிழ் எழுத்து 'ள' வடிவம் ள | தெலுங்கு பக்க வாட்டில் 'ம' கர ஒலி O | தெலுங்கு அஹ ஒலி, பக்கவாட்டில் இடப்படுகிறது | |
| க ஒன்று | உ இரண்டு | ௩ மூன்று | ௪ நான்கு |
| ரு ஐந்து | ௬ ஆறு | எ ஏழு | அ எட்டு |
| ௯ ஒன்பது | 0 சுழியம் | | |

தமிழ் என் எழுத்து வடிவமுறை அனைத்தும் பின்பற்றப்படுகிறது.

மேலும், வட ஆரியர்களின் பழக்கத்தை ஏற்றார்களே அன்றி எக்காரணம் கொண்டும் தமிழ் தொல்குடி மரபுகளை ஒரு சிறிதேனும் விட்டுவிடவில்லை என்பது ஆகமத்தின் தமிழாக்கம் புரிந்தவர்களுக்கு நன்கு விளங்கும்.

பிறமொழியைக் கற்பவர்கள் தன் தாய் மொழியின் வழி நின்று கற்பது உலகியல். அதுபோலத்தான் தொல்குடியினர் தாய் மொழியாகிய தமிழ் வழி தான் வடமொழியைக் கற்றார்கள் எனலாம்.

தெலுங்கு, மலையாளம், கன்னடம் இவையாவையும் தமிழ் மொழியாகவே கருதியிருக்கின்றனர் தொல்குடியினர். மொழியியல் வல்லுநர்களும் அதையே குறிப்பிட்டுள்ளனர் (கால்டுவெல்). அதனால் இம்மொழி எழுத்துக்களைத் தம்முடையனவாகவே கருதியது தொல்குடி.

தமிழகத்தின் எல்லை பாடல்களில் சுட்டப்படும் போதும், தமிழ்கூறு நல்லுலகம் மேற்கண்டமும் மொழியைத் தமிழாகவே, தமிழ் நாடாகவே, தமிழர்களாகவே கருதியது தொல்குடி.

தொல்குடியினரால் இயற்றப்பட்ட "ஆகமம்" பயன்படுத்தும் இடங்களும் இந்த நான்கு பகுதியில்தான் (திராவிடப்பகுதி) பின்பற்றப் பட்டு வருகிறது.

வட மாநிலங்களில் வணங்குவோரேதான் நேரடியாக (காசி) இறைவனை வணங்கியிருக்கிறார்கள். வழிபாடு பிறருக்காக செய்து வைக்கும் வழக்கம் இல்லை, இன்றுவரைக் காணப்படவும் இல்லை. பிறருக்கு, வேறு ஒருவர் வழிபாடு செய்யும் வழக்கம் தமிழினத்திற்குரியத் தனிப் பண்பு என்க.

ஆகமத்தில் கூறப்படும் ஆலய அமைப்பு முறைகள், மற்றும் உருவ அமைப்பு முறைகள் முழுவதுமாய் வேதங்களில் காணப் படவில்லை.

ஆரிய வேதம் "நிர்குணமான உருவமற்ற பரம் பொருளையே (பிரம்மத்ததையே) கடவுளாக கூறுகிறது.

தமிழகர்களின் படைப்புகளாகிய ஆலயங்கள் ஆரியத்தில் காணப்படவில்லை என்பதையும் தமிழகத்தில் மட்டுமே காணப் படுவதாலும், தமிழ் வழிபாடு தான் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது என உணர்க.

ஆகமங்களைத் தங்கள் ஆதிநூல்களாக, அதைத் தங்கள் நீதி நூலகக் கொண்ட தொல்குடிகள் அனைவருமே குல தெய்வமாக தமிழர்களின் தமிழ் தெய்வமாகிய சேயோன், மால், கொற்றவை, வேந்தன், வண்ணன் இவர்களை இன்றுவரை வணங்கி வருகிறார்கள்.

ஆகமம் சார்ந்த "தீஷா விதி" (அத்யேஷ்டி) என்ற நூல் பிறப்பு, இறப்பு, சடங்குகள் முதலியவற்றில் காணப்படும் செய்திகள் முழுவதும் தமிழகத்தில் வசிப்பவர்க்கு அன்றி வேறு, எங்கும் காணப்படவில்லை.

ஆரிய தொல்குடிக்கலப்பு என்பது தொல்காப்பியர் காலத்திலேயே வெளிப்படையாக இருந்ததால், வடசொல், திரிசொல், திசைச் சொல், இயற்சொல் என்று சொற்களைப் பிரிப்பதிலிருந்தும் சந்தி விதியில், குணசந்தி, விருத்தசந்தி போன்ற புணர்ச்சி விதிகள் பயன்படுத்தியதிலிருந்தும் கலப்பதற்குக் காரணமானவர்களே தொல்குடியினர் என்க. அவர்கள், தமிழ்ப் பண்பாடு காத்ததால் தான் அதுவும் தமிழெனக்கொண்டு விளக்கியுள்ளது விளங்கும்.

தொல்-காப்பு-இயம் தொன் மரபுகளைக் காத்தலுக்குரிய அவசியம் ஏற்பட்டதால்தான் பிறநாகரிகம் நம்முள் கலக்க முற்பட்டது என்பதால் ஆரியக் கலப்பும், அதனால் ஏற்பட்ட பாதிப்பும் தெளிவுர விளங்கும்.

மேலும், தொல்காப்பியத்தில் கருப்பொருளில் "தெய்வம் உணாவே" என்று வருவதைக் கொண்டு பண்டைய தமிழர்களிடத்து தெய்வம் மற்றும், இசைக்கும் உள்ள முக்கியத்துவம் நன்கு விளங்கும். தெய்வத்திற்கு முதன்மை தரும்போது அதை வணங்கும் தொல் குடியினருக்கு உள்ள சமூக மதிப்பு புலனாகும்.

ஒருகாலத்தில் தொல்குடிகள் மக்களோடு மக்களாய் இருந்ததால்தான் அதைப் பற்றிய தரவுகள் குறைவாக உள்ளன. தனித்து கூற அவசியமற்றுப் போயிற்று.

தென்மொழியில் ஆக்காமல் தங்கள் ஆரியத்தில் எழுதியதில் ஆரிய இனப் பெண்களை மணந்ததால், தாயின் மொழி வடமொழி யானதால் அம்மொழியே பயின்று வரும் ஆகமத்தைப் பொறுத்தவரை மந்திரங்களே முக்கிய நிலைப்பெற்றன. அது ஒலி அடிப்படையானது. பொருள் அடிப்படை அல்ல.

ஒலி அடிப்படையிலான மொழி ஆரியம், பொருள் அடிப்படையிலான மொழி தமிழ்.

அதன் அடிப்படையில் மந்திரங்கள் ஒரு சொல். எழுத்து, ஒரு வரி போன்றனவாம். அவ்வகையில் ஒலிக்கு முதன்மை தரும் வடமொழியில் ஆகமம் இருப்பது அது விளக்கவரும் பொருட் தன்மையைப் புரிய வைக்க மிகவும் ஏற்றதாக அமைந்த நிலையிலேயே, வடமொழியைப் பயன்படுத்தினர்.

அறிவியலை விளக்க நாம் ஆங்கிலத்தை இன்று தேர்வு செய்வது போல், அன்றுள்ளோர் வடமொழியை ஆன்மீக மொழி என்று கருதியதாலும், தமிழ் அனைவருக்கும் சிறந்த பொது மொழி என்பதாலும் ஆன்மீக கோட்பாட்டை விளக்க அம்மொழியைத் தேர்வு செய்தனர்.

# 10. ஆரிய திராவிட ஆதிசைவம்

ஆரிய திராவிட ஆதிசைவம் என்பது ஆதிசைவர்களால் ஆதார நூல்களாகக் கருதப்படும் ஆகமங்கள், உபாகமங்கள் சைவ சித்தாந்த சாத்திரங்கள் இவைகளையே குறிக்கும். இவைகளை ஆகமங்கள் என்று குறிக்காமல் ஆரிய திராவிட ஆதிசைவம் என்று குறிப்பிட காரணம், ஆரியர்களாக தீட்சை எடுத்துக் கொண்டபின் தமிழர்களால் ஆரிய முறையைப் பின்பற்றி வடமொழியில் செய்யப்பட்ட நூல்களே இவை என்பதைச் சுட்டும் நோக்கத்தோடேயே இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளது.

தொல்குடி பூசாரிகள் தமிழர்களோடு நல்லமுறையில் பழகிவந்த காலத்தில் சாதி வேறுபாடு அதிகமாக இல்லை. (நிலம் சார்ந்த பாகுபாடு மட்டும்தான் இருந்தது). அவர்களிடம் வர்ணவேறுபாடு சொல்லளவில் இருந்ததே ஒழிய மனதளவில் இல்லை (காதல் மணம் அனுமதிக்கப்பட்டது). அந்தணர்கள் வைசிய, சத்ரிய, வேளாளர் குலப் பெண்களைத் திருமணம் செய்யும் வழக்கம் இருந்தது. சான்றாக பெரியபுராணத்தில் குறிப்பிடப்படும் சுந்தரர் ஆதிசைவத்தைச் சார்ந்தவர். முதலில் அவருக்கு மணம் முடிக்க நினைத்தது தன் இனம் சார்ந்த பெண்ணையே. இறைவனால் தடுத்தாட்கொண்ட பிறகு பிற இனப் பெண்களையே அவர் மணந்து கொண்டார். அச்செயல் சமூகத்தில் அங்கீகரிக்கப்பட்டதாகவே இருந்தது. தமிழர்களால் விளக்கப்பட்ட தொல்குடி பூசாரிகள் அதனைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஊரோடு பழகி வந்தார்கள். சற்றே விலகி ஆரியர்களால் விளக்கப்பட்ட தன்னைப் போல் பாதிக்கப்பட்ட பிற பூசாரிகளுடன் முன் இருந்த நெருக்கத்தை வளப் படுத்திக் கொண்டனர் (ஆரியர்களைப் போல குழு மனப்பான்மை பெற்று).

ஆரியர்களின் பெண்ணை மணம் முடித்த போதிலும் ஆரியர்கள் இவர்களை முழுமையாக ஏற்கவில்லை. ஆரியர்கள் தன் மகளைத் தானமாகவே கொடுத்து விட்டதாக நினைத்து பிற தொடர்புகளைத் துண்டித்து விட்டனர். கன்னிகாதானம் (திருமணம்). தானம் கொடுத்த பொருளை மீண்டும் அடைவதோ சேர்ப்பதோ வழக்கம் இல்லை.

ஆரியர்கள் தங்களுக்குள் பகைமை ஏற்பட்டு தமிழர்களுக்குப் பெண் கொடுத்த ஆரியர்களை ஒதுக்கி விட்டனர். அவ்வாறு ஒதுக்கப்பட்ட ஆரியர்கள் ஐந்து கோத்திரத்தார் எனப்பட்டனர். ஆரியர்களுள் பல கோத்திரங்கள் இருந்த போதும் காசிப, கௌசிக, பரத்வாஜ கௌதம, அகத்தியர் என்ற "(கௌசிக - காச்யபச்சைவ பரத்வாஜோத கௌதம - அகஸ்த்யச்சைவ பஞ்சதே பஞ்ச் வத்ரேஷீ தீக்ஷிதா)" (ஞா.ப.242) ஐந்து கோத்திரத்தைக் கொண்ட ஆரியர்கள் தமிழர்களுக்குப் பெண் கொடுத்த காரணத்தால் பிற ஆரியர்களிடம் இருந்து முழுமையாய் விளக்கப்பட்டனர்.

அப்படி விளக்கப்பட்ட ஆரியர்களும் தமிழர்களால் விளக்கப்பட்ட தொல்குடி பூசாரிகளும் தங்களுக்குள் மணம் செய்து கொள்ளும் முறைமையை ஏற்படுத்தினர். அவ்வாறு தோன்றிய கலப்பினமே பின்நாளில் ஆதிசைவம் என வழங்கப்பட்டது.

ஆதிசைவம் படைத்த நூல்களே ஆகமங்கள். அவற்றைச் சுருக்கமாய் இனிக்காண்போம்.

ஆகமங்களில் குறிப்பிடப்படும் செய்திகள் சில சுருக்கி தமிழில் விளக்கப்படுகின்றன.

## முதற்குறிப்பு

தந்திரம் பற்றிய வரையறை, வகை, அது பகுக்கப்படும் விதம் -முக்கியமாக மந்திரங்கள் பற்றிய பொருள், பத்ததி, கல்பம், ஆகமங்கள், உபாகமங்கள் அவற்றை விளக்குவதில் உள்ள இடையூறு பொருள் கொள்ளும் வகை இவை பற்றி கூறப்பட்டுள்ளன.

பிற துறையில் உள்ளவர்கள் ஆகமங்கள் பற்றி அறிந்து கொள்ள நுழைவாயில் போலவும், பின்னர் விளக்கப்படும் கருத்துகளுக்குத் திறவுகோல் போலவும் பயன்படும்.

## தந்தரம் என்றால் என்ன?

தந்-என்ற சொல்லானது கீழ்க்கண்ட பொருளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

"சிவாகமம் தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசகலை என மூன்று கலைகளாகப் பிரிக்கப்பட்டு, தந்திரக்கலை சிவாலய நிர்மானம், விக்கிரஹ அமைப்பு முதலியவற்றையும், மந்திரக் கலையில் பிரதிஷ்டை பூஜை முதலியவற்றையும், உபதேசகலையில் சிவபெருமானோடு இரண்டறக் கலத்தற் கேதுவாகிய ஞானமார்கத்தினையும் கூறும். இம் மூன்று கலைகளும் சிவபெருமாளைப் பற்றியே கூறுதலின் சிவாகமம் சத்திநிபாதர்க்கு உரிய சிறப்பு நூல் எனப்பட்டது." [54]

இது மந்திரத்தைப் பயன்படுத்தும் முறையைச் சரியாக விளக்கும்.

"காமிகாமம் முதலாக வாதுளம் ஈறாக 28 ஆகமம்" [55]

"இக்காமிநாதி ஆகமங்களின் உபாகமங்களின் இருநூற்றேழு"

பரம்பரையாக பின்பற்றப்பட்டு வருவது. பரம்பரையில் முதலில் கேட்டவர் - பிரணவர் முதலாய 66 பேர்.

அப்பரம்பரையின் வழி தோன்றலால் ரகசியமாக பாதுகாக்கப்பட்டு வருவது.

பூசை முறையில் செய்ய வேண்டிய விதி முறைகளைக் கூறும் விளக்க முறை நெறிநூல்.

ஒரு மதத்தின் முக்கிய கொள்கை அல்லது சட்டம் என்று இதைக் கூறலாம்.

"சார பரமேஸ்வராலே துவக்கிச் சம்ப்ரதாய இடைவிடாமல் வருகிற படியால் பரசிவனாலே செய்யப்பட்ட ஆகமங்கள் முக்ய ப்ரமாணமென்பது சித்தம்"

தந்திர சாஸ்திரம் என்று ஒரு நூல் உள்ளது.

தந்திரம் என்பது ஒரு நூலின் சிறு பகுதிக்குச் சூட்டப்பட்ட பெயர்.

"நான்கு, ஐந்து, ஆறு தந்திரங்கள்" [56]

தந்திரம், ஆகமம், இவைகள் ஒரு பொருட் சொற்கள்.

ஆகமத்தைப் பொருத்தவரை அர்ச்சனை என்பதன் நாள் வகை பகுப்பில் ஒன்று (மந்திர, தந்திர, கிரியா, பாவனா, அர்ச்சனா).

இவ்வனைத்துச் சொற்களின்படி தந்திரத்தை நம் ஆய்வைப் பொருத்தவரை இவ்வாறு வரையறுக்கலாம்.

தந்திரம் என்பது பூசை முறைகளைக் கற்பிக்கும் முதல் நூல் என்ற வகையிலேயே விளக்கம் தரப்பட்டுள்ளது.[57]

தந்திரத்தின் பாகுபாடுகள்

சரியை

சரியை என்பது, ஆகமத்தைப் பொருத்தவரை விட்டுவிட வேண்டிய (அ) பின்பற்ற வேண்டிய புறக்காரணங்களில் இயக்கமற்ற செயல் என்பதைக் குறிப்பிடுகிறது. (உ.தா) உண்மையைப் பேசுவது,

பிறர் மனை விழையாமை, கள் உண்ணாமை இதுபோன்ற சில வகை பழக்கங்களைப் பின்பற்றுவதைப் பற்றி கூறுவது.

" சௌச லக்ஷனம் தந்த சுத்திக்ரமம் வாருணஸ் நாநகர்மம் ஸகவீகரணம்" [58]

கிரியை

கிரியை என்பது, புறக்காரணங்களைப் பயன்படுத்தி செய்ய வேண்டிய செயல்களைக் குறிப்பிடுகிறது. இங்கே இறைவனைக் குறித்தாவது (அ) இறைவன் என்று கருதப்படும் ப்ரதிமை குறித்தாவது செய்யப்படும் செயலையே குறிப்பிடுகிறது. (உ.தா.) இறைவனுக்கு மலர் மாலை இடுவது, ஆடை அணிவிப்பது.

தேவாரம்

திருக்கடையூர் தலப்பதிகம் 4ஆம் பாடல் அப்பர் தேவாரம்.

"பெரும்புலர் காலை மூழ்கி பித்தற்கு பக்தராகி அரும்பொடு மலர்கள் கொண்டு ஆங்கு ஆர்வத்தை உள்ளே வைத்து விரும்பி நல் விளக்குத் தூபம் விதியினால் இடவல்லாற்கு கரும் பினில் கட்டிப் போல்வார் கடவூர் வீரட்டனாரே. [59]

யோகம்

யோகம் என்பது, இயல்பாக நடைமுறையில் இருக்கும் மனநிலையில் இருந்து விளக்கி இறைவனை அடைவதற்கு உண்டான மனநிலையால் மாற்றி அமைக்கும் முயற்சியே ஆகும்.

மனிதனின் இயல்பு நிலை என்பது புலன் வழி வெளிப்புறம் நோக்கி செல்வது.

இறைநிலை என்பது மனிதன் தன் எண்ணங்களை அடக்கி உள்நோக்கி செல்வது.

"ப்ராணாயாமம் (ப்ராணாயாமம் என்பது யோகத்தின் 8 அங்கங்களில் ஒன்று) [60]

ஞானம்

ஞானம் என்பது சிவாகமங்களின் முடிந்த முடிவாய் கருதப்படும் விளக்கத்தை அனுபவத்தில் உணர முற்படுவதாகும். மேலும் முயன்று அறிவது, அடைவதாகும்.

சாதகன் தன்னிலையில் முயன்று அறிவதும் அடைவதுமாகும்.

"ஆராய்ச்சி அறிவால் அறியப்படுவது உண்மையுமாம். சிவாகமங்களில் ஓதப்படும் ஞானபதம் பொருளெல்லாவற்றையும் வடமொழிச் சிவஞான போதத்திற் கூறியவாறே தமிழினும் பொது உண்மையென இரண்டு அதிகாரங்களைக் கூறத் தொடங்கி முதற்கட் பொதுவதிகாரங் கூறுகின்றார்".

மந்திரம்

மந்திரம் என்பது, "மனநம்த்ராநம் இதி மந்திரம்" [61] என்ற சொல்லானது நினைத்தலையும், காத்தலையும் சேர்த்து குறிப்பிடும் ஒரு சொல்லாகும்.

*நினைத்தல் காத்தல் என்பது மந்திரம்*
*நினைத்தல் என்பது மந்திரம்*
*நினைத்தலைக் காத்தல் என்பது மந்திரம்*
*நினைப்பதனால் காக்கப்படுவது மந்திரம்*
*நினைப்பதற்காகவே காக்கப்படுவது மந்திரம்*
*நினைப்பதிலிருந்து காப்பது மந்திரம்*
*நினைத்ததன் கண் காக்கப்படுவது மந்திரம்*
*நினைத்தலுடைய மனத்தைக் காப்பது மந்திரம்*

*(உ.தா) நினைத்தல், காத்தல் என்பது மந்திரம்*

"மந்திரமில்லாத வழிபாடு பலன் தராது என்பது சிவாகமக் கருத்து, அம்மந்திரமும் சிவத்திற்தோன்றியதாகும். அதற்கு மனனம் செய்கின்றவர்களை உய்விக்கின்றதென்று பொருள் விரிக்கப்படுகிறது." [62]

நினைத்தல் என்பது மனத்தின் தொழில். அப்படி நினைத்தலைத் தொழிலாகக் கொண்ட மனத்தை காத்தல் என்பதாகும். இங்கே காத்தல் என்பது போர் வீரன் நாட்டைக் காக்கிறான். காவல்காரன் வீட்டைக் காக்கிறான். அதுபோல் இங்குக் காத்தல் என்ற தொழிலானது மனிதன் நினைத்தல் தன்மையை ஏதேனும் ஒன்றைக் குறித்த மாறுதல் அற்ற தினைவை நிலைநிறுத்துவது"

*''கொள்ளேன் மனத்தில் நின்கோலம் அல்லாது, அன்பர் கூட்டம் தன்னை*
*விள்ளேன், பரசமயம் விரும்பேன், வியன் மூவுலகுக்கு*
*உள்ளே, அனைத்திறனுக்கும் புறம்பே, உள்ளத்தே விளைந்த*
*கள்ளே! களிக்கும் களியே! அறிய என் கண்மணியே!*

*(அ.அ.பா.23)*

*நினைத்துகாத்தல் என்பது மந்தரம்*

மனது பிற நினைவுகளினின்று நீங்கி ஒரு நினைவைக் குறித்து இயக்குவது. (உ.தா) கால்பந்து ஆடும் ஒருவர், தன்னைச் சுற்றி வரும் யாரையும் பார்க்காமல் அந்தப் பந்தை உதைப்பதிலேயே கவனம்

செலுத்துகிறார். இந்த இடத்தில் கவனம் செலுத்துவது பற்றி குறிப்பிடவில்லை. பிற எண்ணங்களின்று நீங்குகிறதைப் பற்றியே குறிப்பிடப்படுகிறது. அப்படி ஒரு நினைவை வைத்து பிற எண்ணங்களை நீக்குவது மந்திரம்.

*"சஞ்சலம் ஹிமந க்ருஷ்ண ப்ரமாதி பலவத்ருட:*
*தஸ்யாஹம் நிக்ரஹம் மத்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்"* [ல]

நினைத்ததைக் காத்தல் என்பது மந்தரம்

நினைக்கின்ற எண்ணத்தைச் சிதைவுப்படாமல் காத்தல் (உ.தா.) ஒரு மனிதன் தான் மாவட்ட ஆட்சியராக வேண்டும் என்று நினைக்கிறான். ஆனால், அவனுடைய தகுதி மற்றும் பொருளாதாரம் இவையெல்லாம் தடுக்கிறது. என்றாலும் தன் முயற்சியை நிலைநிறுத்தி தன் எண்ணத்தை முடிக்கும்வரை பிடிவாதமாக இருப்பது வரை அவனிடத்தில் காணப்படுகிற அழுத்தம்தான் மந்திரம் என்று கூறப்படுகிறது.

*பாட வேண்டும் நான் போற்றி நின்னையே பாடிநைந்து*
*நைந்துருகி நெக்குநெக்*
*காட வேண்டு நான் போற்றியம்பலத் தாடுநின் கழற்போது*
*நாயினேன்*
*கூடவேண்டு நான் போற்றியிப்புமுக் கூடுநீக்கெனைப்*
*போற்றி பொய்யெல்லாம்*
*வீட வேண்டு நான் போற்றி*
*வீடுதந் தருள போற்றிநின் மெய்யர்மெய்யனே*
*நினைப்பதனால் காக்கப்படுவது மந்தரம் (தி.100)*

*சென்னியது உன் பொன் திருவடித்தாமரை, சிந்தையுள்ளே மன்னியது உன் திருமந்திரம், சிந்துரவண்ணப் பெண்ணே! முன்னிய நின் அடியாருடன் கூடி, முறைமுறையே பன்னியது என்றும் உன்றன் பரம ஆகம பத்ததியே! (அ.அ.6)*

நினைப்பதினாலேயே காப்பாற்றுகிறத் தன்மையைக் கொண்டது. மந்திரத்தை மறந்தால் காப்பாற்றும் தன்மை அதற்கு இல்லை (உ.தா)

மந்திரத்தைச் சொன்னால் பலன் தரும், இந்த மந்திரத்திற்கு இந்தப் பலன் என்று குறிப்பிடப்பட்டிருப்பதால், அதைச் சொல்லாதவன் அதை அடைய முடியாது என்று உறுதியாகிறது. (உ.தா) அருத்தா பத்தி நியாயம்)

*அருத்தாபத்திப் பிராமாணமாவது ★*
*பொருட்குறிப்புடையது, (உ.தா.)*

பகலுண்ணான் பருத்திருக்கின்றான்
என்றவிடத்து, பருத்திருத்தல் உண்ணாது
சம்பவியாது எண்ணுங் குறிப்பைக் கொண்டு
இரவிலுண்பானென்று கொள்ளுதலாம்" 64

நினைப்பதற்காகவே காக்கப்படுகிறது

ஒரு மந்திரம் (அ) ஒரு த்யானம் இவைகளை முறைப்படி கூற வேண்டும் என்று கூறியிருப்பதால், இவை நினைப்பதற்காகவே உருவாக்கப்பட்ட சாதனங்களாக ஆகம, வேத, மற்றும் புராணம் இவைகளில் உள்ளது.

"தேவாதீனம் நரானாம்ச்யேஷ்ரம்யதா சிரம்
மநாஸிச் ப்ரஸ்ததி ப்ராஸாதேஸ்தே: (ஆ.ஆ.ப.78)

நினைப்பதிலிருந்து காப்பது

ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒவ்வொரு த்யானம் போன்றவை உள்ளதால் அந்த த்யானத்தை செய்தால் தான் அதில் குறிப்பிட்ட பலன் கிடைக்கும். ஒரு நினைவிலிருந்து தான் அது நம்மை காக்கிறது. அது அந்தப் பலனைக் கொடுக்கிறது. (உதா) ஒருவன் செய்த தீமையை நினைப்பதால் அவரிடம் வெறுப்பும், ஒருவன் செய்த நன்மையை நினைப்பதால் அவரிடம் நட்பும் கிடைப்பது போல் நினைப்பதிலிருந்து காப்பாற்றப்படுவது மந்திரம்.

"தேவா ஹவை ப்ரஜாபதப்ரவிந்நாத கை மாந்த்ரைர்தேவ

ஸ்துதம் ப்ரிதோ பவதி ஸ்வாத்மாநம்" 65

நினைத்ததால் (நினைப்பில்) காக்கப்படுவது மந்திரம்

ஒரு நினைவைத் தொடர்ந்து நினைப்பதானாலே அது காக்கப்படுகிறது. (உ.தா) தற்போது நாம் காணும் தீ மிதிப்பு போன்றவற்றில் இறை தன்மையால் அது சுடாது என்று நினைப்பில் இருப்பதாலேயே அது சுடாமல் இருப்பது போல் இருபேது மந்திரம்.

இமாம் ப்ரம்ம வித்யாம் அமாவாஸ்யாம்

படேத்தச்ருணுயாத்வா யாவஜ்ஜிவிதம் நஹிம்ஸந்தி சர்ப்பா 66

நினைத்தருடைய மனத்தை காப்பது மந்திரம்

"ஆசைக்கடலில் அகப்பட்டு, அருளற்ற அந்த கன்கைப்
பாசத்தில் அல்லல்பட இருந்தேனை, நின்பாதம் என்னும்
வாசக்கமலம் தலைமேல் வலியவைத்து ஆண்டு கொண்ட
நேசத்தை என் சொல்லுவேன்? ஈசர் பாகத்து நேரிழையே"

நினைத்தல் தொழிலையுடைய மனத்தை கவலை, துக்கம், அந்தர் சத்ருக்களாகிய காம, க்ரோத, லோப, மோக, மத, மாச்ர்ய இவைகளினால் ஏற்படக்கூடிய பீடிப்பிலிருந்து காப்பது அதாவது, அஹிம்ஸா, இந்திரிய, நிக்ரஹம், சத்யம், ஞானம், தபஸ், பாவக்ஷமா, இவைகளை ஏற்படுத்தி மனத்தை நடுநிலையாக ஆக்கி உள்ளத்தை காத்தலினால் மந்திரம்.

*தந்திரம்*

தந்திரம் என்பது பூசை செய்ய வேண்டிய முறையைத் தெளிவுர வகுத்து கூறுவது. இது வடமொழி செய்யுள் வடிவில் உள்ளது. பொதுவாக ஆகமங்கள் அனைத்துமே தந்திரம் என்று அழைக்கப்படும் என்றாலும் தந்திரம் என்னும் வகையின் அந்தச் சொல்லை விளக்க வேண்டும். ஆயினும் செய்முறைக்கான தோற்றமே ஆகும். பூசை விளக்க நூலுக்கு "ப்ரயோக சந்திரிகா" என்று பெயரிட்டுள்ளதால் நன்கு அறியலாம்.

இக்காமிகாதி ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு. இவ்வாகமங்களெல்லாம் வேதசாரமாயுள்ளன வென்பது மேற்கூறியவற்றால் நன்கு புலப்படும். இவாகமங்களேயன்றி வேதபாகியமான வாமாதியாகமங்களும் உள. அவ்வாகமங்கள் தான் தாந்தரீகம் என்று ஒதுக்கப்படுகின்றன.

*கிரியா*

கிரியா என்பது பொதுவாக செயல் என்றாலும் ஆகமத்தைப் பொருத்த வரையில் கர்மேந்திரங்களை (கை, கால், வசன, தொழில்) பயன்படுத்தி செய்ய வேண்டியதை கிரியை என்று அழைக்கிறோம்.

"தகஷி னாங்குஷ்டாஞா மிகாப்யாம் விந்யாஸி" [67]

*கர்ஷனம்*

கர்ஷனம் என்பது வெட்டவெளியில் ஆரம்பித்து ஒரு கோயில் கட்டி கும்பாபிஷேகம் செய்ததற்குத் தயார் நிலையில் ஒப்படைக்கும் வரை ஆலயம் சார்ந்த இறை உருவ மற்றும் ஆலய அமைப்பு பற்றி தெளிவுர விளக்கும் ஆகம பகுதி. இதை, பெரும்பாலும் சிற்பி பயன்படுத்துகிறார். இதை விளக்கும் ஆகம பகுதிக்கு கர்ஷனம் என்று பெயர்.

"கர்ஷனா திப்ரதிஷ்டாந்தம்" [68]

சிற்ப சாஸ்திரப்படியும் வைகானஸ ஆகமப்படியும் 96 விதமான விமான பேதங்கள் உண்டு. சிவாகப்படி 64 சதவித

விமானங்களும் பாஞ்சராத்ர ஆகமப்படி 48 வித விமானங்களும் (ஆலய மேல்தள கட்டுமான அமைப்பு) உள்ளன. சில ஆகம விமானங்களுக்கு சாஸ்திரங்களில் இலக்கணம் கூறப்பட்டுள்ளன". [69]

ப்ரிதிஷ்டை

கும்பாபிஷேகம் (கர்ஷணத்தை தொடர்ந்து) முதல் மண்டலாபிஷேகம் முடியும் வரை ஆலயத்தில் நிர்மாணிக்கப்பட்ட இறை திருவுருவங்களில் இறைவனை (மந்திரங்களால்) எழுந்தருள செய்வது. இதை விளக்கும் ஆகம பகுதிக்கு ப்ரிதிஷ்டை என்று பெயர்.

"விநாயக ப்ரிதிஷ்டை விநாயகரை ஸ்தாபித்தால் எனப் பொருள் (ப்ரிதிஷ்டை ஸ்தாபித்தல்) அதாவது, ஆசிரியர் உத்தேசித்த விடத்தில் விநாயகனை இருக்கச் செய்து வேண்டியவர்கள் வேண்டிய வண்ணம் பலனைத் தரச் செய்தல் தீக்ஷையுற்று சகல சித்திகளையடைந்த சிவாசாரியர் தமக்கு கைவந்தவாறே தம்மையடைந்தோரும் பலனெய்தும் படி பரார்தத்தில் குறித்த உருவத்தில் மந்திரரோச்சாரண வழியாய்க்குண்ட மண்டல வேதிகைகளால் தெய்வத் தன்மையுண்டாக்கல். இது சமய நெறியாதலால் தக்க தேசிகர் பாலாராய்ச்யுற்றுத் தெளிக"

கட, சேஷ்டாயாம், ஆர்வத்துடன் இயங்க முயல" [70]

உற்சவம்

மண்டலா அபிஷேகம் முடிந்தவுடன் அடுத்த கும்பாபிஷேகம் வரை தினசரி செய்ய வேண்டிய பூசை முறைகளைச் செய்வது (Maintenance) உற்சவம் என்று பெயர். இதை விளக்கும் ஆகம பகுதிக்கு உற்சவம் என்று பெயர்.

"உற்சவம் என்பது உத்தமமாகும் எனவும், மேலான பஞ்ச கிருத்தியம் எனவும், ஸ்ருஷ்டிமார்கத்தைக் குறிப்பது எனவும், போகமோக்ஷங்களைக் கொடுப்பது எனப் பொருள்படும்" [71]

பிராய்சித்தம்

மேற்கண்ட கர்ஷணம், ப்ரிதிஷ்டை, உற்சவம் முதலியவற்றில் ஏற்படும் தவறுகளை சரி செய்வது பிராயசித்தம் என்று பெயர். இதை விளக்கும் ஆகம பகுதிக்குப் பிராயசித்தம் என்று பெயர்.

சிவபேதம்

மனிதன் வாழும்போது அடைய வேண்டிய செல்வங்களைப் பெறுவது மையப்படுத்தி இறையருள் பெறுவது குறித்து விளக்கப்பட்டிருக்கும்.

பூர்வ பப்பத்து, மறுபடியும் பதினெட்டு என்றது. பிராணவர்; முதலிய சிவன் பதின்மருக்குப் பத்து ஆகமங்களும், மகாருத்திரர்

முதலிய உருத்திரர். பதினென்மருக்குப் பத்து பதினெட்டாகமங்களும் சிவபெருமான் அனுக்கிரகம் செய்த முறையைப் பற்றியே அன்றிப் பிரிவதில்லை." [72]

ருத்ரபேதம்

மனிதன் இறந்தவுடன் நரகத்தை விளக்கி மோக்ஷம் இவைகளை அடைவது பற்றி சிறப்பாக விளக்குவது.

பின்னுமந்தச் சவிபட்டாரகாலலே அநாதிருத்ரர் முதலான ஈஸ்வர தத்வத்திலிருக்கும், ருத்ரா; பதினெட்டுப் பெயர்களையும் ஞானவான்களாகச் செய்து சொல்லப்பட்ட சரியாபாம் பதினெட்டாகமங்களும் அபரங்களான ருத்ரபேதங்ளெனப் படும்" [73]

உபாகமங்கள்

உபாகமங்கள் என்பது ஆகமத்தைச் சார்ந்து ஏதேனும் ஒரு தேவதையே குறித்து உற்சவம், ப்ரதிஷ்டை; பிராய்சித்தம், கர்ஷனம் இந்த நான்கு அங்கங்களைக் கூறுவது. ஆகமங்கள் எல்லா தேவதைகளைப் பற்றி கூறும், உபாகமங்கள் ஏதேனும் ஒரு தேவதையை குறித்து மட்டும் கூறும்.

உபாகமங்கள் நான்கு அங்கங்களின் ஏதேனும் ஒன்று குறைவு பட இருக்கலாம்.

"இக்காமிகாதி ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு. இவ்வாகமங்களெல்லாம் வேதசாரமாயுள்ளன என்பது மேற்கூறிய வற்றால் நன்கு புலப்படும்".

பத்ததி என்பது ஆகமங்களைச் சார்ந்து ப்ரிதிஷ்டை, உற்சவம், ப்ராய்சித்தம், கர்ஷணம் இவைகளைக் குறித்து செயல்முறை வடிவில் விளக்கியிருக்கும்.

செய்யுள் வடிவில் இருக்கும் மூலாகமம் மற்றும் உபாகமங்களில் சம்பு (உரைநடையும் செய்யுரும் கலந்த வடிவம்) வடிவில் அமைத்து செயலாக்கத்திற்குத் தக்கவாறு முறைப்படுத்தி விளக்கியிருக்கும்.

மேலும், உபாகமங்கள் மற்றும் சில ஆகமங்களில் காணப்படாத பகுதிகளை ஆகமங்களைச் சார்ந்து விளக்கி பூர்ணமாக முடிக்கப்பட்டிருக்கும். (உ.தா) இது பாடத்தில் காணப்படும் பொருளடக்கம் போல ஒரு தேவைதைக்கான கர்ஷன, உற்சவ, பிரிதிஷ்டை, பிராயசித்தம், இவைகளில் செயலாக்கத்திற்குக் தக்கவாறு வரிசைப் படுத்தி தொகுத்து இருக்கும்.

"சரியை முதலிய மூன்றுவிதப் பொருள்களை ஆராயும் நூல்களாவன - சோமசம்புபத்ததி.

உயர் சிவஞானபோத மென்றதனால், அப்பத்ததிகளின் மேற்பட்டது சிவஞானபேதம் என்பது பெறப்படவே, அந்நூல்கள் உணர்ந்த பின்னன் இந்நூல் கேட்கவேண்டுமென்பது பெறப்பட்டது. முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன் பின்னர்ச் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதங்களை ஆராயும் பத்ததிகளை முறையே கேட்டு அவ்வாறோதி மனத்திராய் நித்த அரித்தப் பொருள்களின் உணர்வு தோன்றி அநித்தப்பொருள்களின் சம்பந்தமான பிறவிக்கு அஞ்சி நித்தப்பொருளின் சம்பந்தமான முத்தியைப் பெறுவதற்கு விருப்பமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு"

கல்பம்

கல்பம் என்பது ஒரு தேவதையைக் குறித்து பிரிதிஷ்டை (அ) உற்சவம் இவைகளில் ஏதேனும் ஒன்று பற்றி விளக்கமாய் செய்யுள் வடிவில் மூலாகமம் சார்ந்து விளக்கப்படும் முறையாகும். இது ஆகமத்தைச் சார்ந்து இருந்தாலும் சில ஊர்களில் காணப்படும் வேறு ஊர்களில் காணப்படாத தனித்தன்மை கொண்ட தேவதைகளுக்குச் செய்யப்படும் ஆராதனை குறித்ததாய் இருக்கும்.

"ம்ருத்யுஞ்ஜய கல்பம்" [74]

வழிபடு தியானம் செய்வதற்கும் ஏற்ற வகையில் சிறந்த பல பாக்களைக் கொண்டதாக இயற்றப்பட்டிருக்கிறது.

சில கல்பங்களின் பெயர்கள்

(இவற்றின் எண்ணிக்கைகளைச் சரிவர குறிப்பிடவில்லை)

அகோர கல்பம்
ம்ருத்யுஞ்ஜய கல்பம்
ஆகாச பைரவர் கல்பம்
பஞ்சாக்ஷர கல்பம்
பைரவ கல்பம்

## ஆகமங்கள் மற்றும் உபாகமங்களின் பெயர்கள்

| எண் | மூலாகமம் | எண் | உபாகமம் |
|---|---|---|---|
| 1. | காமிகம் | 3 | வக்தாரம், பைரவோத்தரம் நாரசிம்மம் |
| 2. | யோகஜம் | 5 | தாரம், வீணாசிகோத்திரம், ஆத்மயோகம், சந்தம், சந்ததி |
| 3. | சிந்தியம் | 6 | சிந்தியம், ஸீபகம், வாமம், பாபநாசம், பரோத்பவம், அம்ருதம் |
| 4. | காரணம் | 7 | காரணம், த்வேஷ்டம், பாவனம், மாரனம், தௌர்கம், மஹேந்திரம், பீமம் |
| 5. | அஜிதம் | 4 | பிரபூதம், ப்ரோத்பூதம், பார்வதீஸ் மஹிதை, பத்மஸம் ஹிதை |
| 6. | தீப்தம் | 9 | அமேயம், சப்தம், ஆச்சாத்தியம், அஸங்கியம், அமிதோஜஸம், ஆனந்தம், மாதவோத்பூதம், அற்புதம், அகஷதம் |
| 7. | சூட்சுமம் | 1 | சூட்சுமம் |
| 8. | சகஸ்ரம் | 10 | அதீதம், அங்களம், சுத்தம், அப்ரமேயம், ஜாதிபாக்பிரபுத்தம், விபுதம், ஹஸ்தம், அலங்காரம் ஸ்போதம் |
| 9. | அம்சுமான் | 12 | வித்யாபுரணம், தந்திரம், வாசவம், நீலலோகிதம், பிரகாரணம், பூததந்திரம், ஆத்மாலங்காரம், காசியபம், ஜந்திரம், பிராமம், வாசிட்டம், ஈசானோத்தரம் |
| 10. | சுப்ரபேதம்; | 1 | சுப்ரபேதம் |
| 11. | விஜயம் | 8 | உற்சவம், சௌமியம், அகோரம், ம்ருத்யுநாசனம், குபேரம், மகாகோரம், விமலம், விஜயம் |
| 12. | நிசுவாசம் | 8 | நிசுவாசம், நிசுவாசோத்திரம், நிசுவாச முகோதயம், நிசுவாசநயனம், நிசுவாச காரிகை, நிசுவாசகோரம், நிசுவாசகுய் யமாக்யம் |
| 13. | சுவாயம்புவம் | 3 | பிரஜாபதிமதம், பதுமம், ஸ்வாயம்புவம் |
| 14. | ஆக்னேயம் | 1 | ஆக்னேயம் |
| 15. | வீரம் | 13 | பிரஸ்தாரம், புல்லம், அமலம், பிரபோதம், அமோகம், மோகசமயம், ஹாகடம், சாகடாதிகம், பத்ரம், விலாகன்னி வீரம், ஹலம், போதகம் |

| | | | |
|---|---|---|---|
| 16. | ரௌரவம் | 6 | காலக்னம், காலாதீதம், ரௌரவம், ரௌவோத்திரம், மகாகாலமதம், ஐந்திரம் |
| 17 | மகுடம் | 2 | மகுடம், மகுடோத்திரம் |
| 18. | விமலம் | 16 | அனந்தம், போகம், ஆக்ராந்தம், வ்ருஷ்பிங்கம், வீருஷோத்பூதம், ரௌத்திரம், சுத்தம், தாரணம், ஆரேவதம் அதிக்கிராந்தம், அட்டகாசம், பத்ரவிரதம் அர்ச்சிதம், பத்ரவிதம், அலீ;ச்சிதம், அலங்கிருதம், விமலம் |
| 19. | சந்திரஜ்ஞானம் | 14 | ஸ்திரம், ஸ்தானு, மகாந்தம், வாருணம், நந்திகேசுவரம், ஏகபாதபுராணம், சங்கரம், நீலருத்ரகம், சிவபத்ரம், கல்பபேதம், ஸீமுகம், சிவசாசனம், சிவசேகரம், தேவீதம் |
| 20. | முகபிம்மம் | 15 | சதுர்முகம், சமஸ்த்தோபம், பிரதிபிம்மம், அயோகம் |
| 21. | புரோத்கீதம் | 16 | வாராகம், கவசம், பாசபந்தம், பிங்கலா மதம், அங்குசம், தண்டதரம், தனுதரம், சிவஞானம், விக்ஞானம், ஜீகாலக்ஞானம், ஆயுர்வேதம், தனூர்வேதம், சர்பத்ருஷ்டிரீ விபோதனம், கீதம், பரதம், ஆதோத்தியம். |
| 22. | லலிதம் | 3 | லலிதம், லலிதோத்திரம், கௌமாரம் |
| 23. | சித்தம் | 4 | சாரோத்திரம், ஔனோத்தரம், சாலாபேதம், சகிகண்டம் |
| 24 | சந்தானம் | 7 | லிங்காத்யஷம், சுகராத்யகஷம், அமரேசு வரம், சங்கரம், அசங்கியம், அநிலம், துவந்தம் |
| 25. | சர்வோக்தம் | 5 | சிவதருமோத்திரம், வாயுப்ரோக்தம், திவ்யப் ரோகதம், ஈசானம், சருவோற்கீதம் |
| 26. | பாரமேசுவரம் | 7 | மதங்கம், யட்சணிபதுமம், பாரமேசுவரம், புஷ்கரம், சுப்ரயோகம், ஹம்சம், சாமானியம் |
| 27. | கிராணம் | 9 | காருடம், நைருதம், நீலம், இருட்சம், பானுகம், தேனுகம், காலாக்யம், பிரபுத்தம், புத்தம் |
| 28. | வாதுளம் | 12 | வாதுளம், வாதுளோத்தரம், காலக்ஞானம், ப்ரோத்தம், சர்வம், தர்மாத்மகம், நித்தியம், சிரேட்டம், சுத்தம், மகானனம், விசுவம், விச்வான்மகன் |

## திருமந்திரத்தில் (தொகுதி 1)

| எண் | பத்ததி | எண் | பத்ததி |
|---|---|---|---|
| 1. | துர்வாசர் | 10 | ஞானசிவர் |
| 2. | பைங்களார் | 11 | சோமசம்பு |
| 3. | உக்ரஜோதி | 12 | பிரம்மசம்பு |
| 4. | சரீகண்டர் | 13 | திர்ரிலோசனசிவர் |
| 5. | விஷ்ணுகண்டர் | 14 | அகோரசிவர் |
| 6. | சுபோதர் | 15 | வருணசிவர் |
| 7. | வித்யாகண்டர் | 16 | பிராசாதசிவர் |
| 8. | இராகண்டர் | 17 | இராமநாதசிவர் |
| 9. | ஞானசங்கர் | 18 | ஈசானசிவர் |

தந்திரங்களைப் பற்றி சைவ சித்தாந்தம் நெறிநூல் என்ற வகையில் சைவ சித்தாந்தத்தில் குறிப்பிடப்படும் சில நூல்கள் (வடமொழி)

| | | |
|---|---|---|
| 1 | வேதம் | அருமறை, ஆகமம், அங்கம், ப.ப.5(228) |
| 2 | ஆகமம் | மேலது |
| 3 | வேதாங்கம் (6) | அருங்கலை நூல் தெரிந்த, ப.ப. 5 (228) |
| 4 | 64 கலை | கலைஞான விரும்ப சபை, சு.ப. 293 (ப.597) |
| 5 | உபதேசம் | ஆரணம் மறியா விழுப்பொருள் ப.ப.57 (253) |
| 6 | லோகாயதம் | இந்திர புரோகிதன் இயம்பும் ஒரு நூலில் ப.ப.12 (233) |
| 7 | வேதாந்தம் | வேத சிரமப்பொருளை மிகத் தெளிந்தும் சு.ப. 293 (570) |
| 8 | பாஞ்ச்சாராத்ரம் | வழுவிலாகமங்கள் மாதவன் நாதளாவான் ப.ப.65 (259) |
| 9 | திரிபீடகம் | உயிர்கள் முக்தி அடையப் பின்னாகப் பிடக நூல் உரைத்தார். ப.ப. 102 (279) |
| 10 | ஜைமினிதந்திரம் | சேமாங் கன்மஞ் செய்யச் சைமினி செப்பும் நூலின் ப.ப. 181 (326) |
| 11 | பாட்டாசாச்யம் | பரிந்து பிரபாகரன் பட்டாசானில் வேறாகிப் பரிந்துரை செய் நெறியதனை ப.ப. 204 (238) |
| 12 | சாங்க்யம் | காலவென்று நிரீசவற சாங்கியம் தான் சாற்றி ப.ப. 260 (370) |
| 13 | சாக்தஆகமம் | |

| | | |
|---|---|---|
| 14 | சைவ ஆகமம் | அறுவகைச் மயத்தோர்க்கும் அவ்வவர் |
| 15 | வைண ஆகமம் | பொருளாய் வேறாம குறியது வுடைத்தாய் |
| 16 | கௌமார ஆகமம் | வேதாகமங்களின் குறியிறந்தங்கு சு.ப. 2(395) |
| 17 | குமார தந்திரம் | |
| 18 | கணேச தந்திரம் | |
| 19 | புராணம் | சிறப்புடைய புராணங்கள் உணர்த்தும் ச.ப.263 (570) |
| 20 | தர்க்கம் | தர்கமமும் விடையமும் கற்க ச.நி. 45 (ப.1249) |
| 21 | யோகம் | யோகங்களெங்கே உணர்வெங்தே தி.க. ப.5 (718) |
| 22. | சூத்திரம் | தெரிந்த குரு முதல்வர் உயர் சிவஞான போதம் செப்பினார் சி.பி. 11 (804) |
| 23. | ஸ்ம்ருதி | வேதசாத்திரம், மிருதி, புராணகலை, ஞானம், விரும்ப சபை வைகரி யாதித்திரங்கள் சு.ப.293 (ப.597) |

தென்மொழி

1. திருவுந்தியார்
2. திருக்களிற்றுப்படியார்
3. சிவஞானபோதம்
4. சிவஞான சித்தியார் (பரபக்கம், சுபக்கம்)
5. இருபா இருபது
6. உண்மை விளக்கம்
7. சிவப்பிரகாசம்
8. திருவருட்பயன்
9. வினாவெண்பா
10. போற்றிபஃறொடை
11. கொடிக்கவி
12. நெஞ்சுவிடுதூது
13. உண்மை நெறி விளக்கம்
14. சங்கற்ப நிராகரணம்

# 11. தமிழகமும் தமிழும், ஆதிசைவமும்

வார்சான்ற கூந்தல் வரப்புயர வைகலும்
நீர் சான்று யரவே நெல்லுயருந்-சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்களுஞ்சீர்க் கோவுயரும்
ஓவா(து) உரைக்கும் உலகு [75]

என்ற பாடல் வரிகளுக்கு ஏற்ப வரப்பைப் போன்றிருக்கும் ஆதிசைவன் தன் ஒழுக்கத்தினாலும், இறையருளினாலும், மக்கள் மீது கொண்ட அன்பினாலும் தன்னை வளர்த்துக் கொண்டான்.

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்" (குறள். 131)

"வேதம் ஓதும் அந்தணர்க்கு ஒரு மழை
கற்புடைய மாந்தர்க்கு ஒரு மழை"

தொல்குடியோர் மேற்கண்ட குறள்களுக்கு இணங்க தன் ஒழுக்கத்தைத் தானே தவத்தினாலும் (வழுவாமை) இறையருளினாலும் வளர்த்துக் கொண்டனர்.

அவ்வாறு வளர்த்துக் கொள்ளுதல் என்பது செயல்களால் ஆலயத்தை வளர்த்தது. அந்த ஆலயமானது அறம், கலை, பண்பாடு முதலானவற்றையும் வளர்த்தது. குடிமக்களின் வளர்ச்சியே அரசனையும்-உயர்வுற செய்தது. தொல்குடியாக இருந்த தமிழன் தன் யாக்கைக்குரிய பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வழிகளாய் தவத்தை மேற்கொண்டான். அந்தத் தவமானது சிவமாய் மலர்ந்தது (அர்ச்சகஸ்ய சிவஸ்சாக்சாஸ், பூசிப்பவனே சிவன்)

ஆலயமானது தன் அமைப்பின் வழியாய் பல கலைஞர்களைத் தோற்றுவித்தது. ஓவியக்கலை, சிற்பக்கலை, கட்டிடக்கலை, நாட்டியக்கலை, இசைக்கலை இவையனைத்தும் ஆலயம் சார்ந்த படைப்பாகவே இருந்தன. அரசன் சார்ந்த அரண்மனைகளாகக் கூட அதிகம் அமையவில்லை. கலை உணர்வு உள்ளத்தின் உணர்வுகளைச் சரியாக இறைவனைக் குறித்து செலுத்தும் வகையில் செம்மையுற்றிருந்தது. இன்று போல் கலைகள் தனித்து வளர்வது போல் அன்று இல்லை. ஆலயத்தைச் சார்ந்து அறம் சார்ந்த படைப்புகளைப் பயிற்றுவிப்பதாகவே இருந்தது. புராண மண்டபம்[76] ஆலயங்களில் புராணம், இதிகாசம் போன்ற காப்பியங்கள் பற்றிய

செய்திகள் சொற்பொழிவாக வெளிக் கொணரப்பட்டன. ஆலயமணியோசை அதைச் சார்ந்த மக்களின் கால கடிகாரமாகவும் செயல்பட்டது. ஆலய மணியோசையின் வேறுபாட்டைக் கொண்டு பிறப்பு, இறப்பு, அரசன் வருகை, நீதிமன்ற அழைப்பு, அபாய அழைப்பு போன்றவை அறியப்படுவதனால் சமூகத்தின் அனைத்துதர மக்களையும் ஒருங்கிணைக்கும் செயலை அது செய்து இருக்கிறது என்பது அறியப்படுகிறது (திருச்செந்தூர் முதல் பாஞ்சாலக்குறிச்சி வரை இடையிடையே உள்ள மணித்தலம்).

பஞ்ச காலங்களின்போதும், போர்க்காலங்களின் போதும், இயற்கை பேரழிவுகளிலும் மக்களுக்கு அபயம் அளிக்கும் இடமாக ஆலயங்கள் விளங்கின. அன்றைய மக்களின் பொழுது போக்குகளையும், கேளிக்கைகளையும், விழாக்களின் அங்கங்களாக அளவோடு, அறத்தோடு நடைமுறைப்படுத்தின. ஆலயம் சார்ந்த பலதரப்பட்ட பணிகளுக்கும் படி நிலை ஊழியர்களை குருக்கள், வேதியர், பௌராணிகள், தேவநங்கை, மெய்க்காப்பாளர் இதுபோன்று அமர்த்தி நிர்வாகமாகவும் ஆலயங்கள் செயல்பட்டன. அன்றைய வேலைவாய்ப்பு அலுவலகமாகவும் ஆலயங்கள் திகழ்ந்தன. ஆலயம் சார்ந்த நீதிமன்றங்கள் குற்றங்களையும் காவல் நிலையமாகவும் செயல்பட்டன.

அரசாங்க பொருட்களஞ்சியமாகவும் செயல்பட்டன. வரிப் பணம், தானியம், இறைவனுக்கு அணிவிக்கும் ஆபரணங்கள், உடைகள், பொருட்கள் போன்றன) அரசர்கள் போர்க்காலங்களில் பதுங்கி இருப்பதற்காகவும், சொந்த சொத்துக்களைச் சேர்த்து வைக்கும் இடமாகவும் ஆலயங்களில் அரசாங்கங்கள் பயன்படுத்தப்பட்டன. (உ.தா. திரு.அனந்தபுரம் பத்மநாபசுவாமி கோயில் சுரங்கத்தில் பல கோடிமதிப்பிலான பொருள்கள், பொன் போன்றவை தற்போது கண்டுபிடிக்கப்பட்டது).

இல்லறம் விட்ட மெய்த்தவத்தார்க்கு ஆலயங்கள் இல்லமாக செயல்பட்டன. வழிப் போக்கர்களுக்குத் தங்கி செல்லும் மண்டபங்களும் ஆலயம் சார்ந்தே அமைக்கப்பட்டன.

அரசர்களின் வெற்றிகளைப் பறைசாற்றும் இடங்களாகவும் ஆலயங்கள் திகழ்ந்தன.

தீராப்பிணி தீர்க்கும் மருத்துவ மனைகளாகவும் ஆலயங்கள் திகழ்ந்தன (விஷக்கடி, தொழுநோய்கள், பைத்தியம்). அறிவு வளர்க்கும் குருகுலமாகவும் நிகழ்ந்தன.

தொல்குடியினரால் பாதுகாக்கப்பட்ட
நிலைப்படுத்தப்பட்ட கலாச்சாரம்

ஓவியம், சிற்பம், இசை, நாட்டியம், இந்தத் துறையில் உள்ளவர்களுக்கு ஆலயம் வாய்ப்பு அளித்ததோடு, தொடர்ந்து

அவர்களுக்குப் பயன்படும் வகையில், நிலங்கள், மானியங்கள் கொடுத்து அம்மரபினரை இன்றுவரை பாதுகாத்த பெருமை 'பரம்பரை' என்ற பெயரில் தொல்குடியினருக்கே ("வழி வழி அடிமை செய்து") உரியதாகிறது.

தற்போது நடக்கும் மனித சடங்குகளை முறைப்படுத்தி நிலைப்படுத்தி இதை இப்படித்தான் என்ற ஒழுங்குமுறை விதிகளைக் காரண காரிய அடிப்படையில் ஆலயமே வகுத்தளித்தது.

எல்லா நிலங்களும், இறைவனுக்கு என்ற பெயரில் தனி மனிதர்கள் பலரை ஒரு தலைக்கீழ் கட்டுப்பட்டு, கட்டுக்கோப்பாக சமுதாய வழி நடத்தலை, வேலை, பொருளாதார, சமூகத் தேவை அடிப்படையில் பாகுபடுத்தி அமைத்ததும், ஒரு துறையை ஒருவரிடத்து ஒப்படைத்து, அந்த வாய்ப்பினை அவர்களுக்கே அளித்ததன் மூலம் அதைப் பயிற்சியால் செம்மையுறச் செய்ததும், தொடர்ந்து நிலைப்படுத்தி காத்துத் தந்ததும், ஒரு துறைப் பற்றிய ஆழமான அறிவைப் பெறுவதற்கும், அது தொடர்பான சிக்கல்களுக்குத் தீர்வு காணவும் செய்தது ஆலயம்.

கட்டப்பட்ட கோயில், வரையறுக்கப்பட்ட ஓவியம், சேமித்து வைக்கப்பட்ட "முறை" என்னும் வகையிலான தகவல்கள் இவை அனைத்தையும் கெட்டுவிடாமல் தொடர்ந்து பராமரித்து வந்தது ஆலயமே.

கட்டியவன் அழிந்தாலும், அரண்மனை அழிந்தாலும், அக்கால சூழலும், சமுதாயமும் கட்டழிந்தபின் நமக்கு ஆலயங்கள் அழியாது காத்தபல செல்வங்கள், தொல்லியல் பயன்படுத்தும் அனைத்துமே, சுடுகாடு வரை (பிணத்தைப் பக்குவப்படுத்தும் முறை) தொல்குடியினரால் சேகரிக்கப்பட்டதை நன்கறியும்,

தனி மனிதனின் பிறப்பு இறப்பு சடங்காகட்டும், சமுதாய ஒருங்கிணைந்த வளர்ச்சியாகட்டும், அரசனின் நிர்வாகம் ஆகட்டும், சட்டமாகட்டும், பொதுவில் ஒரு இடையூராகட்டும், எல்லா விதத்திலும் அந்தணர்கள் இருப்பதை மறுக்க முடியாது.

ஒரு தனி மனிதனால் தொடர்ந்து செய்ய முடியாதது அரசனால் தொடர்ந்து நிலை நாட்ட முடியாதது சட்டத்தால் கூட காப்பாற்ற முடியாத அனைத்தையும் "பரம்பரை" என்ற பெயரால் "வழக்கம்" என்ற பெயரால், "இறைவன்" என்ற பெயரால் காப்பாற்றித் தந்தது தொல்குடியே.

கொள்கையர்களாலும், காலச்சீரழிவுகளாலும் கூட சிதைந்து விடாமல், புதையல்களாய், புதைப்பொருள்களாய், இறைத்திரு உருவங்களாய், தற்போது கிடைக்கும் சிலைகள் போன்றவையும் களவுக்கு அஞ்சி அரசர்களின் மிரட்டல்களுக்கு அஞ்சி அந்த

ஆதிசைவர்களால் போடப்பட்ட தாகும். பூமிக்கு அடியிலும், சுரங்கத்திலும் இரகசியம் என்று காப்பாற்றினார்கள் தொல்குடிகள்.

தன் இனத்தாரால் தனக்கு இடையூறு ஏற்பட்டபோதும், பிற மதங்களால் தாம் தாக்குண்ட போதிலும், பிற மொழிகளும், கலைச் சுரங்கங்களும் நம்மைத் தாக்கிய போதிலும், இன்றைய தொல்லியல் செய்யும் வேலையை அன்றே "மரபு" என்ற பெயரால் தொடர்ந்து நிலை நிறுத்தியது தொல்குடியே.

3000 ஆண்டு பழமையான மந்திரங்களை, அதன் வடிவங்களை, சிதைந்து விடாமல், செம்மைப்படுத்தி தந்தது தொல்குடி.

தனி மனிதனின் வாழ்வு சாராமல் சமூகத்தின் வாழ்வுக்கே "மதிப்பிறக்கே" "கௌரவத்திற்கே" என்று வாழ்ந்ததால்தான் அவர்கள் இனம் "குருக்கள்" "கௌரவிக்கப்பட்டவர்கள்" என்ற பொருளில் ஆசாரியன் என்னும் வாழ்ந்து பாடம் ஆனவன் என்பதால் "ஆசாரியன்" என்றும்

பிறருக்காக தொழுதவன், பிறரால் தொழப்பட்டவன் என்கின்ற பெயரில் "தொழுகுலத்தோர்" என்றெல்லாம் அகராதிகள் அவர்களைக் குறிப்பிடும் சொற்களைக் கொண்டே பிறர்க்காக. அவன் வாழ்ந்த வாழ்க்கையை அறியலாம்.

தமிழ் மக்களுக்கும் தமிழ் நாட்டுக்கும், தொண்டு செய்த, தொல்குடியினர் "தமிழுக்கும்" செய்த தொண்டுகள் ஏராளம்.

தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, கீழ்க்கணக்கு, மேல்கணக்கு நூல்களையெல்லாம் ஓலையில் எழுதிவைத்தும், அவை சிதைந்த போது மீண்டும் சீர்ப்படுத்தியும் ஆலய அறைகளில் பாதுகாத்து வைத்ததும் தொல்குடியே.

ஆதிசைவத்தின் நால்வகைப் பிரிவில் வீரசைவம் என்ற பிரிவில் உள்ளவர்கள் "பண்டாரங்கள்" எனப்பட்டனர். இவர்களால் தமிழ் படைப்பு அனைத்தும் பாதுகாக்கப்பட அதனால், இவர்களின் பெயரே "களஞ்சியம்" என்ற பொருளானது. இவர்கள் "ஆதினம்" என்ற பெயரில் பொதுமக்களுக்குச் சேரவேண்டிய செல்வங்களைப் பாதுகாத்து வந்தனர் (ஆலய சொத்துக்களை).

"ஸ்ரீலஸ்ரீ" என்ற முன்பட்டமானது எந்த அளவிற்கு இவர்கள் கற்றார்கள் என்ற அளவிற்குச் சூட்டும் பட்டமே என அறிக. "ஸ்ரீலஸ்ரீ" "லட்சம்" படித்தவர்கள் எனப்பட்டனர். இவர்கள் தான் அறத்தைச் சொற்பொழிவாய் பிறர் கேட்கும் வழிச் செய்து வந்தனர். மஹா மஹா உபாத்யாய உ.வே.ச. திருவாவடுதுறை ஆதீன வித்வானிடம் தான் படித்தார்; என்பதைத் தமிழுலகம் நினைவு கூறும். தமிழில் திருமுறை, ஆழ்வார்கள், இராமாயண, மகாபாரத, பிள்ளைத்தமிழ் வரை மதம் சார்ந்த படைப்புகளே குறிப்பாக ஆதிசைவப் பிரிவில்

அடங்குபவையே என சொல்லலாம். தஞ்சை ஆலயமும், ஆவுடையார் கோயில் கலைப்படைப்புகளும் திருமலை நாயக்கர் மண்டபமும்" அன்று முதல் இன்றுவரை தனிமனித இல்லமல்ல. ஆதிசைவ ஆலயங்களே. இதற்குக் காரணம் தொல்குடிகளே என்க.

அன்று முதல் இன்றுவரை தனிமனிதனை வளர்க்காமல் சமூகத்திற்காக நிலையான படைப்புகளாக விளங்குவது ஆலயமே. அதற்குக் காரணமானவர்கள் தொல்குடிகளே.

1. கூரம் செப்பேடு கி.பி. 9ஆம் நூற்றாண்டு. பூசை நீராட்டுதல், புஸ்பம், சந்தனம், தூபம், தீபம், அவிஸ், உபசாரம், பலி, தூபம் என்ற ஆதிசைவர்களின் செயல்கள் குறிப்பிடப்படுகிறது.

2. திருவாரூர் கல்வெட்டு ஆதிசைவர்களைக் கோத்திரத்தால் அடையாளம் கண்டு கொள்வது மற்றும் நிலைபெயராமல் இருப்பவர்கள் என்பது-

''ஜனனி பவதோ ஞானசிவாச்சாரியார்
குலே அவது சைவே கௌதம கேத்ரேஸ்மின்
ஞான்யா ரவ்யே கமலா புரி

3. கீரனூர் சாக்கிய கூத்து 253/1978 கீரனூர் 1022 AD பிற வேதியர்களில் இருந்து தன்னைப் பிரித்துக் காண்பிக்க சிவவேதியர் என்று குறிப்பிடப்படுகிறது.

''சிவ பிராம்மணான் னார்பத் தெண்ணாபிர பிடாரங்கு''

ஆதிசைவர்கள் மடம் வைத்து நடத்தினார்கள் என்பதை

''மடமுடைய ஆதித்தன்னி மள ஸிவனான
நாற்றபத்தெண்ணாயிர விடா ருள்ளிட்ட தேவகன்மி
கள்ளிருந்து''

4. திருக்கொட்டாரம் கல்வெட்டு

இறையிலி நிலத்தைக் கொண்டவன்

''கானி யுடையான்''

5. நீரூர் கல்வெட்டு புராணம் வாசிப்பவன் சிவச்சாரியன்.

''புராணநூல் விரிக்கும் புரிசை மாளிகை
சிவதர்மம் வாசிப்பான் ஒருவனுக்கு
நெல் அறுபதிங் கலத்துக்கு விட்டநிலம்''

6. குர்கோடு கல்வெட்டு

சிவாச்சாரியார்கள் வடமொழி தென்மொழி இருமொழிப் புலமைப் பெற்றவர்கள் என்பதை,

''வடமொழியார் சிவதரும வண்பெயராக மந்திலூரிய
பொருள் செந்தமிழாற் தொடுத்த உடைவகுத்தே''

## தொல்பொருள் ஆராய்ச்சியில் ஆதிசைவர்

முதலாம் ராஜராஜ சோழனுக்கு முன் சோழநாட்டில் வித்யா நந்த சிவம் என்ற ஒரு சிவாச்சாரியார் இருந்தார். அவர் சிறப்புகளைக் கேட்டு காசிதேசத்து மன்னர் அவரைத் தன் குருவாக ஏற்றுக்கொண்டு அங்கு வரவழைத்துச் சிறப்பு செய்திருக்கிறார். அவர் சொற்படிக் கேட்டு நாட்டை ஆண்டிருக்கிறார் என வரலாற்றில் இருந்து அறிகிறோம் (ப.77)

பெரியபுராணத்தில் கூறப்படும் புகழ்த்துணை நாயனார், சுந்தரர், அருள்நந்தி சிவம் திருவிளையாடல் புராணம் தருமி, திருத்தொண்டர் தொகையில் கூறப்படும் ''முப்போதும் திருமேனி தீண்டுவார்'', கந்தப்புராண கச்சியப்ப சிவாச்சாரியார் போன்றவர்கள் பக்தி இலக்கியத்தோடு தொடர்புடைய சிவாச்சாரியர் என இலக்கியச் சான்றுகள் கூறுகின்றன.

## ஆதிசைவ தொல் தமிழன்

பொதுவாக அந்தணர்கள் தங்களைப் பிற அந்தணர்களிடம் அறிமுகம் செய்து கொள்ள தற்போதைய (வாக்காளர் அட்டை) அடையாள அட்டையை போல 'பிரவரம்' என்ற ஒன்றைக் கூறி அடுத்தவர்களை வணங்குவார்கள். அந்தப் பிரவரத்தில் அந்த இனத்தினருக்கே உரிய தனி அடையத்தைச் சுட்டும், கோத்திரம், சூத்திரம் பெயர், மடம், வணங்கும் ஐவகைச் சிவம் இவைகளைப் பற்றிய தெளிவான தகவல் அமைந்திருக்கும் அவ்வகைத் தகவலில் அவர்களின் மடத்தைக் குறிப்பிடும்போது,

| கோத்திரம் | சிவத்தின் பெயர் | மடமுடைய இடம் |
|---|---|---|
| முல்லை-கௌசிக- | ஈசான | மந்தான காலீச-கடைவிடத் தன்னல் (நஞ்சங்கூடு) |
| நெய்தல் காசியப | தத்புருஷ | அமர்த்தகி-உத்தரகோசமங்கை |
| குறிஞ்சி பரத்வாஜ | அகோர | புஸ்பகிரி-செங்கண்ணூர் (கேரளா) |
| பாலை கௌதம | வாமதே | கௌலகி காஞ்சிபுரம் |
| மருதம் அகஸ்திய | சத்யோஜாத | ரனபத்ர வழூலூர் |

என்பவை சுட்டப்படுகின்றன.

இவையனைத்துமே சிவபிராமணர்களாகவும் தமிழகத்தைச் சார்ந்த நிலப்பகுதிகளாகவும் இடம் பெயராதவன் தொல்குடி என்பதனாலும் தமிழ் தொல்குடியே ஆதிசைவன் என்று அறியலாம்.

# 12. தொகுத்ததும் வகுத்ததும்

1. ஆதிசைவம் என்பது ஆலயம் கட்டப்பட்டு, சமூகத்திற்காக ஒருவனை வழிபாடு செய்ய உருவாக்கி வளர்ந்த நிலையிலேயே சூட்டப்பட்ட பெயர்.

2. தமிழ்த் தொல்குடிகளே ஆரிய முறையைப் பின்பற்றத் துவங்கியது முதல் ஆதிசைவர் எனப்பட்டனர்.

3. தமிழர்களின் தொன்மையான பழக்க வழக்கமும் ஆரியனிடத்தில் உள்ள தமிழில் இல்லாத ஆனால் தமிழர்களுக்குத் தேவையான நன்மைகளை மட்டுமே பின்பற்றி ஆகமம் என்பது தொகுக்கப் பட்டது.

4. ஆகமம் என்பது ஆதிசைவரின் அடிப்படை நூல்.

5. ஆகமமானது தமிழ்ப்பண்பாட்டை ஆரிய முறையில் தொகுக்கப்பட்ட வடமொழியில் உள்ள தமிழ் க்ரந்த எழுத்துக்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட தமிழர் படைப்பு.

6. ஆலயங்கள் பரம்பரை என்ற பெயரில் முக்காலத்தும் நன்மை தருபவை; அதில் பின்பற்றப்படும் சில செயல்களை மாற்றல் கூடாது; அதை அப்படியே பின்பற்றல் நலம்.

7. திரௌபதி, மாரி, காளி, ஐயனார், முருகன், திருமால், இந்திரன், வருணன், கொற்றவை போன்ற தெய்வங்களின் ஆலயங்கள் அனைத்தும் - பள்ளிப்படைக் கோயில்கள், குலதெய்வங்கள் என்று இன்று மக்கள் மத்தியில் உள்ள அனைத்து தேவதைகளுக்கும் சில சமாதி கோயில்களுக்கும் தமிழ் வழிபாடே சிறந்தது.

8. மொழியைப் பொருத்தவரை அந்த தெய்வம் உருவாக்கப்பட்ட நாள் முதல் எந்த மொழிமுறை பின் பற்றப்பட்டதோ அதுவே சிறப்பு.

9. காலம் சார்ந்து ஆலய வழிபாடுகள் சில மரம், செங்கல், கருங்கல் கோயில் என படிநிலை வளர்ச்சி பெற்றாலும் அதில் உள்ள இறைக்கொள்கை மற்றும் வடிவ அமைப்பு முழுவதும் மாறாதிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆகமம் அறிதல்

1. முதலில் ஆகமத்தை அனைவருக்கும் தெரியும் வகையில் தமிழாக்கம் செய்து அதன் கொள்கைகளைப் புரியவைக்க வேண்டும்.

2. ஆலயத்தில் பரைம்பரையாகப் பின்பற்றப்பட்டு வரும் தமிழ் அல்லது வடமொழி முறைகளைத் தொகுத்து வகுத்து வழங்க வகை செய்ய வேண்டும்.

3. எல்லோரும் எப்போதும் இறையை நினைப்பதைவிட, எல்லோர் பொருட்டும் ஒருவன் ஆள்வதைப் போல், வழிபடவும் வேண்டுவது சிறப்பான பலனை அடைய வழிவகுக்கும்.

4. கடவுளைப்பற்றிய கோட்பாடுகளைக் காரணகாரிய அடிப்படையில், மொழி அடிப்படையில் வேறுபல சட்ட அடிப்படையில் அனுகாது, ஆன்மீகம் குறிப்பிடும் தன்மையிலேயே அணுகவேண்டும். (உ.தா.) ஒரு நாட்டியக் காரியின் நடனத்தைக் கண்டு அபிநயம் நன்று, முத்திரைகள் அழகு, உடையழகு பாடல் இசைக்குத்தக்க அசைவழகு என்பதைவிட்டு அவள் அழகு என்பது கூறுவது போல் தீமை செய்யும்.

5. ஆன்மீகவாதிகள் ஒழுக்கவாதிகளாக இருந்தால் மட்டுமே மதிப்பு தர வேண்டும்.

6. ஆகம மொழி பெயர்ப்புகளால் இன்று இருக்கும் கணினி முதல், முதலில் தோன்றிய கல்பாசிவரை தெளிவாக, பல அறிய அறிவியல் தகவல்கள் கிடைக்கும்.

7. மனது அமைதியுற யோகம் போன்ற தகவல் பயன்படும்.

8. ஆரோக்கியத்தை அறம் (ஆசாரம்) தரும்

9. ஆன்ம விடுதலை கிடைக்கும்.

10. சமூகம் சார்ந்த ஒற்றுமையை வளர்ப்பதே சமயம் அன்றி, இன்றுள்ள மதப்பூசல், சாதிப்பூசல், மொழிப்பூசல் இவை உண்மையான ஆகமத்தில் இல்லை என்பதைத் தெளிவுபடுத்தும்.

நலம் பெருக்கும் சிவம்

சுபம்

## கலைச் சொல் விளக்கம்

இதன்கீழ் கொடுக்கப்படும் சொற்கள் அனைத்திற்கும் நேரடியாக அகராதியில் உள்ளது போல் பொருள் புரிந்து கொள்ளக் கூடாது.

சகலீகரணம் என்ற சொல்றிற்கு வடமொழி அகராதியின்படி உறுப்புக்களை உருவாக்கல் என்பது பொருள்.

கலைச் சொல்லின்படி உடல் உறுப்புகளில் மந்திரங்களை பதிப்பிக்கும் செயலை சூட்டுகிற சொல்லாகப் பயன்படுத்தப் படுகிறது.

பரம்பரையாக குறிப்பிட்ட பொருளில் அல்லது சூழலில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

பஞ்சாச்சரம் என்பது ஐந்து எழுத்து என்பதை மட்டுமே குறிப்பிடுகிறது.

பரம்பரையாக அது நமச்சிவாய என்பதையே குறிக்கும்.

சில சொற்காள் சாத்திரங்களில் பயன்படுதத்ப்படும் கருவி மொழியாகவும் தனியே விளக்கப்பட்டுள்ளது.

குரு என்பது ஆசானைக் குறிக்கப் பயன்படும் பொதுச் சொல்எல்லாம் கைவரப் பெற்றவனும் பாவத்தை அழிப்பவனும் தோன்றா நிலையில் இருப்பவனும் ஆகிய மூன்று தன்மைகளை உடையவனை குரு என்று அழைப்பர்.

''க'' காரச் சித்தித ப்ரோக்தம்

ரேப பாபச்ய நாசனம்

''உ'' காரம் விச்னுரவ்யக்தம்

குருநித்யபிதீயதே - சாத்திரப்பொருள்

சில சொற்கள் தமிழில் காணும் மரபு வழுக்களைப் போல் உள்ளது (குயில் கத்தும் - குயில் கூவும்)

''நமசிவய'' இது மந்திரம் ஆனால் யநமசிவ, வயநமசி என்றெல்லாம் பயன்படுத்தப்படுகிறது. இவைகள் பொருள் தராவிடினும் மந்திரமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

ஒரே சொல் ஒவ்வொரு மதத்திலும் வெவ்வேறு விதமாய் வரையறுத்து விளக்கப்படுகிறது.

அத்வைத சாத்திரத்தில் ''மாயா'' என்பதற்கு மாறுவது என்பது பொருள்.

சித்தாந்த சாத்திரத்தில் ''உயிரற்றப் பொருள்''

அகராதியில் - ''ஒரு பொருள் வேறொரு பொருள் போலத் தோன்றுவது''.

1. தீக்ஷிக்கப்பட்டவர்

தீட்சை என்பது ஒருவரிடத்து உள்ள ஆற்றலை வேறு ஒருவருக்கு ஒரு சில வினாடிகளில் மாற்றுவது.

ஆலயங்களில் வழிபாடு செய்பவர் புதிதாக வழிபாடு செய்ய வருபவருக்கு இவ்விதமான முறையில் வழிபாடு செய்யும் முறையை உணர்த்துகிறார்கள். தீட்சை கொடுப்பவர் குரு என்றும் பெறுபவர் சீடன் என்றும் கூறப்படுகிறார். இதைப் பெற்ற பிறகே வழிபாடு செய்ய அனுமதியளிக்கிறது ஆகமம்.

2. ஆவரணம்

சிவனைச் சூழ்ந்துள்ள 40க்கும் மேற்பட்ட தேவதைகளை குறிப்பிடும் சொல். சிவனை சுற்றி எட்டு திசை. மேல், கீழ் இப்பகுதியில் சூழ்ந்துள்ள தேவதைகளைக் குறிக்கும்.

3. ஆவாஹனம்

சிற்பியினால் செதுக்கப்பட்டுள்ள சிலையில் இறைத் தன்மையை ஏற்படுத்துகிற செயல்.

4. சன்யாசம்

திருமணம் ஆகாத ஒருவன் நான் கடவுள் என்று சொல்லுகிற வேதாந்தம் என்ற நெறியைப் பின்பற்றுகிற துறவு முறைக்கு சன்யாசம் என்று பெயர்.

5. உபவாசம்

இல்லற வாழ்க்கையை முழுமையாக நன்கு வாழ்ந்து 60 வயதிற்குப் பிறகு சுற்றம் சூழலைத் துறந்து தம்பதியர் மட்டும் மேற்கொள்ளும் தவவாழ்க்கை.

6. யக்ஞகர்மம்

காட்டில் தவவாழ்க்கை மேற்கொண்ட (உபவாசம்) தம்பதியர் பிறர் பொருட்டு உயிர்பலியிட்டு செய்யப்படும் வேள்வியைக் குறிக்கும்.

7. தீர்த்த யாத்ரானுகமணம்

உபவாசத்தை மேற்கொள்ளும் தம்பதியருள் யாரேனும் ஒருவர் இறந்து விட்டால், ''மனைவியை இழந்தவன் புனித தலங்களைக் குறித்து செய்யும் யாத்திரை - தீர்த்தயாத்தரா''

கணவனை இழந்த மனைவியானவள் மீண்டும் வீட்டிற்கு செல்லாமல் ஊருக்குள் உள்ள ஆலயத்தில் தொண்டு செய்பவள்- அனுகமணா)

8. விஞ்ஞானகலர், ப்ரளயகலர், சகலர்

ஆதிசைவ கொள்கையின்படி சமயநெறியில் உயிரினங்களை ஆன்மா (உயிர்) என்று குறிப்பிடுவர். அந்த ஆன்மாவிற்கு

ஆணவம், கன்மம், மாயா என்ற மூன்று வகை மலம் உளது. அம்மலம் நீங்கினால் அதுவே சிவமாகும்.

ஆணவம், கண்மம், மாயா - சகலர்

மூன்றும் உடையார்

ஆணவம், கண்மம் - விஞ்ஞானகலர்

மாயா - ப்ரளயகலர்

9. ரஹச்யமாக

பிறர் காணும்படி வெளிப்படையாக தன் செயல்களை செய்யாத ஆண்மிக நடவடிக்கைகளை மட்டும் குறிப்பிடும் சொல்.

10. கைவல்யம்

ஆதிசைவத்தைப் பொறுத்தவரை இந்த சொல்லானது நடு இரவுப் பொழுதில் ஆலய அர்ச்சகர்கள் தனிமையாக பூசைக்கான புறப்பொருள்கள் ஏதுமின்றி புறஒழுக்கம் (குளித்தல், திருநீரு அணிதல் இத்தூய்மை முதலிய) ஏதுமின்றி எண்ணத்தினால் மட்டுமே செய்யப்படும் செயலாகும்.

11. சாமாண்யம்

சைவர்கள் மேற்கொள்ளும் துறவுநெறி வகைப்பாடுகள் இக்கலைசொற்கள் சூட்டப்படுகின்றன. (ஆதிசைவத்தைப் பொறுத்தவரை அனைத்து துறவிகளுக்கும் உண்டான அனைவருக்கும் தெரிந்த பொதுவான என்றப் பொருளில் பயன்படுத்தப்படுகிறது. துறவு நெறியை சூட்டுகிறது.

விஷேசம்

சைவசித்தாந்த துறவிகள் இருவரில் ஒருவருக்கானது அனைவருக்கும்யின்றி சிலருக்கு மட்டும் சிறப்பித்து சொல்லபபடுகிற நெறிமுறைகளை குறிக்கும்.

நிராஹாரம்

சைவம் குறிப்பிடும் துறவு நெறியில் மிக உயர்வான சைவத்துறவு நெறிகளில் முதன்மையாக போற்றப்படுகிற இந்நெறியாளர்கள் உண்ணும் உணவின் அளவை வைத்தே 'நிராஹாரம்' எனப் பெயர்ச் சூட்டப்பட்டிருக்கிறது. இத்துறவை மேற்கொண்ட துறவிவகள் அம்மாவாசை அன்று முழுவதுமாய் உண்ணாமல் இருந்து அதற்கு அடுத்த நாள் துவங்கி ஒவ்வொரு வளர்பிறைக்கும்-பிறதமா, திதியா போன்ற திதிகளை மையமாக கொண்டு ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு பிடி (உருண்டை) வீதம் அதிகபடுத்தி வளர்பிறையிலும் குறைவுப்படுத்தியும் தேய்ப்பிறையிலும் உண்பர். அவர்களைக் குறிப்பிடுவது.

11. லக்ஷணம்

வரையறை, இலக்கணம் என்ற பொருளில் பயன்படுத்தப் படுகிறது.

12. அபிஷேகம்

இறைவனுக்கோ, குரு சீடனுக்கு உபதேசிக்கும் பொழுது செய்யப்படும் புனித நீராட்டலை அபிஷேகம் என்று சொல்லப்படும்.

13. ஸ்தாபிக்க

இறைவனைக் குறித்து ஆலயங்களில் வைக்கப்பட்டிருக்கும் சிற்பியினால் செய்யப்பட்ட சிறைத் திருவுருவத்தில் நுட்பமான முறையில் இறைத்தன்மையை நிலைநிருத்தும் செயலை (பூசையின் ஒருவகையை) அறிவுருத்தும் சொல்.

14. பிரானனில்

பிராணன் என்கிற சொல்லானது உடலில் உயிரை ஒட்டுவிக்கும் தன்மைகொண்ட காற்றை குறிப்பிடும் சொல்.

15. மையஸ்தானமே

நடுநிலையில் என்கிற பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

16. சாதகன்

ஆன்மிக நெறியில் செயல்முறைப்பயிற்சி யாளனைக் குறிக்கும் சொல்.

17. வானப்பிரஸ்த

உபவாசம் மேற்கொண்ட கணவன், மனைவியுடன் காட்டில் பின்பற்றும் தவநெறியைக் குறிக்கிறது.

18. சத்திநிபாதர்

இறைஞானத்தை அடைவதற்கு உண்டான அடிப்படை பக்குவத்தை உடைய தன்மையைக் குறிக்கிறது.

பலியெனும் சொல்லானது சைவம், அசைவம் என்று இருவகைப்படும். சைவம் என்பது உருண்டையாக பிடிக்கப்பட்ட வெறும் சாதம். அசைவத்தை பொருத்தவரை பலி என்ற சொல்லானது. இறைனின் பொருட்டு கோவிலில் வைக்கப்பட்டு, வணங்கப்படும் கொலைக் கருவிகளைக் கொண்டு (பூசையில் வைத்து வழிபடும் கத்தி அருவாள், ஈட்டி) ஆடு, மாடு, கோழி இவைகளை இறைவனுக்காக வெட்டிபடைப்பது.

# குறிப்புகள்

1. சந்தியா நடராஜன், மதுரைத் தமிழ்ப் பேரகராதி (முதல்பாகம்) SG. Monier-Williams M.A., KCE Sanskrit-English Dictionary. ப.933, ப.1074 என்.ஸ்ரீனிவாசன், அமரகோசம், முதல் தொகுதி, ப.34.
2. மா.வே. நெல்லையப்ப பிள்ளை, பி.ஏ. உமாபதி சிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை, ப.1.
3. சுப்ரமணிய சாஸ்திரி K.S. (No.87) Saraswathiya Chithrakarma Sastram, ப.162.
4. இராமானுஜ தாததாசாரியார் Yaskar Nirukla and Nighantha (Series No.150), ப.162, பகுதி-2.
5. என். ஸ்ரீநிவாசன், அமரகோசம், தொகுதி-I. ப.34.
6. வரதராஜன், திருமந்திரம் (சுந்தரர்), ப.234.
7. சிவஞான சுவாமிகள், சிவஞானமாபாடியம், ப.LIXIV.
8. பொ. முத்தையா பிள்ளை, சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், ப.93.
9. புலவரேறு, ந.ரா. முருகவேல், சிவஞான போத பெதளி பொருள் சுருக்கம், ப.8.
10. திருவியலூர் உய்யவந்ததேவர் முதலாய எழுவர், மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் திருவருட்பயன், ப.1122.
11. சி. அருணை வடிவேலு முதலியார், முப்பொருள் இயல்பு, ப.54.
12. கோமதி சூர்யமூர்த்தி, முப்பொருள் விளக்கம், ப.33.
13. திருவியலூர் உய்யவந்ததேவர் முதலாய எழுவர், மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் திருவருட்பயன், ப.953.
14. திருவியலூர் உய்யவந்த தேவர் முதலாய எழுவர், மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் சித்தாந்த சாத்திரம் பதினான்கு, ப.38.
15. மெய்கண்டர், சிவஞாபாடியம், ப. xiv.
16. மம்மடர், காவிய ப்ரகாசம், ப.16.
17. அண்ணா, ஸ்ரீருத்ரம், ப.113.
18. TNOU, தமிழக வரலாறும் பண்பாடும், ப.255.
19. முனைவர் தமிழண்ணல், புறநானூறு (விளக்கவுரை), ப.36.
20. மேலது, ப.38.

21. மேலது, ப.39.
22. மேலது, ப.41.
23. மேலது, ப.42.
24. மேலது, ப.43.
25. மேலது, ப.44.
26. மேலது, ப.56.
27. மேலது, ப.63.
28. மேலது, ப.70.
29. மேலது, ப.72.
30. மேலது, ப.73.
31. மேலது, ப.73.
32. மேலது, ப.74.
33. மேலது, ப. 74.
34. மேலது, ப.75.
35. டாக்டர் உ.வே.சா. குறுந்தொகை, ப.xxxv.
36. சுவாமிநாத சிவாச்சாரியார், காமிகாகமம், தந்தராவதாரவிதிப் படலம், ப.3-32.
37. எஸ். சம்பந்த சிவாச்சாரியார், வாமதேவ பத்ததி, ப.13.
38. சுவாமிநாத குருக்கள், ஆசீர்வாதம், ப.4.
39. விச்வநாத சிவாச்சாரியார், ப்ரயோக சந்திரிகா, ப.267.
40. குமாரஸ்வாமி குருக்கள், சிவலிங்க ப்ரதிஷ்டாவிதி, ப.390.
41. தேவநாதாச்சாரியார், சிற்பரத்நம், ப.93.
42. சுவாமிநாத குருக்கள், ஆசீர்வாதம், ப.15.
43. விஸ்வநாத சிவாச்சாரியார், உத்ரகாமிகாகமம், ப.492.
44. மேலது, ப.193.
45. மேலது, ப.194.
46. மேலது, ப.236.
47. மேலது, ப.236.
48. மேலது, ப.441.
49. மேலது, ப.4.
50. மேலது, ப.5.
51. விஸ்வநாதசிவாச்சாரியார், உத்ரகாமிகாகமம், ப.52.
52. பூர்வகாரணாகமம், ப.241.

53. தமிழக வரலாறும் பண்பாடும், ப.40.
54. முத்தையா பிள்ளை, பொ. சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம், ப.20.
55. பூசை அருணவசந்தன், ச.சிவமஞ்சரி, தொகுதி-6, பக்.880-881,
56. வரதராஜன், ஜி. திருமந்திரம், தொகுதி-2, ப.1.
57. முத்தையாபிள்ளை, பொ.சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், ப.201.
58. காஞ்சி அருணாசல குருக்கள், க்ரியாகர்மத்யோதிகை, ப.7.
59. ஜி.ச.முரளி, பன்னிரு திருமுறை (நான்கு), ப.736.
60. விஸ்வநாதன் சிவாச்சாரியார், வை. சிவாகாம ப்ரயோக சந்திரிகா, ப.2.
61. மந்திர கங்கரகம், ப.4.
62. மேலது, ப.4.
63. ஸ்ரீமத் பகவத்கீதா, 6வது அத்தியாயம், 34வது ஸ்லோகம், ப.420.
64. முத்தையாபிள்ளை, பொ.சிவஞான போதச் சிற்றுரை விளக்கம்,ப்ராமாணவியல் 2ம் சூத்திரம், முதலாம் அதிகரணம்.
65. என்.லலிதாம்பாள், ஆலயங்களும் ஆகமங்களும், ப.72.
66. அண்ணா, 108 உபநிஷத்ஸாரம், மூன்றாம் பாகம், ப.411.
67. சுவாமிநாத சிவாச்சாரியார், ஸ்ரீ கணேசாலய, பராத்த ஆலய நித்ய பூஜா விதி, ப.2.
68. வேத சுப்பிரமணியர் கையேடு, ப.16.
69. என்.லலிதாம்பாள், ஆலயங்களும் ஆகமங்களும், ப.60.
70. Pandit Sivadha Dadhimatha . N.M. தாதுமாலா, ப.43.
71 குமாரசுவாமி குருக்கள், மகோற்சவ விளக்கம், ப.25.
72. முத்தையாபிள்ளை, பொ.சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம், ப.21.
73. மேலது, ப.8.
74. பா. இராஜசேகர், மிருத்யுஞ்சய பூஜா விதி கல்பம், ப.93.
75. காரியாசான், சிறுபஞ்சமூலம், பா.46.
76. வேதசுப்ரமணியர் கையேடு, ஆகமவசனம், ப.18.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–1) | 135.00 |
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–2) | 140.00 |
| திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் | 135.00 |
| பாணர் இனவரைவியல் | 110.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| உதயணகுமாரகாவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள் | 50.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–1) | 175.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–2) | 200.00 |
| விடுதலைச் சிந்தனையாளர் வ.உ.சிதம்பரனார் தமிழியல் பண்புகள் | 80.00 |
| சுவடிப்பதிப்பு முன்னோடிகள் | 60.00 |
| திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | 75.00 |
| பெரியாரிய நோக்கில் மு.வ. | 55.00 |
| திணை வரலாறு | 70.00 |
| நரம்புக் கருவிகள் | 70.00 |
| மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் பன்முக ஆளுமை | 50.00 |
| சிந்தனைச்சிற்பி ம.சிங்காரவேலரும் தந்தைபெரியாரும் | 105.00 |
| பெ.நா.அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள்–தொகுதி–3 | 235.00 |
| கவிஞர் புதுவைச் சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | 120.00 |
| சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு | 105.00 |
| சேக்கிழாரும் இசைத்தமிழும் | 50.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| உலகச் செம்மொழிகள் | 90.00 |
| தலித் அறம் | 45.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் | 45.00 |
| ஆய்வியல் சிந்தனை | 45,00 |
| சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் | 80.00 |
| பெயரியல் | 55.00 |
| மதங்களும் மனிதநேயமும் | 90.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் | 85.00 |
| சிலப்பதிகார இலக்கியக் கூட்டமைப்பு | 160.00 |
| பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதார சிந்தனைகள் | 65.00 |
| தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |

---

**747 ஆதி சைவம்** **70.00**